



1875

தி கடாவ் மில்ஸ்

**75**

வருஷங்களாக
ஒரே அதிகாரத்
தின் கீழ்

1950





கடாவ்

வாயில்

தி கடாவ் மில்ஸ், பைகுலா, பம்பாய் 27. ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்டு பியர், பம்பாய். சில்லரைக்கடை: மூல்ஜி ஜேதா மார்க்கெட், கோவிந்த் சௌக், பம்பாய் 2.

SISTA'S

EM(E) - 435 - D - TAMIL

# உருளைக் கிழங்குகளால் நீங்கள் சலவை செய்யமுடியுமா?



உருளைக் கிழங்கு அல்லது சாக்குக்கட்டியால், துணி கிழிந்து சின்னாபின்னமாகும்படி கெட்டியாக உரைத்தால், துணி சுத்தமாகலாம்! உருளைக்கிழங்குகளைச் சாப்பிடவும், சாக்குக்கட்டியைக் கரும் பலகையில் எழுதவும் உபயோகித்து, துணிகளை சுத்தமான ஸோப்பினால் வெளுத்தால் நாணயவட்டத்தில் செலவு மிச்சமாகும்.

சாக்கு அல்லது உருளைக்கிழங்கு மாவினால் சிறப்புபெற்ற போலி ஸோப்புகள், உங்களுக்கு தேக ஸ்ரமத்தையும் துணிகளைப் பாழாக்குவதிலும் தான் உதவுகின்றன.

# கேரளா
# வாஷ்வெல்




## சுத்தமான பார் ஸோப்

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்

கவர்ன்மெண்ட் ஆப் மெட்ராஸ்









# கல்கி

## பொருளடக்கம்

மலர் 10 } செப்டம்பர் 3 { விக்ருதி
இதழ் 5 } { ஆவணி 18

## ஆசீர்வாதம்

இதுதான்
உத்தம புத்திரனுக்கு
அழகு! மகாராஜனாக
இரு!

10,000 டன் அரிசி

இலங்கை

இந்தியா

இந்தியாவுக்கு இலங்கை பத்தாயிரம டன் அரிசி கடனாகக் கொடுத்து உதவ முன் வந்திருக்கிறது.

## மணி கட்டுவது யார்?




"ருஷ்ய அபாயத்தைச் சமாளிக்க முன் ஜாக்கிரதையான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்" என்று சர்ச்சில் ஐரோப்பிய நாடுகளை எச்சரித்திருக்கிறார்.



மலர் 10 **கல்கி** இதழ் 5


# என்ன சேதி?

## காங்கிரஸ் அக்கிராசனர்

நாளது அனுகுண்ட சகாப்தம் ஆகஸ்டு மாதம் 29-ந் தேதி யன்று ஒவ்வொரு மாகாணத்திலும் காங்கிரஸ் பிரதிநிதிகள் கூடிக் காங்கிரஸ் அக்கிராசன பதவிக்கு ஒருவரைத் தேர்ந்தெடுப்பதற்காக வோட்டுப் போட்டார்கள். போட்டிக்கு நின்றவர்கள் மூன்று பேர்:— ஸ்ரீ சங்கரராவ் தேவ்; பாபு புருஷோத்தமதாஸ் தாண்டன்; ஆசாரிய கிருபலானி. இந்த இதழ் நேயர்களின் கையில் வருவதற்குள் மூவரில் யார் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பது தெரிந்து போயிருக்கும். மூவரில் யார் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் அதனால் பூகம்பம் ஒன்றும் ஏற்பட்டு விடாது! இவர்களுடைய உதவியும் ஒத்துழைப்பும் இல்லாமலேயே அஸ்ஸாமில் அகோர பூகம்பம் தோன்றி நாசம் விளைத்து வருகிறதல்லவா? யார் அக்கிராசன பதவிக்கு வந்தாலும் நாஸிக் காங்கிரஸ் ரஸமில்லாத நாடோடி வைபவமாக நிகழ்ந்தே தீரும். அதற்குப் பிறகு தேசத்தின் காரியங்களும் எப்போதும்போல் நடந்து கொண்டிருக்கும்.

## மாகாணக் கமிட்டித் தலைவர்

காங்கிரஸ் அக்கிராசனரைத் தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளேதான் அங்கங்கே மாகாணக் கமிட்டிகளாக அமைந்து மாகாணக் கமிட்டியின் தலைவரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். தமிழ் மாகாணக் கமிட்டியின் தலைமைப் பதவிக்கு இந்த வருஷத்தில் போட்டி ஏற்பட்டது. பழைய தலைவர் ஸ்ரீ காமராஜர் இந்த வருஷம் போட்டிக்கு நில்லாமல் விலகிக் கொள்வார் என்று சில காலத்துக்கு முன்பு சொல்லப்பட்டு வந்தது. ஆனால் அப்படி விலகிக்கொள்ளாமல் போட்டிக்கு நின்றார். அவருடன் போட்டியிடத் துணிந்து நின்றவர் கோயமுத்தூர் தேசபக்தர் ஸ்ரீ ஸி. பி. சுப்பையா. முடிவு என்ன ஆகும் என்று ஜோசியர்களைப் போய்க் கேட்கவேண்டியதில்லை. வார பலன், ராசி பலன், நட்சத்திர பலன் பார்க்க வேண்டியதுமில்லை. ஸ்ரீ காமராஜ நாடார் 155 வோட்டுகள் பெற்று வெற்றி யடைந்ததில் ஆச்சரியமும் கிடையாது. ஸ்ரீ ஸி. பி. சுப்பையாவுக்கு எப்படி 99 வோட்டுகள் கிடைத்தன என்பதுதான் வியப்பான விஷயம். தற்போதுள்ள காங்கிரஸ் அமைப்பு விதிகளின் கீழ் அதிகாரத்தில் உள்ளவர்களை அசைப்பது இலகுவான காரியமல்ல; முடியாத காரியம் என்றே சொல்லலாம். அதிகாரத்திலுள்ளவர்கள் தாங்களே விலகிக் கொண்டு பிறருக்கு இடங் கொடுத்தால்தான் உண்டு. அப்படிப்பட்ட தன்னலமற்ற பரோபகார சீலம் உடையவராகத் தற்போதைய அரசியல் வாழ்க்கையில் யாரும் இருப்பார் என்று எதிர்பார்க்க முடியாது. போர் தொடுத்து முயன்று நின்ற ஸ்ரீ ஸி. பி. சுப்பையாவும் அவரை ஆதரித்தவர்களும் தங்கள் மனதில் கசப்பு உணர்ச்சிக்கு இடங் கொடாமல் தேசத் தொண்டு செய்வார்கள் என்று நம்புகிறோம். வெற்றி பெற்ற ஸ்ரீ காமராஜ் தமிழ்நாட்டில் மேலும் பிளவை விரிவாக்காத முறையில் தேசத் தொண்டர்கள் அனைவரையும் அணைத்து ஒற்றுமைப்படுத்தி நிர்வாகம் நடத்திச் செல்ல வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

## ஒத்திப் போட்டிருக்கிறது!

எட்டயபுரத்தில் பாரதி விழாவை வழக்கம்போல் செப்டம்பர் 11உ நடத்துவதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. அந்தத் தேதிக்குள் தமிழ் நாட்டில் உணவு நெருக்கடி நிலைமையில் அபிவிருத்தி ஏற்படலாம் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் எதிர்பார்த்த அபிவிருத்தி ஏற்படவில்லை. தமிழ் நாடெங்கும்—முக்கியமாக, திருநெல்வேலி-ராமநாதபுரம் ஜில்லாக்களில் மக்கள் பசியும் பட்டினியுமாக இருக்கிறார்கள் என்று செய்திகள் வருகின்றன. இந்நிலைமையில் அந்தப் பஞ்சப் பிரதேசத்தின் மத்தியில்

உள்ள எட்டயபுரத்தில் கோலாகலமாக விழாக் கொண்டாடுவது உசிதமன்று எனக் கருதிப் பாரதியார் விழாவை ஒத்தி வைத்திருக்கிறது. சூழ்நிலை மறுபடியும் சரியாகும்போது பாரதி விழாவைக் கச்சேரி முதலிய வைபவங்களுடன் உற்சாகமாக நடத்தலாம். இந்த செப்டம்பர் 11உ எட்டயபுரத்திலுள்ள பாரதி அன்பர்கள் பாரதி மண்டபத்தில் கூடி அடக்கமான முறையில் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு பாரதி தினத்தைக் கொண்டாடுவார்கள்.

## மகத்தான உற்பாதம்

மனிதரின் வெறியினாலும் இயற்கையின் மறக்கருணையினாலும் சிருஷ்டிக்கப் பட்டுள்ள பல பிரச்னைகளையும் சமாளிப்பதில் பாரதநாடு தன் முழு சக்தியையும் உபயோகித்து வரும் இச்சமயத்திலே எதிர்பாராத விதமாக மற்றொரு மகத்தான உற்பாதம் ஏற்பட்டிருப்பது சகிக்க முடியாத துக்கம் ஆகும். சில தினங்களுக்கு முன் வட இந்தியாவில் ஏற்பட்ட பூகம்பத்தினால் குறிப்பாக அஸ்ஸாம் மாகாண ஜனங்கள் சொல்லொணுக் கஷ்ட நஷ்டங்களுக்கு இலக்காகியிருக்கிறார்கள். 1934-ம் வருஷத்தில் பீஹாரிலும் அதற்கு அடுத்த வருஷத்தில் குவெட்டாவிலும் ஏற்பட்ட பூகம்பங்களைக் காட்டிலும் இப்போது அஸ்ஸாமில் ஏற்பட்டுள்ள பூகம்பம் பயங்கரமானது என்று சொல்லப்படுகிறது. மேற்படி பூகம்பத்தினால் அந்த மாகாணத்தில் நூற்றுக்கணக்கான மக்கள் உயிர் இழந்ததுடன், ஐம்பது லட்சம் ஜனங்களுக்கு மேல் வீடு வாசல் இன்றித் தவித்து வருகிறார்கள் என்று அஸ்ஸாம் பிரதமர் அறிவித்திருக்கிறார். பத்து கோடி ரூபாய்க்கு மேல் பொருட் சேதம் ஏற்பட்டிருக்கிறது என்றும் தெரிகிறது. இவற்றைத் தவிர பயிர் பச்சைகளுக்கும் ஆடுமாடுகளுக்கும் நேர்ந்துள்ள சேதம் மதிப்பிட முடியாமல் இருக்கிறது. மலைப் பிரதேசத்தை அடுத்துள்ள பல கிராமங்களின் கதி என்ன ஆயிற்று என்றே தெரியவில்லை. பூகம்பம் காரணமாக ஏற்பட்ட வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்ட ஜனங்களுக்கு விமானங்களின் மூலம் உணவுப் பொருள்களை அனுப்பி வருகிறார்கள். இன்னம் கூட சில இடங்களில் அடிக்கடி பூமி அதிர்ச்சி ஏற்பட்டு வருவதால் அஸ்ஸாம் மாகாண ஜனங்கள் கதிகலங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

## உதவி புரியவேண்டும்

இதைத் தவிர உத்தரப் பிரதேசத்தில் உள்ள நதிகளில் வெள்ளம் பெருகியதால் சுமார் ஆயிரம் கிராமங்கள் வரையில் மூழ்கிக் கிடக்கின்றனவாம். தானியக் களஞ்சியங்களாக இருந்த இடம் எல்லாம் வெள்ளக் காடாக மாறி விட்டன. பீகாரிலும் கோஸி நதியில் வெள்ளப் பெருக்கெடுத்து நூற்றுக்கணக்கான சதுர மைல் கடல் போல் காட்சியளிக்கிறது என்று செய்திகள் கூறுகின்றன. அந்த மாகாணத்திலும் நெல், சோள வயல்கள் நாசமாகி விட்டன. மேற்படி மாகாணங்களில் இயற்கையின் கோபாவேசத்தினால் மக்கள் படும் பாடுகளைப் பற்றிய பரிதாபமான விவரங்கள் கல்நெஞ்சர்களையும் கண்ணீர் விடச் செய்வதாக இருக்கின்றன.

இவ்வாறு மகத்தான துன்பத்துக்கு உள்ளான அஸ்ஸாம், பீகார், உத்தரப் பிரதேச ஜனங்கள் விஷயத்தில் அகில இந்தியாவிலும் உள்ள மகா ஜனங்கள் அனுதாபம் கொள்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. மேற்படி மாகாண ஜனங்களின் கஷ்ட நஷ்டங்களுக்குப் பரிகாரமாக இந்திய சர்க்காரும் மாகாண சர்க்கார்களும் கைக்கொள்ளும் சகல முறைகளையும் ஆதரித்து இயன்ற எல்லா உதவியும் புரிய வேண்டியது பொது மக்களின் கடமையாகும்.

## அட்டைப் படம்

எவ்வளவுதான் பிரகாசமான மின்சார தீபங்களை அமைத்தாலும் சூரிய சந்திரர்களுக்கு இணையாக மாட்டா. மின்சார தீபங்களும் சூரிய சந்திரர்களும் சேர்ந்தாலும் நமது நாட்டுப் பண்பாட்டுக் குரிய குத்துவிளக்கு வரிசையுடன் போட்டியிட முடியாது. அவ்வாறே விதவிதமான வர்ணங்களைக் கொண்ட புதுப் புது செயற்கை மலர்கள் எவ்வளவுதான் வந்தாலும் நம் நாட்டுத் தாமரை மலருக்கு எத்துணையும் ஈடாகமாட்டா. தடாகத்தில் மலர்ந்த தாமரையின் அழகும் மணமும் உலகில் வேறு எந்தப் பொருளுக்கு வரும்? மங்கள தெய்வமான தீபத் திருமகளுக்குத் தாமரை மலரைப் பாத காணிக்கையாகச் செலுத்துவது எத்தனை பொருத்தமான கைங்கரியம்? இந்த வருஷத்துக் "கல்கி" தீபாவளி மலர் தாமரை மலரின் அழகும் குணமும் பொருந்தி மங்கல தீப வரிசையின் ஒளியுடன் திகழும் என்பதை நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். அழகான வர்ண சித்திரங்களையும் கருத்தமைந்த இனிய கதைகளையும் கட்டுரைகளையும் ஹாஸ்யப் படங்களையும் தாங்கிக் கொண்டு "கல்கி" தீபாவளி மலர் வெளியாகும். இந்த மகிழ்ச்சியான செய்தியையே நமது இந்த இதழ் அட்டைப்படம் நேயர்களுக்குத் தெரியப்படுத்துகிறது.

# நீதியோ நீதி! நியாயமோ நியாயம்!

சட்ட நிபுணர் என்றால், அரசியல் சாணக்கியர் என்றால், நீதி சாஸ்திர பண்டிதர் என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும்!

எத்தனையோ பேர் சட்ட நுணுக்கங்களைச் சண்டப் பிரசண்டமாக வியாக்கியானம் செய்கிறார்கள்.

எத்தனையோ பேர் அரசியல் தத்துவங்களையும் தந்திரங்களையும் அலசி அலசி ஆராய்ச்சி செய்கிறார்கள்.

ஆனால் அவர்களைக் காட்டிலும் யாருக்கும் தெரியாத ஒரு புதிய சட்டத்தைச் சிருஷ்டி செய்பவர் மேலானவர் என்பதில் சந்தேகம் இருக்க முடியுமா?

எவருடைய மூளையிலும் உதிக்காத ஒரு புதிய அரசியல் தர்மத்தைக் கண்டு பிடிப்பவர் அவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர் அல்லவா?

காஷ்மீர் பிரச்னையைத் தீர்ப்பதற்காக ஐக்கிய நாடுகள் சபை சர் ஓவன் டிக்ஸனை மத்தியஸ்தராக நியமித்த போது சர்வதேச ராஜதந்திரிகள் சந்தோஷப் பட்டார்கள்; சர் டிக்ஸன் உப்பு இல்லாமல் கலக்கஞ்சி குடிக்கும் சக்தி உடையவர் ஆதலால், காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்காமல் அவர் திரும்ப மாட்டார் என்று சத்தியம் செய்தார்கள்; இருபத்தைந்து ஆண்டு நீதிபதி பதவியை வகித்தவரும் சிறந்த ராஜதந்திரியுமான டிக்ஸனைத் தவிர அந்தப் பிரச்னையைத் தீர்க்கும் ஆற்றல் வேறு யாருக்கும் இல்லை என்று பிரமாதமாக ஆர்ப்பரித்தார்கள்.

மத்தியஸ்தர் டிக்ஸன் பாரத நாட்டுக்கும் பாகிஸ்தானுக்கும் காஷ்மீருக்கும் விஜயம் செய்தார்; ஆங்காங்கு சர்க்கார் தலைவர்களுடன் பேசினார். இறுதியில் நம்மால் அந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியவில்லை என்று கையை விரித்து விட்டார்.

தம்முடைய தோல்விக்குக் காரணங்களை விளக்கி அவர் வெளியிட்ட அறிக்கையும், அவ்விஷயமாக ஜனப் லியாகத் அலிகானின் அபிப்பிராயமும், பண்டித ஜவஹர்லால் நேருவின் கண்டனமும் பத்திரிகைகளில் சாங்கோபாங்கமாக வெளியாகியிருக்கின்றன.

காஷ்மீர் பிரச்னையையொட்டி ஐ. நா. சபை நேர்மையுடன் நடந்து கொள்ளவில்லை. கொள்ளைக்காரர்கள், அவர்களிடம் சொத்தைப் பறிகொடுத்தவர்கள், பறி கொடுத்தவர்களுக்கு உதவியாகச் சென்ற போலீஸார் எல்லாரையும் சம நிலையில் வைத்து ஐ. நா. சபை காஷ்மீர் பிரச்னையைப் பரிசீலனை செய்தது.

அந்தச் சபையினால் நியமிக்கப் பட்ட கமிஷன் காஷ்மீருக்கு வந்து பாகிஸ்தானின் அக்கிரமங்களை நேரில் கண்ட பிறகு கூட ஐ. நா. சபை தான் முதலில் செய்த தவறை ஒப்புக் கொண்டு அதற்குப் பரிகாரம் தேடவில்லை.

எனவே, அந்தச் சபை நீதி வழங்கத் தவறியதெனினும், அதனால் நியமிக்கப்பட்ட மத்தியஸ்தர் மூலமாகவாவது காஷ்மீர் பிரச்னையில் நீதி கிடைக்கலாம் என்று சிலருக்கு ஓரளவு நம்பிக்கை இருந்திருக்கக் கூடும்.

ஆனால் அந்த நம்பிக்கையிலும் சர் டிக்ஸன் மண்ணைப் போட்டுவிட்டார்.

* * *

ஏனெனில் காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்கும் விஷயமாக சர் டிக்ஸன் கண்டு பிடித்துள்ள புதிய சட்டமும் சிருஷ்டித்துள்ள புதிய அரசியல் தத்துவமும் ஜனநாயக தர்மத்தில் உலக மக்களுக்கு உள்ள நம்பிக்கையையே சிதறடிப்பதாக இருக்கின்றன.

கொள்ளைக்காரர், பறி கொடுத்தவர், போலீசார் இந்த மூன்று பிரிவினரையும் ஐக்கிய நாடுகள் சபை சமநிலையில் வைப்பதுடன் நின்றது.

அந்தச் சபையினால் நியமிக்கப்பட்ட மத்தியஸ்தர் டிக்ஸனோ வென்றால், மேற்படி சபையைக் காட்டிலும் வெகு தூரம் முன் சென்று விட்டார்!

அதாவது கொள்ளை போன சொத்தில் கொள்ளைக்காரர்களுக்கு எவ்வளவு பங்கு உண்டு என்பதை நிர்ணயித்து முடிவு செய்யும் வரையில் பறிகொடுத்தவர் எவ்வித உரிமையுமின்றி விலகி நிற்க வேண்டும் என்பதுதான் டிக்ஸன் கூறியுள்ள யோசனை!

காஷ்மீரைச் சேர்ந்த சில பகுதிகளில் சர்வஜன வாக்கு எடுப்பு நேர்மையுடனும் பாரபட்சமின்றியும் நடைபெறுவதற்காகக் காஷ்மீர் சர்க்கார் ஆறுமாத காலத்துக்கு அதிகாரத்திலிருந்து விலகி அஞ்ஞாத வாசம் செய்ய வேண்டுமாம்!

அந்த அதிகாரத்தை ஐ. நா. சபை நிர்வாகிகள் ஏற்றுக்கொண்டு சர்வஜன வாக்கு எடுப்பை நடத்துவார்களாம்!

எப்படியிருக்கிறது நியாயம்!

டிக்ஸன் கூறியுள்ள மத்தியஸ்த திட்டத்தில் மேற்படி இரண்டு யோசனைகளும் அடங்கியிருக்கின்றன.

அவரது முயற்சி படுதோல்வியடைந்ததற்கு உருப்படாத அந்த இரண்டு யோசனைகளும்தான் காரணம்.

கொள்ளைக் கூட்டத்தினரான ஆஸாத் காஷ்மீர் 'சர்க்காரை'க் கண்டிக்காமல் மழுப்பியுள்ள டிக்ஸன், சட்டபூர்வமான, சுதந்திரத்துக்காகப் பல ஆண்டுகள் பாடுபட்ட, தியாகிகளும் தேசபக்தர்களும் அடங்கிய சர்க்காரை அஞ்ஞாத வாசம் செய்ய வேண்டும் என்று கூறத் துணிந்ததை நியாய புத்தி படைத்த யார்தான் ஒப்புக் கொள்ள முடியும்?

"திடுக்கிடத்தக்க, அரசியல் தர்மத்துக்கு முற்றிலும் முரணான அந்த யோசனையை இந்திய சர்க்கார் எது நேருவதாயினும் ஏறெடுத்தும் பார்க்க மாட்டார்கள்" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு மறுத்திருப்பதை யார்தான் குறைகூற முடியும்?

தேர்தல் நேர்மையாகவும் பாரபட்சமின்றியும் நடைபெறுது என்பதற்காகச் சட்ட பூர்வமான சர்க்காரை விலக்குவது என்பது இந்த உலகில் கண்டும் கேட்டும் இராத புதுமையாகும்.

"அவ்விதம் சட்ட பூர்வமான சர்க்காரை விலக்குவது அநியாயம், அக்கிரமம் என்பதுடன் அவ்வாறு செய்வது ஆக்கிரமிப்பாளர்களுக்கு விட்டுக் கொடுப்பதாக முடியும். ஆக்கிரமிப்பாளர் வெற்றி பெறுவதற்கு வழி கோலியதாக முடியும்" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு பட்டவர்த்தனமாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

"வேண்டுமாயின் தேர்தல் நடக்கும் போது ஒவ்வொரு தெருவிலும் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் ஐக்கிய நாடுகள் சபையின் பார்வையாளர்கள் இருந்து கொண்டு தேர்தல் நியாயமாக நடைபெறும்படி பார்த்துக் கொள்ளட்டும்" என்றும் ஜவாஹர்லால்ஜி யோசனை கூறியிருக்கிறார்.

எனவே அவர் கூறியுள்ள நேர்மையான யோசனையை விட்டு விட்டு, டிக்ஸன் கூறியுள்ள அநியாயமான யோசனைக்கு இணங்க காஷ்மீரைப் பிளப்பதோ, காஷ்மீர் சர்க்காரை விலக்குவதோ அக்கிரமமான, அதர்மமான காரியம்.

கொரியா விஷயத்தில் ஐ. நா. சபை எவ்வாறு நடந்து கொண்டதோ அது போலவே காஷ்மீர் விஷயத்திலும் நடந்து கொண்டிருந்தால் எத்தனையோ கஷ்ட நஷ்டங்களும் கால விரயமும் தவிர்க்கப் பட்டிருக்கும்.

வட கொரியா தென் கொரியா என்று வல்லரசுகள் பிரித்தன என்றாலும் கொரியா முழுவதும் ஒரே தேசம் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

அப்படியிருந்தும் வட கொரியா தென் கொரியா மீது போர் தொடுத்தது அக்கிரமம் என்பதை ஐ. நா. சபை போர் ஆரம்பமான சில மணி நேரத்தில் நிர்ணயம் செய்து விட்டது. தென் கொரியாவில் பெரும் பகுதியையும் கைப்பற்றிக் கொண்டுள்ள வட கொரியா துருப்புகள் திரும்பவும் தென் கொரியா எல்லைக்கு வெளியே சென்றுவிட வேண்டும் என்றும் அந்தச் சபை கட்டளையிட்டிருக்கிறது. அவ்வாறு வடகொரியா துருப்புகள் வாபஸாகும் வரையில் போரை நடத்தும் பொறுப்பைத் தன் தலையில் சுமத்திக் கொண்டிருக்கிறது.

கொரியா விஷயத்தில் நீதி வழங்க இவ்வளவு தூரம் துடிக்கும் ஐக்கிய நாடுகள் சபை காஷ்மீர் சம்பந்தப்பட்ட பட்டில் முற்றிலும் நேர்மாறான முறையைக் கடைப்பிடித்து வருவதன் மர்மம் என்னவோ!

காஷ்மீர் மீது படையெடுத்துப் பல பகுதிகளையும் கைப் பற்றிய அன்னிய நாடான பாகிஸ்தானின் ஆக்கிரமிப்பை அந்தச் சபை கண்டிக்கவில்லை. அந்தப் பகுதிகளிலிருந்து வெளியேறி விட வேண்டும் என்று பாகிஸ்தான் துருப்புகளுக்குக் கட்டளை யிடவும் இல்லை. அதற்கு மாறாக காஷ்மீரில் பாகிஸ்தான் கொண்டாடும் உரிமைகளை உறுதிப்படுத்துவதற்கான சூழ்ச்சிகளையே செய்து வருகிறது.

உலகத்திலுள்ள அரசியல் அநீதிகளைக் களைந்தெறிந்து நீதி வழங்குவதற்காக ஏற்பட்ட ஐ. நா. சபை முதலில் தன்னிடம் உள்ள அநீதியைக் களைந்தெறிந்தாலன்றி உலக நாடுகளுக்கு எவ்வாறு நீதியும் நியாயமும் கிடைக்கும்? உலகப் பிரச்னைகள் எவ்வாறு திருப்திகரமாகத் தீரும்.

* * *

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் சமரசம் ஏற்பட்டுள்ள இந்தச் சமயத்திலே காஷ்மீர்ப்பிரச்னை மாத்திரம் தீர வழி ஏற்படாதது மிகவும் வருந்தத்தக்க விஷயம் ஆகும்.

பாகிஸ்தான் பிரதம மந்திரி ஜனாப் லியாகத் அலிகானும் வெளிநாட்டு

மந்திரி சர் ஜபருல்லாகானும் டிக்ஸன் தோல்வியைக் குறித்து வெளியிட்டுள்ள அறிக்கைகளிலே, காஷ்மீர் பிரச்னை தீராததற்கு இந்தியாதான் முழுப் பொறுப்பாளி என்று குற்றம் சாட்டியிருக்கிறார்கள்.

பாகிஸ்தான் பரமசாது என்றும், காஷ்மீர் மீது ஆக்கிரமித்த குற்றம் இந்தியாவையே சார்ந்தது என்றும் கூசாமல் கூறியிருக்கிறார்கள்.

எனினும் அவர்களுடைய கூற்றைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஏனெனில், உலக சரித்திரத்திலே இதுவரையில் ஆக்கிரமிப்பாளர் யார் தான் தாங்கள் செய்தது தவறு என்று ஒத்துக் கொண்டிருக்கிறார்கள்?

உதாரணமாக இப்போது கண்முன் நிகழ்ந்து வரும் சம்பவத்தை மாத்திரம் எடுத்துக் கொள்வோம்.

வடகொரியா தென் கொரியா மீது படையெடுத்து ஆக்கிரமித்ததாக ஐ. நா. சபை தீர்மானம் செய்திருக்கிறது.

ஆனால் அமெரிக்காவின் பக்க பலத்துடன் தென் கொரியாதான் ஆக்கிரமிப்புக் குற்றம் செய்திருக்கிறது என்று தினசரி ருஷ்யப் பிரதிநிதி மேற்படி சபையில் சாதித்து வருகிறார்.

எனினும் உண்மை என்ன என்பதை உலகம் அறியாமல் போய் விடவில்லை.

அதுபோலவே, பாகிஸ்தான் மந்திரிகள் என்ன சொன்னாலும் பாகிஸ்தான் காஷ்மீரின் ஒரு பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பதிலிருந்தே அவர்களுடைய கூற்று எவ்வளவு தூரம் உண்மை என்பதை உலகம் அறிந்து கொள்ளும்.

காஷ்மீர் பிரச்னை தற்போது தீரா விட்டாலும் அதைக் குறித்து யாரும் அதிகக் கவலை கொள்ள வேண்டிய அவசியம் இல்லை.

ஏனெனில் காஷ்மீர் பிரச்னை தீராதது மற்ற விஷயங்களில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்துக்குக் குந்தகமாக இராது என்று ஜனாப் லியாகத் அலிகான் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்.

அந்த அபிப்பிராயத்தைப் பண்டித ஜவாஹர்லால் நேரு பூரணமாக ஆதரித்திருப்பதுடன், காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்க வலுவில் இந்தியா யுத்தத்தில் இறங்கப் போவதில்லை என்றும் உறுதி கூறியிருக்கிறார்.

எனவே, காஷ்மீர் பிரச்னை இந்தியா-பாகிஸ்தான் உறவைச் சீர்குலைத்து விடாது என்பதும், அந்தப் பிரச்னையைத் தீர்க்க போரைத் தவிர வேறு முறைகளைக் கைக்கொள்ள இடம் இருக்கிறது என்பதும் தெளிவாகிறது.

## ஏகக் கூக்குரல்!



## நீங்கள் உங்கள் பற்களை
## இன்று மக்லீன் செய்தீர்களா?



நெடுங்காலமாக
நான் மக்லீன்ஸ்
மீது நம்பிக்கை
வைத்திருக்கிறேன்.
ஒவ்வொரு தினத்
தையும் அது
எனக்கு ஒழுங்காக
ஆரம்பித்துக்
கொடுக்கிறது!

வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது

மக்லீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை யாரும் காப்பியடிக்க முடியாத பிரத்யேக முறையில் தயாரித்தது மிகவும் சுத்தமாயிருப்பதால் உலகமுழுவதும் பரவியுள்ளது. கறைகளைப் போக்கி வாயைச் சுத்தப்படுத்தி, உபயோகிப்பதற்கு மணமும் சுவையும் உள்ளதாக விளங்குகிறது

லக்ஷக்கணக்கான மக்கள் பிரதி தினமும் காலையில் மக்லீன்ஸ் மூலம் தம் பற்களைச் சுத்தம் பண்ணுவதைப் பழக்கப்படுத்திக் கொண்டுள்ளனர்.

இன்றே மக்லீன்ஸ் வாங்குங்கள்!




MTX 2-T

# இலங்கையில் ஒரு வாரம்

**கல்கி**

தமிழ் நாட்டுக்கு மாபெரும் தொண்டு செய்ய வேண்டும் என்ற ஆசை என் உள்ளத்தில் துடித்துக் கொண்டிருந்தது; என் இரத்தத்தில் கொதித்துக் கொண்டிருந்தது; என் இருதயமாகிற வெளியில் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தது.

சென்ற ஆகஸ்டு மாதத்தில் திடீரென்று அந்த ஆசை பொங்கிப் பெருகிவிட்டது. ''எனக்கு ஏதாவது போக்குக் காட்டாவிட்டால் பூகம்பம், பெருவெள்ளம் முதலிய உற்பாதங்களாக உருவெடுப்பேன்!'' என்று பயமுறுத்திற்று. அஸ்ஸாமிலும் உத்தரப் பிரதேசத்திலும் இப்படி யாரோ தேசத் தொண்டு செய்யும் ஆர்வத்தை அமுக்கி வைத்ததினாலேயே அங்கெல்லாம் மேற்கூறிய உற்பாதங்கள் நேர்ந்திருக்க வேண்டும் என்பதில் சந்தேகம் என்ன! ஆனால் நான் அத்தகைய தவறு எதுவும் செய்யவில்லை; அதாவது தேசத் தொண்டு செய்யும் ஆர்வத்தை அமுக்கி விடவில்லை. அந்த ஆர்வத்தை எப்படி வெளிப்படுத்துவது என்று யோசித்துப் பார்த்தேன். அதற்கு இரண்டே இரண்டு வழிகள்தான் என் முன்னால் தென்பட்டன.

ஒன்று, காங்கிரஸ் மகா சபையின் அக்கிராசன பதவிக்குத் தேர்தலுக்கு நிற்கவேண்டும். அல்லது, குறைந்த பட்சமாக, மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் பதவிக்காவது நின்று தொலைக்க வேண்டும்!—இது ஒரு வழி.

ஆனால் இந்த வழியில் சிறிது புகுந்து பார்த்ததில் எத்தனை எத்தனையோ தடைகள் மலை போலக் குறுக்கிட்டன. இந்த வழியில் தொண்டு செய்ய வேண்டுமென்ற ஆசை எனக்கு முன்னதாகவேப் பலருக்கு ஏற்பட்டிருந்தது என்பதை நன்கு அறிந்தேன். அவர்கள் வெகுதூரம் முன்னேறி என்னைப் போன்றவர்கள் அந்த வழியில் பிரவேசிப்பதற்கே இடமில்லாமல் செய்து விட்டார்கள். அவர்கள் யார் யார் எனில், பொய், புளுகு, போர்ஜரி, கள்ளக் கையெழுத்து, கள்ளமார்க்கெட்டு, லஞ்சம், சிபார்சு—ஆகிய மகானுபாவர்கள்தான். அடிப்படையில் காங்கிரஸ் அங்கத்தினர் கையெழுத்து வாங்குவதிலிருந்தே அத்தகையோர் விடா முயற்சியுடன் வேலை செய்து வந்திருக்கிறார்கள். அத்தகைய அஸகாய சூரர்களுக்கு முன்னால் நாம் எங்கே! — ஆகவே எனக்குத் தெரிந்திருந்த இரண்டாவது வழியைத்தான் நான் தேட வேண்டியதாயிற்று.

அந்த இரண்டாவது வழி, தமிழ்நாட்டிலிருந்து சில நாளைக்கு எங்கேயாவது போய் விட்டு வருவதே. தமிழ்நாட்டில் இப்போது தலைபோகிற பிரச்னையாயிருப்பது உணவுப் பிரச்னை; அதாவது உணவு இல்லாத பிரச்னை. உணவு இல்லாத கேடு காரணமாகச் சில ஸ்திரீகள் குழந்தைகளை விற்பதாகச் செய்திகள் வந்தன. இன்னும் சில தாய்மார்கள் வயிற்றில் உள்ள குழந்தைகளைக் கூட விலைகூறி விற்று விடுவதாகப் பிரசுரமாயிற்று. உணவு இல்லை என்று குழந்தைகளைப் பெற்றவர்கள் விற்றால் வாங்கிக் கொள்ளுகிறவர்கள் அக்குழந்தைகளை என்ன செய்வார்கள் என்பது தெரியவில்லை. இப்படிப்பட்ட பயங்கரமான நிலைமையில் ஒருவர் ஒரு வார காலமாவது வெளிநாட்டுக்குச் சென்று விட்டு வந்தால் அந்த வரையில் உணவு நெருக்கடியைத் தீர்ப்பதற்கு உதவி செய்ததாகுமல்லவா! இப்படியே ஒவ்வொருவரும் செய்தால் அதாவது வெளிநாட்டுக்குப் போய் ஒருவார உணவை மீத்தால் நமது உணவு மந்திரி முன்ஷி மிகவும் குஷியடைந்து நம்மை வாழ்த்த மாட்டாரா! நாம் திரும்பி வரும்போது ஸ்ரீ ரோசக் விக்டோரியா நமக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்துக் கொடுக்க மாட்டாரா!

எனவே, வெளிநாட்டுக்குப் போவதன் மூலம் தமிழ் நாட்டுக்குத் தொண்டு செய்வது என்று தீர்மானித்தேன். எந்த வெளி நாட்டுக்குப் போவது என்று யோசித்த போது முதலில் கொரியா ஞாபகம் வந்தது. உடனே தளபதி மக் ஆர்தருக்கு ஒரு தந்தி கொடுத்தேன். ''உதவிக்குப் புறப்பட்டு வரத் தயார்; உடனே ஒரு ஸூபர் போர்ட் பாம்பர் விமானம் அனுப்பவும்'' என்று. ''விலாசதார் அகப்படவில்லை'' என்று தந்தி திரும்பி வந்துவிட்டது! அடுத்தபடியாக நமது அண்டை நாடாகிய இலங்கையை நினைத்துக் கொண்டேன். இலங்கை மந்திரி ஒருவர் தமிழ் நாட்டின் கதியை நினைத்து உருகி, ''பத்தாயிரம் டன் அரிசி கடன் கொடுக்கிறேன்'' என்று தெரிவித்திருந்தார். சில காலத்துக்கு முன்பு இலங்கை தனக்கு வேண்டிய அரிசிக்கு இந்தியாவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இப்போது சக்கரம் சுழன்று, இலங்கை இந்தியாவுக்கு அரிசிக்கடன் தருவதாகச் சொல்லுகிறது. இந்த அதிசயமான நிலைமையின் காரணத்தை அறிந்து கொள்ள வேண்டாமா! உண்மையாகவே மனமிரங்கி இலங்கை மந்திரிகள் அரிசி கொடுக்கிறார்களா! அல்லது ''அழுகிய வாழைப் பழத்தை மாடுகடத் தின்று விட்டால் புரோஹிதருக்குத் தானம் கொடுத்துவிடு!'' என்று கோமுட்டி செட்டியார் கதையில் சொன்னாரே, அந்தமாதிரி இலங்கை சர்க்கார் சொல்கிறார்களா!

இதை நேரில் தெரிந்துகொண்டு வருவதற்காக இலங்கைக்குச் சமுகம் கொடுப்பது என்று தீர்மானித்தேன். (நாம் இங்கே ''விஜயம் செய்தல்'' என்று சொல்வதை நமது யாழ்ப்பாண சகோதரர்கள் ''சமுகம் கொடுத்தல்'' என்று சொல்லுகிறார்கள்.) இலங்கை போவதற்கு இன்னும் சில முகாந்திரங்களும் எனக்குக் கிடைத்தன.

1. கொழும்பு தமிழ்ச் சங்கத்தார் தங்களுடைய எட்டாம் ஆண்டு விழாவில் வந்து கலந்து கொள்ள வேண்டும் என்று என்னைக் கேட்டிருந்தார்கள். அதற்குத் தேவையான

போக்கு வரவு வசதிகளை 'ஒழுங்கு செய்து' தருவதாகவும் சொல்லியிருந்தார்கள்.

2. தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் அடுத்த ஆண்டு தமிழ்த் திருவிழாவை இலங்கையில் நடத்த வேண்டும் என்ற அழைப்பை ஒப்புக் கொண்டிருந்தார்கள். அவ்விதம் இலங்கையில் தமிழ் விழா நடத்துவதற்குப் பூர்வாங்க ஏற்பாடுகளை 'ஒழுங்கு செய்து'விட்டு வரும்படி ஸ்ரீ பெரியசாமித் தூரனையும் என்னையும் கேட்டுக் கொண்டார்கள்.

இவை எல்லாவற்றையும்விட முக்கியமான இன்னொரு காரணம் இருந்தது. பதினொரு வருஷத்துக்கு முன்னால் ஒரு தடவை நான் யாழ்ப்பாணம் சென்று திரும்பினேன். பிறகு எங்கெங்கே சென்றாலும், எந்தத் தமிழர் கூட்டத்தில் பேச நேர்ந்தாலும், ஒரு செய்தியைத் தவறாமல் சொல்லி வந்தேன். அது என்னவென்றால், "உண்மையான தமிழ் அன்பைக் காணவேண்டும் என்றால், யாழ்ப்பாணத்திலேதான் காண வேண்டும்" என்பது. பம்பாயிலும் கல்கத்தாவிலும் டில்லியிலும் இன்னும் தமிழ் நாட்டிற்குள் சென்ற சென்ற இடங்களிலெல்லாம் இதை நான் சொன்னதுண்டு. மற்ற இடங்களில் வசிக்கும் தமிழர்களிடம் தமிழ் அன்பு இல்லாமலில்லை. ஆனால் சில இடங்களில் உள்ள தமிழர்கள் தங்கள் தமிழ் அன்பை ஒளித்து வைத்துக் கொள்கிறார்கள். துப்பறியும் நிபுணர்களைக் கொண்டு அதைக் கண்டு பிடிக்க வேண்டியிருக்கிறது. இன்னும் சில இடங்களில் வெடி மருந்து வைத்துப் பாறையைப் பிளந்தால் தமிழன்பு சிறு ஊற்றாக மேலே வருகிறது. இன்னும் சில இடங்களில் தமிழ் அன்பு வேறு பாஷைகளின் மீது துவேஷமாகப் பரிணமித்துக் கோர தாண்டவம் செய்கிறது. ஆனால் யாழ்ப்பாணத்திலும் யாழ்ப்பாணத் தமிழர்கள் உள்ள இடங்களிலும் தமிழ் அன்பு வெளிப்படையாக அதனுடைய இனிமையான வடிவத்தில் பொங்கிப் பெருகுவதைக் காணலாம்.

இப்படியாகப் பதினொரு ஆண்டுகளுக்கு முன்பு பார்த்ததைக் கொண்டே சொல்லி வந்தேன். திடீரென்று சில நாளைக்கு முன் ஐயப்பாடு தோன்றி விட்டது. பத்து ஆண்டுகளுக்குள் உலகத்தில் எத்தனையோ மாறுதல்கள் நிகழ்ந்து விடுகின்றன. வாழ்க்கையிலும் பல மாறுதல்களைக் காண்கிறோம். பன்னிரண்டு வருஷத்துக்குள் புதுப்பிக்காவிட்டால் பதிவு செய்த பத்திரம்கூடக் 'காலாவதி' ஆகி விடுவதாகக் கேள்விப் பட்டிருக்கிறோம். அப்படியிருக்க யாழ்ப்பாணத்தாரின் தமிழ் அன்பு மட்டும் ஒரு மாமாங்கம் ஆகியும் அப்படியே நிலைத்திருக்கும் என்பது என்ன நிச்சயம்! மறுபடியும் ஒரு தடவை போய்ப் பார்த்து விட்டு வந்தாலன்றி அதைப் பற்றி இனிக் கூட்டங்களில் சொல்லக்கூடாது. ஆனால் தமிழ்க் கூட்டங்களில் அதைப் பற்றிச் சொல்லக் கூடாது என்றால் வேறு என்னத்தைச் சொல்வதற்கு இருக்கிறது!......

எனவே, இலங்கைக்குச் சென்று யாழ்ப்பாணத் தமிழர்களுக்குச் 'சமுகம் அளித்து'விட்டு வருவது என்று தீர்மானித்து அதற்கு வேண்டிய ஒழுங்குகளைச் செய்ய ஆரம்பித்தேன்.

இலங்கைக்குப் போக ஒழுங்கு செய்வதென்பது சாமான்ய காரியம் அல்ல. பாஸ்போர்ட் வாங்க வேண்டும்; விஸா வாங்க வேண்டும். 'பாஸ் போர்ட்'டுக்கும் 'விஸா'வுக்கும் என்ன வித்தியாசம் என்பதைப் பற்றி ஆராய்ந்து மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டும். இன்னும், பண்டைக்காலத்தில் இலங்கையை வெற்றி கொள்ளச் சென்ற வீரத் தமிழர்களைப் போலவே உடம்பில் குத்துக் காயங்களுடன் புறப்பட வேண்டும். அம்மை ஊசி இரண்டு இடத்தில் குத்திக் கொள்ள வேண்டும்; காலரா ஊசி இன்னும் இரண்டு இடத்தில் குத்திக் கொள்ளவேண்டும்.

அம்மை ஊசி என்னை அப்படி ஒன்றும் தொந்தரவு செய்துவிடவில்லை. இலேசாக விட்டு விட்டது. ஆனால் காலரா ஊசி குத்திக் கொண்ட அன்று கொஞ்சம் சுரம் வந்திருந்தது. ஊசி குத்திய டாக்டரை டெலிபோனில் அழைத்துச் "சுரம் வந்திருக்கிறது!" என்றேன். "சும்மா வரட்டும்; பரவாயில்லை!" என்றார். "உமக்குப் பரவாயில்லை; எனக்குப் பரபரப்பா யிருக்கிறதே!" என்றேன். "அப்படித்தான் கொஞ்சம் பரபரப்பாயிருக்கும். காலரா ஊசியே அப்படித்தான். அதற்குக் கொஞ்சம்கூடப் புத்தியே யில்லை. தராதரம் தெரிவதில்லை. எழுத்தாளர் — பத்திராதிபர் என்றுகூடப் பயப்படாமல் கொஞ்சம் தொந்தரவு கொடுக்கும். ஆனால் ஒரு நாளில் அது போய்விடும்!" என்றார் டாக்டர்.

"அப்படியா செய்தி! இருக்கட்டும்! இந்தக் காலரா ஊசியைப் பற்றி ஒரு தடவை வெளுத்து வாங்கிவிட வேண்டியதுதான்!" என்று முடிவு செய்தேன்.

ஆனால், காலரா ஊசியினால் ஏற்பட்ட ஒரு நன்மை அதைப் பழிவாங்கும் எண்ணத்தை மாற்றிக் கொள்ளச் செய்தது.

சுரத்துடன் அறையில் படுத்திருந்தபோது வெளியில் யாரோ சிலர் வந்தார்கள். "கல்கி இருக்கிறாரா!" என்று விசாரித்தது என் காதில் விழுந்தது. பதில் கூறிய பிள்ளை "இருக்கிறார்; ஆனால் அவருக்குக் காலரா இனகுலேஷன்....." என்று சொல்வதற்குள், வந்தவர்கள், "சரி, சரி! பிற்பாடு வந்து பார்த்துக் கொள்கிறோம்!" என்று சொல்லி விட்டு நடையைக் கட்டினார்கள். வந்தவர்கள் அவ்வளவு அவசரமாகத் திரும்பிச் சென்றதை அதற்கு முன் நான் அறிந்ததே யில்லை! "காலரா" என்ற வார்த்தை காதில் விழுந்ததுமே ஓட்டம் பிடித்தார்கள்!

இதை யெல்லாம் இங்கே நான் விவரமாக எடுத்துக் கூறுவதற்கு ஒரு காரணம் இருக்கிறது. அது என்னவெனில், வருகிற 1951-ம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் தமிழ்நாட்டிலிருந்து தமிழன்பர்கள் பலர் இலங்கை போகவேண்டிய அவசியம் ஏற்படும். மதுரையிலும் திருவாரூரிலும் கோயமுத்தூரிலும் நடந்தது போன்ற மாபெரும் தமிழ்த் திருவிழா அடுத்த முறை யாழ்ப்பாணத்தில் நடைபெற இருக்கிறது. அந்த விழாவுக்குப் போக விரும்பும் தமிழ் அன்பர்கள் இப்போது முதலே பிரயாண வசதிகளுக்கு ஒழுங்கு செய்யத் தொடங்குவது நலமாயிருக்கும். (தொடரும்)

# பொன்னியின் செல்வன்

## கல்கி

இராஜ ராஜ சோழனின் இளம்பிராயத்தில் நிகழ்ந்த
மகத்தான சரித்திரத் தொடர் கதை
விரைவில் ஆரம்பமாகிறது

# பொழுது போக்கு

“ தும்பி ”

இமயமலையில் தவளைகள் வாசம் செய்கின்றனவாம். இதிலென்ன பெரிய அதிசயம்! நம்மூர்களில்கூடக் கிணற்றுத் தவளைகள் நிறைய இருக்கின்றனவே என்று சொல்லிவிடலாம். ஆனால் இதில் அதிசயம் இருக்கத்தான் இருக்கிறது. இமயமலையில் இருக்கும் தவளைகள் இங்கிருக்கும் தவளைகளைவிடப் பெரியவையாம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வெந்நீர் அண்டா அவ்வளவு பெரியதாக இருக்கிறதாம்.

உள்ளூர்க் கிணற்றுத் தவளைகளின் குரல்களையே கேட்டுக் கேட்டு அலுத்துப் போன நமக்கு இமாலயத் தவளைகளின் குரல்களைக் கேட்கும் போது ஒரு தனி இன்பம் ஏற்படத்தான் போகிறது. கூடிய சீக்கிரம் இந்தியாவில் பொதுத் தேர்தல் நடக்கப் போகிறது. அப்போது இந்த இமாலயத் தவளைகள் நம் ஊர்க் கிணற்றுத் தவளைகளின் உதவிக்கு வந்து சிங்காரம் செய்வதோடு (அரசியல்) குட்டையையும் கலக்கும் என்பதில் சந்தேகமில்லை.

சாதாரணமாகத் தவளைகளுக்கு உடம்பில் முக்கால் பாகம் காற்றுப் பை அடைத்துக் கொண்டிருக்கிறதென்றும் பாக்கிக் கால் பாகம் தான் கை, கால், கண், வாய் முதலிய உறுப்புக்கள் கொண்டது என்றும் 'ஸயன்ஸ்' பாடபுத்தகத்தில் பார்த்திருப்பதாக ஞாபகம். ஆனால் தவளைகளின் குரல்களைக் கேட்கும் போது உடம்பின் முக்கால் பாகமென்ன, உடம்பு பூராவுமே காற்றுப் பையும் அந்தப் பையிலிருக்கும் காற்று சப்த ரூபமாக வெளிபோற வாய் என்ற சிறு வழி இருப்பதாகவும் தோன்றுகிறது. சிறிய கிணற்றுத் தவளைகளின் குரல்களே இப்படி நம் காதைக் குடையுமானால், வெந்நீர் அண்டா அளவு பெரிதான இமாலயத் தவளைகளின் குரல் எப்படி இருக்கும் என்று நினைக்கும் போதே நம் காதை அடைக்கிறது. ஆகையால் பொதுத் தேர்தலை இன்னும் சில வருஷங்கள் ஒத்திவைத்தால் நல்லதல்லவா !

★

“காதுகளை இவ்வளவு பத்திரமாகக் காப்பாற்றுகிறீர்களே, என்னைக் கவனிப்பார் யாருமில்லையா !” என்று அசட்டு வயிறு கேட்கிறது. இதற்குப் பதில், “ஏன் இல்லை ! முன்ஷிதான் இருக்கிறாரே !” என்று சொல்ல வேண்டி இருக்கிறது. ஆனால் முன்ஷியைவிட நமது அருமை ரேடியோ நிலையத்தார்கள் அரிசி நெருக்கடியைத் தீர்ப்பதில் முனைந்து நிற்கிறார்கள். அரிசியில்லாமல் தயாராகும் எத்தனையோ வித விதமான பண்டங்களை நமக்கு விவரமாகச் சொல்லித் தருகிறார்கள் ! (அரிசி இல்லாமல் சாதம் சமைப்பதெப்படியென்று அவர்கள் இன்னும் சொல்லித்தரவில்லை.) ஆனால் அவர்கள் சொல்லித் தருவதை நடைமுறையில் கொண்டு வருவதில் ஒரு சின்னக் கஷ்டம் இருக்கிறது. அது என்னவென்றால் அவர்கள் சொல்லும் பக்ஷணங்களையும் பண்டங்களையும் செய்து சாப்பிடுவதற்காகும் பணத்தைக் கொண்டு வாரம் ஒரு மூட்டை அரிசி 'பிளாக் மார்க்கெட்'டில் வாங்கிவிடலாம்!

புளியங்கொட்டை என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? கடையில் “ஒரு விசை நல்ல புளி கொடு” என்று கேட்கும்போது மளிகைக் கடைக்காரர் காகிதத்தில் கட்டித் தருகிறாரே அதுதான் ! ஒரு விசைப் புளி வாங்கினால் அதில் முக்கால் விசை புளியங்கொட்டை தேறும்போது விஷயம் தெரியாதவர்கள் நாம் ஏமாந்து விட்டோமென்று சொல்லுவார்கள். ஆனால் உண்மையில் ஏமாந்தவர் கடைக்காரர் தான். புளியங்கொட்டையில் எல்லாவித வைடமின்களும் இரும்பு, சுண்ணாம்பு, நிராவகச் சத்துக்கள் நிறைந்திருப்பதாகச் சேலம் வாசிகள் கண்டு பிடித்திருக்கிறார்களாம். இப்படி மிகச் சிறந்த வஸ்துவை மலிவான விலைக்கு நமக்குக் கொடுக்கிறாரே, அப்போது ஏமாந்தவர் கடைக்காரரா ! நாமா !

உணவுப் பஞ்ச காலத்தில் இந்தப் புளியங் கொட்டையை மிகச் சிறந்த முறையில் உபயோகிக்கலாம். அந்த முறை இதுதான் :—

அரைப்படி புளியங் கொட்டையை ஒரே யளவாகப் பொறுக்கி யெடுத்துக் கொள்ளவும். தண்ணீரில் இரண்டு நாள் ஊறப்போடவும். பிறகு மூன்றாம் நாள் காலை தண்ணீரிலிருந்து அவற்றை யெடுத்து வெய்யிலில் ஒரு நாள் முழுதும் நன்றாகக் காயப்போடவும். (இந்த மூன்று நாளிலும் எதைச் சாப்பிட்டுக் கொண்டு காலத்தைக் கழிப்பதென்று கேட்காதீர்கள்!)

பிறகு ஒரு அகலமான வாணலியை (எரிகிற) அடுப்பில் போட்டு அதில் ஆழாக்கு நெய்யை விடவும். உலர்த்திய புளியங் கொட்டைகளை இந்த வாணலியில் போட்டு நெய்யில் பொன் வறுவலாக வறுக்கவும். இப்படி வறுபட்ட கொட்டைகளைக் காப்பிப் பொடி அரைக்கும் யந்திரத்தில் அரைக்கவும். அரைத்த பொடியைத் தனியாக எடுத்து வைத்துக் கொள்ளவும். மறுபடியும் வாணலியில் இன்னும் இரண்டு ஆழாக்கு நெய்யை விட்டு அதில் இந்த புளியங் கொட்டைப் பொடியை மெதுவாகப் போடவும். நாலு மூடி தேங்காயைத் துருவி அதன் தலையில் போடவும். ஏலக்காய், ஜாதிக்காய், லவங்கம் முதலியவைகளையும் சேர்த்தால் ஏற்படும் வாசனை உங்களை ஒரு கலக்குக் கலக்கி விடும். இவைகளைப் போட்டுக் கிளறிக் கொண்டேயிருக்கும்போது இரண்டு விசை வெல்லத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டுக் கொண்டே வரவும். அல்வா ஸ்தானத்திற்கு வந்தவுடன் கீழே இறக்கினால் பண்டம் இறுகிக் கொண்டே வரும். அப்போது துண்டம் போட்டு விட்டு மேலே அரை விசைச் சர்க்கரையைத் தூவவும். சூடாகப் பரிமாறவும். இட்டிலிக்குச் சட்டினி போல இந்தப் புளியங் கொட்டை அல்வாவுக்குத் தொட்டுக் கொள்ள ஆளுக்கு நாலு ஸ்பூன் சர்க்கரை வைத்தால் இன்னும் கொஞ்சம் ருசியாக இருக்கும்!

புளியங்கோட்டை அல்வாப் பண்ணிச் சாப்பிடும் செலவுக்கு ஒரு கல்யாணத்திற்கு அரிசி வாங்கிவிடலாமென்று தோன்றுகிறதல்லவா! அப்படிச் செலவைப் பார்த்தால் அரிசிப் பஞ்சம் எப்படிக் குறையும்!

★

நம் தேசத்தில் எது குறைந்தாலும் மரியாதைக்குக் குறைவில்லையென்று சமீபத்தில் தெரிய வந்தது.

சுதந்திர தினம் முதல் ஒருவாரம்வரை தபால் தந்தி இலாகாக்கள் 'மரியாதை வாரம்' கொண்டாடினார்கள். அதாவது பொது ஜனங்களுக்கு இனிய முகத்துடன் சேவை செய்வதே அவர்கள் நோக்கம் என்று தெரியப் படுத்தினார்கள். தபால் தந்தி அதிகாரிகள் ஜனங்களுக்குத் தந்தி பாரங்களைப் பூர்த்தி செய்ய உதவினார்களாம். மணியார்டர் பாரம் எப்படி எழுதுவது என்று சொல்லிக் கொடுத்து எழுதியும் கொடுத்தார்களாம். இவ்வளவு தூரம் செய்தவர்கள் தந்திச் செலவையும் ஏற்றுக் கொண்டு மணியார்டர் செய்யும் பணத்தையும் ஏன் தாங்களே போட்டுக் கொள்ளக் கூடாதென்று கேட்கிறேன்!

மரியாதை கொடுப்பதில் அரையணா கார்டு வாங்கும் பேர்வழிக்கும், ஒரே சமயத்தில் நூறு ரூபாய் ஸ்டாம்பு வாங்கும் ஆசாமிக்கும் ஒரே மாதிரியாகத்தான் நடந்து கொண்டார்களா என்று தெரியவில்லை. ஐம்பது அல்லது நூறு ரூபாய்க்கு ஸ்டாம்பு அல்லது கவர் வாங்குபவர்களுக்கு சோடா கலர் ஏதாவது கொடுத்திருந்தால் வியாபாரம் பெருகுவதோடு பொது ஜனங்கள் மனமும் குளிரும்.

மரியாதை வாரம் முடிந்ததும், "அப்பாடா!" என்று பெருமூச்சு விட்டுத் தபால் தந்தி அதிகாரிகளும் சிப்பந்திகளும் ஓய்வு எடுத்துக் கொண்டால் அது நியாயமான விஷயம்தான். இப்போது இருக்கும் ஞாயிற்றுக் கிழமை விடுமுறை போல் அவர்களுக்குச் சேர்ந்தாற்போல் ஒரு வாரம் விடுமுறை கொடுக்கும்படி எல்லாம் வல்ல அந்தத் தபால் தந்தி மந்திரியை மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்!

# அக்கப்போர்

நாட்டில் பஞ்சமும் பசியும் இருக்கும்போது அவை இல்லை என்று அடித்துப் பேசுகிறார்கள் அதிகாரிகள். திருமங்கலம் பஸ் ஸ்டாண்டில் ஒருவர் திடீரென்று சுருண்டு கீழே விழுந்து இறந்து போய் விட்டார். அவர் பத்து நாட்களாகச் சாப்பிடவில்லை என்று ஒரு செய்தி கூறுகிறது. அதிகாரிகள் இதைப் பற்றிப் புலன் விசாரித்து வருகிறார்களாம். அவர்களுடைய விசாரணையின் முடிவில், "அந்த மனிதர் பட்டினி காரணமாகக் கீழே விழுந்து மூர்ச்சையடைந்து இறக்கவில்லை. குறிப்பிட்ட நேரத்தில், அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பஸ் வந்துவிட்டதால் அந்த சந்தோஷ அதிர்ச்சியைத் தாங்காமல் அவர் ஹிருதயம் நின்று போய் விட்டது" என்று அறிவித்தால் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை.

★

"உங்கள் நெல்லில் ஒரு பகுதியைக் கொடுங்கள். —ஒரு காங்கிரஸ் வாதி

"ஆகா! உமியைக் கொடுத்து விடுகிறோம்!" என்கிறார் ஒரு விதண்டாவாதி.

★

பிரபல நாடக ஆசிரியரான பெர்னார்ட் ஷா "அவன் ஏன் செய்ய மாட்டான்?" என்ற புதிய நாடகத்தை தமது 94-வது வயதில் எழுதி முடித்திருக்கிறார். தமது நாடகத்தைப் பற்றித் தாமே அபிப்பிராயம் கூறும்போது, "இது ரொம்ப சுமார். இந்த நாடகத்தை நான் நெருப்பை வைத்துக் கொளுத்த மாட்டேன் என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை" என்றார் ஆசிரியர் ஷா. —செய்தி

அவர் ஏன் செய்ய மாட்டார்?

திபேத்தில் பூகம்பம் ஏற்பட்டிருப்பதால் சீன கம்யூனிஸ்ட் தலைவர் மா ஸி துங் தமது படையெடுப்பைச் சில காலத்துக்கு ஒத்திப் போட்டிருக்கிறார். —ஒரு செய்தி

ஒரு பூகம்பத்துக்காக இன்னொரு பூகம்பம் விலகி நிற்கிறது போலும்!

★

நின்று போன மோட்டார் வண்டியை மீண்டும் ஓட வைக்க அரிசியை உபயோகிக்கும் வழியை அமெரிக்க என்ஜினியர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். —நியூயார்க் செய்தி

இனி மனிதன் உயிர்வாழ வேண்டுமென்றால் பெட்ரோலைக் குடிக்கப் பழகிக் கொள்ள வேண்டியதுதான் போலிருக்கிறது.

★

நேருஜீ உருப்படத் திறப்பு விழாவில் பேச்சு. —செய்தித் தலைப்பு

நாம் உருப்படுவதற்கான வழிகளை நேருஜீ அடிக்கடி எடுத்துச் சொல்லுகிறாரே என்று அதற்குப் பதிலாக நேருஜீ உருப்படுவதற்கான வழிகளைப் பற்றிப் பேசினார்கள் போலும்!

★

"நாய் மனிதனைக் கடித்தால் அது சாதாரண சம்பவம். ஆனால் மனிதன் நாயைக் கடித்தால் அது செய்தியாகி விடுகிறது" என்று உதாரணத்துக்காக நாம் சொல்லி வந்திருக்கிறோம். அந்த இல்பொருள் உவமை, உண்மையாகவே நடந்திருக்கிறது! பம்பாய்த் துறைமுகத் தொழிலாளி ஒருவர் தன்னை ஒரு தடவை கடித்த நாயைப் பதிலுக்கு இரண்டு தடவை கடித்து விட்டாராம். "நாய் உன்னை ஒரு காலில் கடித்தால் அதற்கு இன்னொரு காலையும் காட்டு" என்று

இயேசு கிறிஸ்து உபதேசம் செய்யாததால் அவன் மற்றொரு காலைக் காட்டாமல் போனதில் பிசகு இல்லை. ஆனால் கடித்த நாயை அவன் திருப்பிக் கடித்ததன் காரணம் தன்னுடைய செய்கை செய்தியாக வேண்டும்; தன்னுடைய பெயர் பத்திரிகைகளில் வரவேண்டுமென்பதற்காகத்தான் என்று நினைக்கலாம். ஆனால் அப்படியும் அவனுடைய பெயர் பத்திரிகைகளில் வரவில்லை. 'ஒரு மனிதன்' என்றுதான் வெளியிட்டிருக்கிறார்கள்.

இந்த ஏமாற்றம் போதாதென்று அவனைப் போலீஸார் ஜீவஹிம்சை செய்த குற்றத்திற்காகக் கைது செய்திருக்கிறார்களாம்!

பம்பாயில் ஒரு நாய் இந்தவிதம் புகழுடைய, காசியில் ஒருவர் இரண்டு நாய்களுக்குக் கல்யாணம் நடத்தினாராம். ஊர்வலம், ஷெனாய் வாத்தியக் கச்சேரியுள்பட கல்யாணம் சம்பிரமமாக நடந்ததாம். இந்த பைரவ—பைரவி கல்யாணக் கச்சேரியில் பைரவி ராகம் வாசிக்கப் பட்டதா என்றும், நாய்த் தம்பதிகளின் வாலை யார் முடித்து விட்டார்களென்றும் அறிய ஆவலாய் இருக்கிறோம்.

★

ஜெர்மனியில் ஓடும் டிராம் வண்டிகளில் ரேடியோ வைத்திருக்கிறார்கள். —ஒரு செய்தி

சென்னை நகர டிராம்களில் ரேடியோவைத்து விட்டால் டிராம் பிரயாணிகளின் தொகை வெகுவாகக் குறைந்துபோகும் என்று எதிர்பார்க்கலாம்.

★

ஓடும் ரயில்களில் மேல் வகுப்பு வண்டிகளில் அடிக்கடி கொள்ளைகளும் கொலைகளும் நடப்பதை ஒட்டி, இப் பிரயாணிகளைக் காப்பாற்ற பி. பி. ஸி. ஐ. ரயில்வே நிர்வாகிகள் ஒரு புதிய திட்டம் வகுத்திருக்கிறார்கள். சந்தேகாஸ்பதமான பிரயாணிகளைக் கண்காணிக்கவும், அங்கங்கே ரயில் நிற்கும் இடங்களில் சோதனையிடவும் ரகசிய போலீஸார்களை நியமிக்க உத்தேசித்திருக்கின்றனர். —ரயில்வே செய்தி

இனி, பிரயாணிகள் திருடர்களிடமிருந்து தப்பினாலும் ரகசியப் போலீஸாரிடமிருந்தும் தப்பித்துக் கொள்ள முடியாது!

★

வரப் போகும் தேர்தலின் போது அகில இந்திய ரேடியோவை, கட்சிகளின் பிரசார சாதனமாக உபயோகிப்பதை அனுமதிக்கலாமா என்று இந்திய சர்க்கார் யோசித்து வருகிறார்களாம். இந்தத் தகவலை ரேடியோ மந்திரி திவாகர் வெளியிட்டார். இந்த யோசனையை நாம் வரவேற்கிறோம். வேண்டாத பிரசங்கிகளின் மென்னியைத் திருகி, அவர்கள் வாயடைத்துப் போய், பேச்சை நிறுத்தும்படி செய்ய நமக்கு ரேடியோ ஒரு சந்தர்ப்பம் அளிக்கிறதல்லவா! நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்வது ஒரு பொதுக் கூட்டத்தில் முடியாதல்லவா!

★

முன்பு 64 நாட்கள் உண்ணாவிரதமிருந்த பன்னாலால் சென்னைக்கு வந்திருக்கிறார். —செய்தி

ஆறு அவுன்ஸ் அரிசி ரேஷன் அவரைச் சற்றும் பாதிக்காது என்பது நிச்சயம்.

ஜம்மு மாகாணத்திலுள்ள குளங்களில் தண்ணீர் திடீரெனக் குபு குபுவென்று பொங்க ஆரம்பித்து விட்டது. —காஷ்மீர் செய்தி

லியாகத் அலிகானின் அபாண்டமான அறிக்கைகளைக் கேட்டு அக்குளங்கள் கோபத்தால் பொங்கின போலும்!

★

காஷ்மீர் சர்க்காரை நீக்கிவிட்டு வாக்கெடுப்பு அதிகாரிக்குச் சர்வாதிகாரம் தரவேண்டும் என்று டிக்ஸன் கூறிய யோசனை என்னைத் தூக்கி வாரிப் போட்டது! —நேருஜி

அந்த யோசனையை நம்முடைய நேருஜி தூக்கி வாரிக் குப்பைத் தொட்டியில் போட்டதை வரவேற்கிறோம்.

★

இந்தியாவிலுள்ள ஒரு அமெரிக்க சினிமாக் கம்பெனியார் தயாரிக்கும் ஒரு ஆங்கிலப் படத்தை டைரக்ட் செய்யும் பிரஞ்சுக்காரரான. ஜீன்ரெனே, கர்னாடக சங்கீதத்திலுள்ள கானடா ராகத்தில் ஒரு பாட்டைச் சேர்த்திருக்கிறார். —செய்தி

இது ஒரு சர்வ தேசீயப் படமாகத் திகழும் என்பதில் ஐயம் என்ன!

★

சீமையில் பிரைட்டன் என்ற நகரில் ஒரு சர்க்கஸ் கம்பெனியில் வேலை செய்யும் ஒரு கழைக் கூத்தாடி வித்தைகள் காட்டும் கம்பத்தின்மேல் ஏறி நின்றுகொண்டு கீழே இறங்க மறுத்துவிட்டார். தம்முடைய சம்பளத்தை அதிகப்படுத்தினாலொழியத் தம் வேலை நிறுத்தத்தைக் கைவிட முடியாதென்று சர்க்கஸ் நிர்வாகிகளுக்குத் தெரிவித்து விட்டார். அவரது ஆகாரத்தை அவர் மனைவி கயிற்றின் மூலம் மேலே அனுப்பிக் கொண்டிருக்கிறார். —லண்டன் செய்தி

இதைவிட உயர்ந்த வேலை நிறுத்தம் இருக்க முடியாதாகையால், சர்க்கஸ் நிர்வாகிகள் இறங்கி வந்து வேலை நிறுத்தத்தை நிறுத்துவார்கள் என்று நம்புகிறோம்.

★

ஜபல்பூர் சர்க்கார் காரியாலயச் சிப்பந்திகள் பஞ்சப்படியை உயர்த்த வேண்டுமென்று கோரி, பேனாவைக் கீழே வைத்து, 'பேனா வேலை நிறுத்தம்' செய்து விட்டனர். —ஜபல்பூர் செய்தி

இதைப் பற்றி நாம் ஏதும் எழுத முடியாமல் பேனா வேலை நிறுத்தம் செய்கிறது!

★

மத்தியப் பிரதேச மந்திரி ஒருவர் காரில் போய்க்கொண்டிருக்கும்போது அவர் கார் மீது ஒருபுலி பாய்ந்து காரைச் சேதப்படுத்தி விட்டது. —செய்தி

காரை மட்டும் சேதப்படுத்தியது மிகவும் வருந்தத்தக்க செய்திதான்!

★

ஏழு எட்டு ரயில்களில் சென்னையை நோக்கி அரிசி வருகிறது. —செய்தி

மறுபடியும் அரிசி ரேஷன் ஏழு எட்டு அவுன்ஸ் ஆக இது உதவுமா!

# பொறுமைக்கும் உண்டெல்லை, ஐயா!

['தாயின் மணிக்கொடி பாரீர்' என்ற மெட்டு]

★

காயும் வயிற்றினைப் பாரீர் — பசி
காதை அடைக்குது கஞ்சிதான் தாரீர்! (கா)

ஆறவுன்ஸ் கோதுமை என்றார் — அத்துடன்
அரிசியும் உண்டென்று அதிகாரி சொன்னார்
'போறாது' என்றெண்ணிப் போனேன் — கடையைப்
பூட்டி யிருக்கக்கண் டேமாற லானேன்! (கா)

பாலோடு பழங்களைத் தின்று — நீங்கள்
பழகுங்கள் உடம்புக்கு நல்லது என்று
மேலோர்கள் பேசிடும் பேச்சு — இந்த
மேதினி யோர்கேட்டுச் சிரித்திட லாச்சு! (கா)

ஏழைக்குப் பணமேது வாங்க? — அவன்
எதைத்தின்று உயிரோடு இருப்பது, போங்க!
வாழைப் பழத்துக்கும் யோகம் — கேழ்
வரகின் விலைகூட இப்போது ஏகம்! (கா)

புளியங் கொட்டைகெட்ட கேடு — அதன்
புகழுக்கு இப்போது வேறென்ன ஈடு?
களியாட்டம் ஆடுது பாரு — அதைக்
கண்டதும் குழந்தைக்குப் பாரென்ன ஜோரு! (கா)

புல்லுக்கும் மாட்டோடு போட்டி — அது
'போ!'வென்று விரட்டுதே கொம்பினைக் காட்டி
மல்லுக்கு எப்படி நிற்பேன்? — என்
மானத்தை அதனிடம் எப்படி விற்பேன்? (கா)

பிண்ணாக்கும் விலையேறிப் போச்சு — அதைப்
'பிளாக்மார்க்கெட்' டில்வாங்கிப் புசித்திட லாச்சு!
எண்ணத் தொலையாது தொல்லை — இந்த
ஏழைக்குச் சாவும் இரங்குது இல்லை! (கா)

பொறுமைக்கும் உண்டெல்லை, ஐயா! — உங்கள்
போதனை யால்பசி தீருமோ, மெய்யா?
வறுமையால் வாடிட லாமோ? — நாங்கள்
வாழ வகையின்றி மாண்டிட லாமோ? (கா)

—வி. ஜி.



# உள்ளம் குளிர்ந்தது

ஏ. என். எஸ்.

அவனுக்கு ஒரு இடத்திலும் இருப்புக் கொள்ளவில்லை. வாசலுக்கும் உள்ளுக்குமாக அர்த்தமில்லாமல் நடந்து கொண்டிருந்தான். அவன் மனைவியின் பிரஸவ வேதனை அவனை என்னவோ செய்தது. அவனால் சகிக்க முடியவில்லை. பீறிட்டுக் கொண்டுவந்த அழுகையை அப்படியே அடக்கிக்கொண்டு திண்ணையில் வந்து உட்கார்ந்தான். அவனைக் கவலை பிடுங்கித் தின்றது. முகம் பேயறைந்தாற்போல வெளிறிப் போய் விட்டது. கண்கள் கலங்கி விட்டன. ஒன்றும் தோன்றாதவனாய்ப் பிரமை பிடித்தாற்போல் கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்திருந்தான்.

பார்க்கப்போனால் அவன் அப்படிக் கவலைப்பட நியாயமேயில்லை. சற்று முன்புதான் டாக்டர் வந்து ஒரு இஞ்செக்ஷன் செய்துவிட்டுப் போனார். ஒத்தாசைக்கு ஒரு நர்ஸையும் அனுப்பியிருந்தார். இன்னும் கால்மணியில் சௌகரியமாகப் பிரஸவம் ஆகிவிடும் என்றும் சொல்லியிருந்தார்.

பக்கத்து வீட்டுப் பெண்மணிகள் எல்லோரும் ஒத்தாசைக்காக அங்கு வந்திருந்தார்கள். வயதான தன் விதவைத் தாயாரால் ஒன்றும் முடியாது என்று அவன் தன் தங்கையையும் அழைத்து வந்திருந்தான். இவ்வளவிருந்தும் அவன் மனதில் மட்டும் ஏனோ ஒரு அசட்டுப் பயம் குடிகொண்டு விட்டது.

அதற்குமேல் அவனால் அங்கு உட்கார்ந்திருக்க முடியவில்லை. எழுந்திருந்து உள்ளே போனான். பழையபடி திரும்பவும் வாசலுக்கும் உள்ளுக்குமாகப் பித்துப் பிடித்தவன்போல நடக்க ஆரம்பித்து விட்டான்.

அண்ணாவின் மன நிலையைப் புரிந்து கொண்ட தங்கை, "அண்ணா, நீ எதுக்காக இப்படிக் குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருக்கிறாய்? இங்கே யிருந்தால் உன் மனசுக்கு ரொம்ப சங்கடமாயிருக்கும். போய் எதிர்த்த வீட்டு மாமாவிடம் பேசிக் கொண்டிரு" என்று அன்புடன் கடிந்து கொண்டாள். அவள் குரல் கம்மியிருந்தது.

தங்கை சொன்னதைக் கேட்டதும் அவன் திகைத்துப் போனான். மறுகணம் சுய உணர்வு வரவும், அவள் சொல்வது சரியென்று பட்டது அவனுக்கு. நேரே எதிர் வீட்டுக்குப் போனான்.

நீட்ட வட்டமாகச் சொல்லப்போனால் அவனுக்கு அப்போது வயது இருபது தான் இருக்கும். அவ்வருஷம்தான் பி.ஏ. பாஸ் செய்து முடித்திருந்தான். சுருக்கெழுத்தும் டைப்ரைட்டிங்கும் பாஸ் செய்து வைத்தால் நல்ல உத்தியோகம் ஒன்று நிச்சயம் கிடைக்கும் என்று கேள்விப்பட்டான். ஆகவே அவற்றைக் கற்க ஆரம்பித்தான்.

பட்டம் பெற்றதும் கல்யாணம் செய்து கொள்வதாகத் தாயாரிடம் அவன் வாக்களித்திருந்ததால் அவள் அவ்வருடமே கல்யாணம் செய்துவிட வேண்டுமென்று துடித்தாள். அதற்கேற்றாற் போல நல்ல வரனுக்காக அலைந்து கொண்டிருந்த பெண்ணைப் பெற்றவர் ஒருவர் அங்கு வந்து சேர்ந்தார். தாயாரை இனிமேல் ஏமாற்ற முடியாது என்று கண்டு கொண்ட அவன் பெண் பார்க்கப் போனான். பெண் அவனுக்கு ரொம்பவும் பிடித்திருந்ததால் அவ்வருஷமே கல்யாணமும் தடபுடலாக நடந்தது.

தான் இறப்பதற்குள் கல்யாணம் செய்து பார்த்துவிட வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்த அவன் தாயாருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கோ எடுத்து வைக்க இடமேயில்லை.

சீக்கிரத்திலேயே அவனுக்கு நல்ல உத்தியோகமொன்று கிடைத்தது. மாதம் இருநூற்றைம்பது ரூபாய் சம்பளத்தில் சென்னையில் பிரபல ஐரோப்பியக் கம்பெனி யொன்றில் அதன் மானேஜரின் அந்தரங்கக் காரியதரிசி பதவி கிடைத்ததும் அவனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. குறிப்பிட்ட தினத்தில் மனைவியை அழைத்துக் கொண்டு சென்னைக்குச் சென்றான். அவன் தங்கையைக் கிராமத்திலேயே விவாகம் செய்து கொடுத்திருந்தபடியால் அவளிடமே தாயாரை விட்டு விட்டுத் தன் வீட்டையும் அவர்களிடம் ஒப்படைத்தான்.

சென்னை நகர வாழ்க்கை அவனுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது. அவர்கள் வாழ்க்கையே எப்போதும் ஒரே சிரிப்பும் கொம்மாளமுமாகத் தானிருந்தது. நாள் தவறாமல் மாலையில் கடற்கரைக்குப் போவதும் வாரத்திற் கொரு முறை சினிமாவுக்குப் போவதும் அவர்களுக்குச் சர்வ சகஜமாகிவிட்டன. மனைவியை அழைத்துக் கொண்டு மூன்று நான்கு மாதங்களுக்கு

ஒரு முறையாவது ஊர் சென்று தாயார், தங்கை, அவள் புருஷன், குழந்தைகள் எல்லோரையும் அவள் பார்த்து வருவதுண்டு. வருஷத்துக்குக் குறைந்த பட்சம் இரண்டு தடவையாவது அவளுடன் வேட்டகம் செல்லாமல் அவன் இருந்தது கிடையாது. மொத்தத்தில் அவர்கள் விரும்பிய படியே மூன்று ஆண்டுகளும் கழிந்தன.

அந்த வருஷம் தான் அவன் ஆபீஸ் குமாஸ்தா ஒருவர் அவன் பக்கத்து வீட்டுக்குக் குடி வந்தார். நாளடைவில் அவனுக்கு அவருடன் நெருக்கமான பழக்கம் உண்டாகி விட்டது. இதைப் போலவே அவர்கள் இருவருடைய மனைவிமார்களும் அந்நியோன்யமாகப் பழகி விட்டனர். அவர்கள் இருவரும் வெகு சீக்கிரத்தில் இவ்வளவு ஒற்றுமையுடன் பழகக் காரணம் இல்லாமற் போகவில்லை. பக்கத்து வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்துள்ள பெண்மணியின் எட்டு மாத ஆண் குழந்தை அவளை ரொம்பவும் கவர்ந்து விட்டது. வட்ட நிலா போன்ற முகமும், எப்போதும் துறு துறு வென்று விஷமம் செய்யத் துடிக்கும் அங்கங்களும், மொழு மொழு வென்ற தேகக் கட்டும் கொண்ட அந்தக் குழந்தை அவளைக் காந்தம் போல் ஆகர்ஷித்ததில் வியப்பில்லை. பொன்னிறமான அக் குழந்தையை வாரி யெடுத்து அணைத்துக் கொள்ளுவதில் அவளுக்கு ஒரு அலாதி ஆனந்தம் ஏற்படாமலில்லை. ஆகவே, அவள் அந்தக் குழந்தையை அடிக்கடி தன் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு வருகிறதுண்டு.

அவள்தான் அப்படி என்றால் அவனுக்கும் அந்தக் குழந்தையின் மீது விசேஷமான ஒரு அன்பு ஏற்பட்டு விட்டது. தினம் ஒரு தடவையாவது அதைப் பார்க்காவிட்டால் அவனுக்குத் தூக்கம் வராது. தன் காமிராவால் வேண்டிய மட்டும் அந்தக் குழந்தையைப் படமெடுத்தான். அந்தக் குழந்தை கிட்டத் தட்ட அவர்கள் வீட்டிலேயே தான் வளர்ந்து வந்தது.

அன்று ஒரு நாள் மாலை ஆபீஸிலிருந்து வந்தவன் தன் மனைவி தன்னைக் கூடக் கவனிக்காமல் அந்தக் குழந்தையுடன் கொஞ்சிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. வேடிக்கையாக, "இன்னும் கொஞ்ச நாள் போனால் குழந்தையை உன்னுடையது என்று சொல்லி விடுவாய் போலிருக்கிறதே" என்றான். அவளும் 'களுக்' கென்று சிரித்து விட்டாள். "நமக்கு ஒன்று பிறக்கிற வரைக்கும் இது நம்முடையதுதான்" என்று சொல்லி விட்டு அவள் அவனைக் குறும்பாகப் பார்த்தாள்.

இந்த வார்த்தைகளும் பார்வையும் அவனுக்குப் புரியாமல் போகவில்லை.

இந்தச் சமயத்தில் பக்கத்து வீட்டுப் பையன், "மாமீ, மாமீ !" என்று கூவிக் கொண்டே உள்ளே வந்தான்.

"ஏண்டா அம்பி?"—அவள் கனிவான குரலில் கேட்டாள்.

"பம்பாயிலிருந்து எங்க அத்தை வந்திருக்கா. அதனாலே அம்மா என்னை பாப்பாவைக் கையோட எடுத்துண்டு வரச் சொன்னா"— விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்ததால் மூச்சு வாங்க, தட்டுத் தடுமாறிக் கொண்டு சொன்னான்.

அவனிடம் குழந்தையைக் கொடுத்து விட்டுக் கணவனுக்குக் காப்பி எடுத்துக் கொண்டு வர அவள் உள்ளே போனாள். ஏதோ தோன்றவே அவனும் அவளைத் தொடர்ந்து சமயலறைக்குச் சென்றான்.

"பார்த்தாயா, பிறருடைய குழந்தை பிறருடைய குழந்தைதானே......" என்று ஏக்கத்தோடு சொன்னான்.

---



வீட்டுச் சொந்தக்காரர் (குடியிருக்க வருகிறவரிடம்):—ஸார், நான் இப்போதே சொல்லி விடுகிறேன். எனக்குச் சத்தமே பிடிக்காது. குடியிருக்க வருகிறவர்களிடம் பூனை, நாய், கிளி, ஹார்மோனியம், ரேடியோ இவைகளில் எது இருந்தாலும் பிடிக்காது; தெரிகிறதா?

குடியிருக்க வருபவர்:—என் பவுண்டன் பேனா எழுதும்போது கொஞ்சம் 'கிர் கிர்' என்று சத்தம் கேட்கும். அதனால் பாதகமில்லையே!

ஒரு குறையும் இல்லாமல் சந்தோஷமாக வாழ்ந்து வந்த அந்தத் தம்பதிகள், வாழ்க்கையில் தங்களுக்கு ஒரு பெரிய குறை இருப்பதாக உணர்ந்து கொண்டார்கள். தனியாக, ஒரு உபத்திரவமும் இல்லாமல் குடும்பம் நடத்த வேண்டுமென்று மூன்று வருஷத்திற்கு முன் நினைத்த அவர்கள் இப்போது குழந்தை பெற்றுக் கலகலப்புடன் குடும்பம் நடத்தப் பிரியப்பட்டார்கள்.




அன்று வந்திருந்த கடிதம் அவனைத் தூக்கிவாரிப் போட்டது. அம்மாவுக்கு உடம்பு அசௌகரியமாயிருப்பதாயும், தன் கணவனுக்குத் திருச்சியில் வேலை கிடைத்திருப்பதால் இன்னும் இரண்டு வாரங்களில் தாங்கள் எல்லோரும் திருச்சி போகப் போவதாயும், இதனால் வேலையை ராஜினாமா செய்து விட்டு ஊரோடு வந்து விடுவதுதான் சிலாக்கியம் என்றும் அவன் தங்கை எழுதியிருந்தாள். வேறு வழியில்லாததால் உத்தியோகத்தை ராஜினாமா செய்து விட்டு ஊருக்குக் கிளம்பினான்.

வீட்டுக்கு வந்து பார்த்தவன் உண்மையில் திடுக்கிட்டுப் போனான். அவன் தாயார் படுத்த படுக்கையாகக் கிடந்தாள். டாக்டர் வந்து அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தார். இன்னும் இரண்டு மூன்று தினங்களில் உடம்பு சரியாகிவிடும் என்று சொன்னார். அம்மா எப்போதும், "என் குழந்தைக்குக் குழந்தை பிறந்து பார்க்கணும்," என்று சொல்லிக் கொண்டிருப்பதாக அவன் தங்கை சொல்லவே அவனுக்குத் துக்கம் நெஞ்சை யடைத்தது.

அதிருஷ்ட வசமாக அவன் தாயின் உடம்பு சௌகரியமாயிற்று. தங்கை குடும்பம் திருச்சி சென்றது. நல்ல வேளையாக ஒரு வருஷத்திற்குப் பிறகு அவன் மனைவி கர்ப்பமானாள். அவனுக்குக் கொள்ளை மகிழ்ச்சி. அவன் மனைவி தன் சந்தோஷத்தை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. அம்மாவுக்கு உண்டான ஆனந்தத்திற்கோ ஈடு சொல்ல முடியாது.

வளைகாப்பு, சீமந்தம் எல்லாம் விமரிசையாக நடந்தன. நல்ல நாள் பார்த்துப் பிரசவத்திற்கு அழைத்துக் கொண்டு போக வேட்டகத்திலிருந்து மாமனார் வந்திருந்தார். குறிப்பிட்ட நேரம் நெருங்கியதும் புறப்படுவதற்கு ஆயத்தம் செய்தாள். கணவனிடம் சொல்லிக் கொள்வதற்காக அவள் அவன் அறைக்குச் சென்று "நான் வரட்டுமா?" என்று கேட்டாள். அவள் குரல் தழுதழுத்திருந்தது.

"சரி, போய்விட்டு வா. உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள். உங்கள் ஊரிலேதான் லேடி டாக்டர் இருக்கிறாளே. அவளிடமே அடிக்கடி உடம்பைக் காட்டு. நானும் உன்னைப் பார்க்க வருகிறேன்" என்று சொன்னான்.

இந்தச் சமயத்தில், "நாழிகை யாகிவிட்டது. கிளம்ப வேண்டியதுதான்" என்று அவசரப்படுத்தினார் அவள் மாமனார். அவள் நகர்ந்தாள். அறை வாசற்படி யருகே போனதும் திரும்பி அவனை ஒரு முறை பார்த்தாள். அவனும் அவளைப் பார்த்தான். வண்டியும் கிளம்பிற்று.

வாரம் தவறாமல் மனைவியைப் பார்க்கப்போகும் அவன் அன்றும் வேட்டகம் போனான். வந்ததும் வராததுமாக அவன் கேட்ட அச்செய்தி அவனை ஒரு உலுக்கு உலுக்கி விட்டது. அவள் அவன் வருவதற்குச் சற்று முன்புதான் பிரஸவித்திருந்தாள். ஆனால் பிறந்தவுடனேயே குழந்தை இறந்து விட்டது. அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. பேரிடியால் தாக்கப்பட்டவன்போல உட்கார்ந்து விட்டான்.

எல்லோருக்குமே வருத்தமாகத்தானிருந்தது. இப்படியாகும் என்று நினைக்கவில்லை. ஆனால் அவளாவது பிழைத்தாளே என்று சமாதானப் படுத்திக் கொண்டார்கள்.

அவன் ஊருக்கு வந்தான். தாயாரிடம் சொன்னான். அவள் அதிர்ச்சியடைந்தாள். கைக்கு எட்டியதை வாய்க்கெட்டாமல் பண்ணிவிட்டதே தெய்வம் என்று மனம் நொந்தாள். "என்ன செய்வது! நம்ம அதிருஷ்டம் அவ்வளவுதான். போகட்டும் இதோடேயாவது விட்டதே! அதை நினைச்சுத்தான் ஆறுதலடையணும்" என்று கூறி அவனையும் தேற்றினாள்.

ஒருவாரம் கழித்து அவன் அங்கு போனான். மனைவியைப் பார்த்தான். அவளைப் பார்த்ததும் அவனுக்கு அழுகை வந்து விட்டது.

"அழுது என்ன பிரயோஜனம்? வீணாக உடம்பை அலட்டாதே" என்றாள்.

"இல்லே, இத்தனை பேர் ஆசையிலும் தெய்வம் இப்படி மண்ணை அள்ளிப்

போடும் என்று நான் நினைக்கவில்லை! தலைச்சன் பிரசவத்திலே குழந்தையைப் பறி கொடுத்துவிட்டு நான் எப்படி ஊருக்கு வந்து, எல்லாருடைய முகத்திலேயும் விழிக்கிறது என்றுதான் எனக்குப் புரியவில்லை.''

சாதாரணமாக அழுது கொண்டிருந்தவள் திடீரென்று விக்கி விக்கி அழ ஆரம்பித்து விட்டாள். அவளைச் சமாதானம் செய்ய அவன் பட்டபாடு! அதை விவரிக்க முடியாது. அதற்கு மேல் அங்கு இருப்புக் கொள்ளவில்லை. அன்று மாலையே ஊருக்கு வந்து சேர்ந்தான்.

மூன்று மாதங்களானதும் அவன் மனைவியை அவள் தகப்பனார் அழைத்துக் கொண்டு வந்தார். யதேச்சையாக அன்று அவன் தங்கையும் வந்து சேர்ந்தாள்.

அவன் தங்கை துக்கத்தோடு சொன்னாள்:—''எல்லோரும் ஒரேயடியாகச் சந்தோஷப் பட்டோமோ இல்லையோ, அது தெய்வத்துக்கு ஆகவில்லை. ஸீமந்தத்துக்கு வந்துட்டுப்போன உடனே குழந்தைக்காக வெள்ளிப் பாலடை, வெள்ளிப் பவுடர் டப்பா, பனிக் குல்லா, சட்டை எல்லாம் வாங்கி வைத்தேன். இப்படி என்னை ஏமாற்றி விடும் என்று நான் கண்டேனா, ஹூம்! அடுத்த குழந்தைக்காவது உபயோகப்படாமல் போயிடுமா.........?''

அவள் ஒரு பெருமூச்சு விட்டாள்.

பக்கத்திலிருந்த அவனுக்கும் அவன் மனைவிக்கும் அழுகையே வந்து விட்டது.

''அடுத்த குழந்தைக்காவது உபயோகப் படாமல் போயிடுமா......?'' இவ் வார்த்தைகள் இடைவிடாமல் அவன் காதில் லேசாக ஒலித்தன.

முடிவில் அவன் மனதில் ஆசைப் புயல் உத்வேகத்துடன் வீசியது. ''எனக்கென்று ஒரு அழகான குழந்தை என் இருளடைந்த வாழ்க்கையைப் பிரகாசப் படுத்தும் குழந்தை......என் தாய், தங்கை, மனைவி, மாமனார், மாமியார் இவர்கள் ஆசையையெல்லாம் நிறைவேற்றி வைக்கும் குழந்தை'' எப்போதும் அவன் எண்ணம், நினைவு, யோசனை, சிந்தனை, கற்பனை எல்லாமே இது தான்!

அவன் ஆசை வீண் போகவில்லை. அவன் மனைவி கர்ப்பவதியானாள். எல்லோரும் இச் செய்தி கேட்டு மகிழ்ச்சி யடைந்தனர்.

மாதம் நெருங்கிக் கொண்டிருந்தது. பிரசவத்திற்கு அவளைப் பிறந்தகத்துக்கு அனுப்ப அவனுக்கு விருப்பமில்லை. தலைச்சன் பிரசவம் அப்படி ஆனதால் அந்த வீட்டுக்கு ராசியில்லை என்று அவன் தீர்மானித்தான். ஆகவே அவளை அவள் பிறந்தகத்திற்கு அனுப்பவில்லை. தாயாருக்கு வயதாகிவிட்டதால் உதவிக்காகத் தங்கையை அழைத்துக் கொண்டு வந்தான்.




''ஏய்! யாரப்பா நீ? அங்கே போர்டு போட்டிருப்பதைப் பார்க்கவில்லையா? யாரைக் கேட்டுக் கொண்டு உள்ளே நுழைந்தாய்?''

''உங்களிடம் உத்தரவு கேட்கிறதுக்குத்தான் வந்தேனுங்க!''

நாள் ஓடிக் கொண்டிருந்தது. பிரசவத்துக்கு நாள் நெருங்க நெருங்க அவனைக் கவலை பிடுங்கித் தின்றது.

* * *

திடீரென்று வீறிட்டு அலறும் சப்தம் கேட்டதும் அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அப்படியே எழுந்தான். பேந்தப் பேந்த விழித்துக் கொண்டே தன் வீட்டைப் பார்த்தான். அவன் தங்கை ஓடி வந்து கொண்டிருந்தாள்.

அவனுக்குத் தலை சுழன்றது, மார்பு படபடத்தது. உடம்பு வெட வெட வென்று நடுங்கியது, உடம்பின் மீது அனற்காற்று தவழ்வது போலிருந்ததாலோ என்னவோ உடல் முழுதும் குப்பென்று வியர்த்தது.

''அண்ணா, பிள்ளை பிறந்திருக்கிறது!'' என்று அவள் இரைந்து சொன்னாள், திண்ணையில் நின்றபடியே. அவள் முகம் பெருமிதத்தால் மலர்ந்திருந்தது.

அப்பொழுதுதான் அவனுக்கு உயிர் வந்தது. உள்ளத்திலே குமுறிக் கொண்டிருந்த சந்தேகத்தையெல்லாம் வெளியில் கொண்டு தள்ளுவது போல நீண்ட பெருமூச்சொன்று விட்டான். அவள் சொன்னதை ஊர்ஜிதம் செய்வது போலக் குழந்தை வீறிட்டு அழுதது. மலர்ந்த மனதைப் பிரதிபலிக்கும் புன்னகை விளையாடும் முகத்துடன் அவன் தன் வீட்டை நோக்கி விரைவாக நடந்தான்.

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

★ ★ ★

- இருபத்தோரு தேசங்களைச் சேர்ந்த பிரசித்தமான பத்திரிகைகள் ஒத்துழைத்து அகில உலகச் சிறு கதைப் போட்டி ஒன்று நடத்துகிறார்கள்.
- இந்த முயற்சியை ஆரம்பித்த பத்திரிகை நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்.
- இந்தியா தேசத்தில் மேற்படி சிறு கதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புது டெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- இந்தியாவின் முக்கியமான பதினொரு பாஷைகளிலாவது ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் தமிழ் எழுத்தாளர்கள் இந்த அகில உலகச் சிறு கதைப் போட்டியில் கலந்துகொள்ளலாம்.
- இந்தியா தேசத்தில் எழுதப்படும் கதைகளில் சிறந்த எட்டு கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கிறது. இதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அகில உலகச் சிறுகதைப் போட்டிக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இரண்டு அல்லது மூன்று கதைகள் பொறுக்கி அனுப்பப்படும். இப்படி மொத்தம் சேரும் 52 கதைகளில் எல்லாவற்றிலும் சிறந்த கதைக்கு "நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்" பத்திரிகை ஐயாயிரம் டாலர் (ரூ. 22,250) பரிசு அளிக்கும்.
- மேற்படி அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குத் தமிழ் நாட்டிலிருந்து கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பைக் "கல்கி" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- சிறு கதைகள் சுமார் மூவாயிரம் வார்த்தைகள் அடங்கியதாக இருப்பது நலம். நாலாயிரம் வார்த்தைகளுக்கு மேலே போகக் கூடாது.
- 1950-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 30-ந் தேதிக்குள் மேற்படி சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- போட்டிக்கு அனுப்பும் கதைகள் சொந்தக் கற்பனையென்று கதை ஆசிரியரின் உறுதி மொழி சேர்க்கப்படவேண்டும்.
- கதையின் விஷயம் எதைப்பற்றி வேண்டுமானாலும் இருக்கலாம். காதல், குரோதம், நன்றி, வாஞ்சை, தேசபக்தி, தியாகம், லோபம், துரோகம், கலியாணம், மரணம்,— ஆகிய எந்த விஷயமானாலும் சரி; உணர்ச்சிப்பெருக்கு, அமைப்புத்திறன், வாழ்க்கைப் பண்பு, நடையின் சிறப்பு, கதையின் ஓட்டம், — ஆகிய சிறுகதையின் அம்சங்களே முக்கியமாகக் கருதப்படும்.
- ஒரே ஆசிரியர் போட்டிக்கு இரண்டு கதைகள் அனுப்பலாம்.
- தமிழ்க் கதைகளை அனுப்ப வேண்டிய விலாசம்:—ஆசிரியர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை.
- தயவு செய்து உறையின் மேல் "**அகில உலகச் சிறுகதைப் போட்டி**" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தகுந்த நீதிபதிகளை நியமனம் செய்வார்.
- **மேற்படி போட்டிக்காக வரும் தமிழ்க் கதைகளை ஸ்ரீ தேவதாஸ் காந்தி நியமிக்கும் நீதிபதிகள் பரிசீலனை செய்து அவற்றில் சிறந்த நாலு கதைகளைத் தேர்ந்தெடுத்து மத்திய பரிசீலனைக் கமிட்டிக்கு அனுப்பி வைப்பார்கள். இந்த நாலு கதைகளுக்கும் "கல்கி" நிர்வாகிகள் ஒவ்வொன்றுக்கு ரூ. 250 வீதம் பரிசு அளிப்பார்கள்.**
- அகில இந்தியப் போட்டிக்காகப் பஞ்சாயத்தார் தேர்ந்தெடுக்கும் நாலு கதைகளையும் அவற்றின் ஆசிரியர்கள் தாங்களேயோ, பிறரைக் கொண்டோ ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தரவேண்டும்.
- பரிசுக்காகத் தெரிந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியான கதைகள் "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அப்படிப் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 50 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பிப்பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்பவேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.

# குயிலோசை

மா. கிருஷ்ணன்

குயிலோசை யில்லாது வஸந்தகால மேது? தமிழில் மட்டுமல்ல, வடமொழியிலும், ஹிந்தியிலும், இதர இந்தியபாஷைகளிலும், ஆங்கிலத்திலும் கூட, குயிலோசையே வஸந்தகாலத்தின் அறிகுறியாகும். (ஆங்கிலத்தில் பெயர் பெற்றது நமது குயிலில்லை, வேறு குயில்.) அநேக நூற்றாண்டுகளாக நமது புலவர்கள் குயிலின் குரலினிமையைக் கொண்டாடி, அருமையான தீந்தமிழ்ப் பாக்களில் அதை இளமாதர் மொழிக்கு உவமை கூறியுள்ளனர். உண்மையிலே குயிலின் குரல் அத்தனை இன்சுவை கொண்டதில்லை. காமத்தைப் போலவே அதுவும் வஸந்த காலத்தில் புத்துயிர் பெறுவதால்தான் இந்த உவமானம் பொருத்தமுடையது.

குயிலினும் இனிய குரலுள்ள பல பறவைகளைச் சாதாரணமாகக் கேட்கலாம். வானம்பாடிக்கும், 'ஷாமா' என்ற காட்டில் வாழும் குருவிக்கும், கருங்குருவியினத்தைச் சேர்ந்த சிலவற்றிற்கும், இன்னும் சில பட்சிகளுக்குமுள்ள மதுர கண்டம் குயிலுக்குக் கிடையாது. ஆனாலுமென்ன, வஸந்த காலத்திற்கும் தெளிந்த இனிய கீதத்திற்கும் என்ன சம்பந்தம்? அக்காலத்திற்கு ஒருவித மனக்கலக்கமும், கிளர்ச்சியும், ரத்தத்திலோடும் அதிருப்தியுமே அடையாளம்: இவையெல்லாம் தொனிக்கும் குயிலின் குரலே அந்தக் காலத்தின் குரல்.

சித்திரை பிறந்ததும் சோலைகளிலும், தோப்புகளிலும், செடியடர்ந்த இடங்களிலும் குயிலோசை முழங்கும். பிறகு ஆவணி மாதம் வரையில் எப்பொழுதும் அதைக் கேட்கலாம். இளவேனிற் காலமே வஸந்த ருது என்று நமக்குள் ஒரு கொள்கை — வேனிற் காலம் முதிர்ந்து ஓயுமட்டும் சமனில இடங்களில் வஸந்த வாடை வீசும், குயிலின் குரலுமொலிக்கும்.

அதிகாலையிலும், மற்றெல்லாப் பிராணிகளும் வெயில் தாங்காது நிசப்தமாக இருக்கும் இடைமத்தியான வேளையிலும், பொழுது சாயும்போதும், குயில்கள் படிப்படியாய் உயரும் தங்கள் பாட்டைப் பாடும். மற்ற வேளைகளிலும் கலகலவொலி கொண்ட குரலில் பரபரப்புடன் பலவிதமாகச் சப்திக்கும். நிலாக் காலங்களிலோ கேட்க வேண்டியதில்லை. இரவெல்லாம் குயில்கள் கூக்குரலிடும்.

"சோமன் புறப்படத் தென்றலும் வீசத்
துயிலொழிய
யாமங்கள்தோறுங் குயில் வந்து கூவும்
அந்நேரத்திலே"

என்று காளமேகப் புலவர் பாடியது வஸந்தகால அமைதியின்மையை எப்படி எடுத்துக் காட்டுகிறது!

குயிலின் குரலை நுட்பமாக ஆராய்ந்த நம் புலவர்கள், அதன் தோற்றத்தைக் கவனித்ததாகத் தெரியவில்லை. குயில் கறுப்பாக இருக்கு மென்றே அவர்கள் சொல்லுகிறார்கள். கறுப்பிலும் ஏழு வகைகளுண்டு. ஆண் குயில் இதில் இரண்டாந் தரமானது என்று சொல்லலாம். மையிருட்டின் சம்பூர்ணக் கருமையில்லை, காகத்தினும் அடர்ந்த கறுப்பு, அதன் சிவந்த கண்களையும் பசிய அலகையும் எடுத்துக் காட்டும் பளபளப்பான கறுப்பு. மேலும், பெண் குயிலை இந்தப் புலவர்கள் கண்டதில்லை போலும். குயிலின் பேடை ராஜாளி போல் வெண்புள்ளி கரும்புள்ளி படர்ந்திருக்கும். ஆணும் பேடையும் பார்வைக்கு வெவ்வேறு வகைப் பட்சிகளைப் போல் தென்படும் — அவ்வளவு வர்ண மாறுபாடு அவைகளுக்குண்டு.

எல்லாவிதப் பிராணிகளிடத்தும் மக்கட் பேற்றைப் பாதுகாத்து வளர்க்கும் பொறுப்பைச் சகஜமாய்க் காணலாம். குயில்களுக்கு இந்தக் கவலை கிடையாது. பெண் குயில் திருட்டுத்தனமாகக் காகத்தின் கூட்டில் தன் முட்டைகளை யிட்டு விடும். பிறகு அடைகாத்துக் குஞ்சு பொரித்து இளங்குயிலுக்கு இரை தேடிக் கொடுத்து வளர்ப்பதெல்லாம் மாற்றாந் தாய் தந்தை பொறுப்பு. காகங்கள் வயது வந்த குயில்களைக் கண்ட சமயமெல்லாம் விரட்டும்; ஆனால் குயிலின் முட்டையையோ குஞ்சையோ தம்முடையதாகவே பாராட்டி வளர்க்கும்.

காதல் எதையும் எதிர்பாராதது. தன் வாழ்க்கையில் இல்லற பாரத்தை யறியாத குயிலின் குரல் வஸந்தத்தின் குரலாக ஒலிப்பது பொருத்தமே.



★ ★ "சிலருக்கு ஜுரம் வந்தால் வெளியே தெரியாது; உள்ளூற இருந்து ஜன்னி வரையில் வளர்ந்து, கடைசியில் ஒரேயடியாக ஆளைக் கொன்றுவிடும். அதே போலத்தான் காதலும் ..........!" ★ ★

# மிஸ்டர் அப்பு

கோணல்

## 4. போதாத காலம்!

அன்று அப்பு சங்கரனைத் தேடிக் கொண்டு வந்தான். அவனுக்கே தெரியும், அந்தச் சமயத்தில் சங்கர் வீட்டில் இருக்க மாட்டான் என்று. அவன் அப்பொழுது வந்தது பிரேமாவைத் தனிமையில் காணவேண்டும் என்ற உள் நோக்கத்துடன்தான். அப்படிப் பட்ட சந்தர்ப்பம் அகப்படுவது அரிதல்லவா! அகப்பட்ட அந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடுவானா, அப்பு!

"சங்கர்!" என்று கூப்பிட்டுக் கொண்டே மாடி அறையில் நுழைந்தான் அப்பு. "நமஸ்காரம், வாருங்கள்" என்று முகம் மலர்ந்து அவனை வரவேற்றாள் பிரேமா.

அப்பு சிரித்துக் கொண்டே "இருக்கட்டும். சங்கரைப் பார்த்து விட்டுப் போகலாம் என்று வந்தேன்" என்றான்.

"அண்ணாவையா? அவனுக்கு ஏதோ ஒரு சங்கத்தில் விருந்துபசாரமாம். ஐந்து மணிக்குக் கூட்டமாம். அதற்காக இரண்டு மணிக்கே போய் விட்டான். மிஸ்டர் அப்பு! பொதுஜன சேவையில் சொற்பொழிவுத் தியாகத்திற்காகப் பிறந்த ஒரே ஒரு பிறவி என்னுடைய அண்ணாதான்" என்றாள் குறும்பாகச் சிரித்துக் கொண்டே.

"ஆமாம், அதிலென்ன சந்தேகம்! பேசுவதும் ஒரு தியாகம்தான். ஆனால் மேடை ஏறிப் பேசுகிறவர்களில் அனேகம் பேர் காரியாம்சத்தில் எதையும் செய்து காட்ட மாட்டேனென்கிறார்களே என்கிற குறைதான் எனக்கு. நான் அப்படி இல்லை. நான் எந்தக் கூட்டத்தில் பேசினாலும் என் கையில் ஒரு திட்டம் இருக்கும். உதாரணமாக என்னுடைய நான்கு வருஷ திட்டத்தில் உள்ள இருபத்தொன்பது அம்சங்களில் ஒன்றைக் கூட விடாமல் காரியாம்சத்தில் செய்துகாட்ட வேண்டும் என்று நினைக்கிறேன். அதனால் நான் அதிகமாகக் கூட்டங்களில் பேசுவதில்லை" என்றான் அப்பு.

"உங்கள் பேச்சைக் கேட்க வேண்டுமென்று எனக்கு நெடுநாட்களாக ஆசை. எங்கள் கிளப்பில் கூட உங்களைப் பற்றிச் சொன்னபோது அவர்களெல்லோரும் உங்களை ஒரு முக்கியமான விழாவுக்கு அழைத்துப் பேசச் சொல்ல வேண்டுமென்று விரும்பினார்கள். நீங்கள் மூன்று தடவை உலகத்தைச் சுற்றிப் பார்த்திருக்கிறீர்கள். உங்கள் அனுபவத்தைக் கேட்க எங்களுக்கு ஆசையாய் இருக்காதா!"

"அனுபவம் அசாத்தியமாய்த்தான் இருக்கிறது. ஆனால் நான் அதிகமாகக் கூட்டங்களில் பேசுவதில்லை. உங்கள் கிளப்பில் மிகவும் வற்புறுத்தினால் அவசியம் வந்து ஒரு நாள் பேசுகிறேன்."

"ரொம்ப வந்தனம்...."

"நான் உன்னோடு சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தால் பாதகமில்லையே...." என்றான் அப்பு தயங்கியபடியே.

"அதில் என்ன தவறு! நீங்கள் தாராளமாகப் பேசலாம். உங்களோடு பேச வேண்டுமென்றுதானே எனக்கும் ஆவல்! நீங்கள் மூன்று முறை உலகம் சுற்றிய அறிவாளி. உங்களோடு பேசுவதில் எனக்குப் பெருமைதான்!"

பொட்டைக் கண்ணனின் குறியில் ஆகாயத்தில் பறக்கும் பறவை அடிபட்டு விழுந்தது போலிருந்தது பிரேமாவின் வார்த்தைகள் அப்பொழுது அப்புவுக்கு. "இப்படிப்பட்ட வித்தியாசமில்லாத மனப்பான்மைதான் உயர்ந்த ஸ்திரீ ரத்தினங்களுக்கு அழகு. பிரேமா! உன்னுடைய பாட்டு எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. அன்று நான் கேட்ட பாட்டு இன்னும் என் காதில் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கிறது" என்றான் புகழ்ச்சியாக.

பிரேமா சிறிது கூச்சத்தோடு "நீங்கள் என்னை ஏதாவது பரிகாசம் செய்கிறீர்களா!" என்றாள்.

"பரிகாசமா! உன் பாட்டு எனக்கு ரொம்ப ரொம்பப் பிடித்திருக்கிறது. ரேடியோவில் சராசரி மாதம் மூந்நூறு பெண்களுக்கு மேல் பாடுவதாக ஒரு தமிழ்நாட்டு ரேடியோ ரஸிகர் கணக்கு எடுத்திருக்கிறார். அவர்கள் பாட்டில் ஒன்றாவது என் மனதிற்குத் திருப்தி தரவேண்டுமே! இல்லை. உன் பாட்டைக் கேட்டபிறகு வேறு ஒருவர் பாட்டையும் கேட்கக்கூடாது என்று தீர்மானம் செய்து இரண்டு நாட்களுக்கு முன்புதான் என் ரேடியோவை விலைக்கு விற்று விட்டேன்."

"அப்படியா! அடாடா! வருகிற ஏப்ரல் மாதம் பதின்மூன்றும் தேதி மத்தியானம் ஒரு மணியிலிருந்து ஒன்றேகால் மணி வரையில் நான் பாடப் போகிறேனே!" என்றாள் பிரேமா ஆச்சரியத்தோடு.

"அப்படியா! எனக்குத் தெரியாதே! சரி, சரி! அப்படி என்றால் கூடிய சீக்கிரம் வேறொரு ரேடியோ வாங்கி விடுகிறேன்."

"உங்களுக்குச் சங்கீத ஞானம் கூடக் கொஞ்சம் உண்டு போலிருக்கிறது."

"ஆமாம், கொஞ்சம்தான் சங்கீத ஞானம் உண்டு. அந்தக் கொஞ்சம் இருப்பதையும்

இல்லை என்றே வைத்துக் கொள்ளலாம். சங்கீதம் பாடுவதற்கே ஞானம் அவசியமில்லை என்று நினைக்கும்போது கேட்பதற்கு எதற்காக வேண்டும்! சங்கீதத்தில் முக்கியமான குணம் என்னவென்றால் அதில் ஒரு வசீகரத் தன்மை வேண்டும். அந்த வசீகரத்தன்மை உன்னிடம் இருக்கிறது. இளகாத களி மண் மூளையைக் கூட அது இளக வைத்து விடும். அதுதான் சங்கீதத்தின் லட்சணம். உதாரணமாக என் மூளை இரும்பைப் போல அவ்வளவு கடினமானது. உன் பாட்டைக் கேட்டதும் என் மூளையே இளகி விட்டதென்றால்....''

பிரேமாவுக்கு அப்பு தன்னை இவ்வளவு தூரம் புகழ்வது ஒரு புறம் வெட்கமாகவும் ஒரு புறம் பெருமையாகவும் இருந்தது. ''போன வருஷம் எங்கள் கிளப்பிலே 'அல்லியின் ஆட்சி' என்ற நாடகத்திலே நான் தோழியாக 'ஆக்ட்' பண்ணினேன். எனக்கு ஏழு பாட்டுக் கொடுத்திருந்தார்கள். நான் பாட ஆரம்பித்தால் ஜனங்கள் விடாமல் கை தட்டுவார்கள். அவ்வளவு அப்ளாஸ்! அவர்கள் கை தட்டலும் சத்தமும் நான் பாடுவதை நிறுத்தினால்தான் ஓயும். இதனால் எங்கள் கிளப்புக் காரியதரிசி மூன்று பாட்டுக்கு மேல் பாடவிடாமல் நிறுத்தி விட்டான். அண்ணா அதைப் பார்த்திருந்தால் பொறாமையால் வெடித்தும் போயிருப்பான். அவனும்தான் நாள் தவறாமல் பொதுக்கூட்டத்தில் பேசுகிறானே! ஒரு அப்ளாசாவது வாங்கி இருப்பானா?''

''எனக்குத் தெரியும், பிரேமா! உன் மாதிரி சாதுர்யமும் புத்திசாலித்தனமும் அவனுக்கு அவ்வளவு போதாது. இருந்தாலும் அவனும் ஒரு வகையில் கெட்டிக்காரன்தான்!''

''அவன் கெட்டிக்காரத் தனத்தை நீங்கள்தான் மெச்சிக்கணும்! எனக்கென்னவோ அவன் போக்கே பிடிப்பதில்லை; அவன் கொள்கைகளே விளங்குவதில்லை.''

''ஆமாம், எனக்குக்கூட அவன் கொள்கை பிடிப்பது மில்லை; பிடிபடுவதுமில்லை. அதற்காகத்தான் என் நாலு வருஷ திட்டத்தையும் அதன் இருபத்தொன்பது அம்சங்களையும் அவனுக்கு விளக்கி அவனை ஒரு வழிக்குக் கொண்டு வர உத்தேசித்திருக்கிறேன்.''

''நீங்கள் அவனை ஒரு வழிக்குக் கொண்டு வந்து விடுவீர்கள் என்று எனக்குத் தெரியும்.''

''அவனை ஒரு வழிக்குக் கொண்டு வராமலா இருக்கப் போகிறேன்! தவிர உன் கொள்கையும் எனக்குப் புரிவது கஷ்டமாய் இருக்கிறது; பிரேமா....;'' என்றான் அப்பு நயமாக.

''என் கொள்கையா!''

''ஆம், நீ கல்யாணமே செய்து கொள்ளப் போவதில்லை என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறாயாமே!''

''ஓ! அதுவா! அதற்குக் காரணம் இருக்கிறது.''

''ஏதாவது காரணமில்லாமலா இருக்கும்! காரணம் இருக்கலாம். ஆனால் எந்தக் காரணமாக இருந்தாலும் அந்தக் காரணம் தவறு என்றுதான் நான் சொல்லுவேன்.''

''எப்படித் தவறாகும்!''

''நீ இப்பொழுது கல்யாணம் வேண்டாம் என்கிறாய்! எப்பொழுதுமே இந்தச் சித்தம் சரியாய் இருப்பதில்லை. எதிர்பாராத விதமாக ஒரு காதல் விழுந்து விடுகிறது என்று வைத்துக் கொள்...''

''காதல் விழுவாவது பறக்கவாவது! அது எப்படி விழும்...!''

''அதைத்தானே சொல்ல வருகிறேன்! உதாரணமாக நீ இருக்கிறாய்...நானும் இருக்கிறேன்...நான் அடிக்கடி இங்கு வந்து போய்க் கொண்டிருக்கிறேன்....''

''தாராளமாக வந்து போய்க் கொண்டிருங்கள், யார் வேண்டாமென்றார்கள்!''

''சொல்கிறேன் கேளு!''




சிறிது நேரம் வார்த்தை வராமல் மென்று விழுங்கினான் அப்பு. பிறகு இப்படியே பழக்கம் அதிகமாகிறது. இதனால் மனதில் ஒரு ஆசை ஏற்படுகிறது'' என்று ஒரு விதமாகச் சொல்லி முடித்தான்.

''ஆசை ஏற்படுகிறது என்றால்!''

''என்மேல் உனக்கோ உன் மேல் எனக்கோ ஒரு ஆசை ஏற்படுகிறது...''

''அப்படி எல்லாம் ஏற்பட்டு விடும் என்று நான் நினைக்கவேயில்லை. அப்படி ஏற்பட்டாலும் அதை மனதோடு வைத்துக் கொள்ள வேண்டும். வெளியே சொல்லக் கூடாது.''

''ஆசையை மனதோடு அடக்குவது சாதாரண மனிதர்களால் முடியாது. பெரிய யோகியினுடைய பக்குவம் வேண்டும்.''



**" இந்தாப்பா! மரியாதையா உன் கையிலுள்ள பணத்தையெல்லாம் கொடுத்துவிடு. இல்லாட்டா..."**

**" மன்னிக்கணும்; இரண்டு நிமிஷத்துக்கு முன்னாடிதான் உன்னைப் போல இன்னொருத்தன் வந்து என்னிடம் ஏமாந்து போனான்!"**

---

" எனக்கு ஒன்றுமே கடினமாகத் தோன்றவில்லை."

" அது உன்னால் முடியலாம். என்னால் முடியாது. எல்லோராலும் முடியாது. அதைத்தான் உனக்கு விளக்கிச் சொல்ல வருகிறேன்."

" நீங்கள் ஒன்றும் விளக்கிச் சொல்ல வேண்டாம்...."

" இவ்வளவு பிடிவாதமாக என் வார்த்தையைக் காதில் வாங்காமல் இருந்தால் என்ன செய்வது! நான் மூன்று தடவை உலகம் முழுவதும் சுற்றித்தான் என்ன புண்ணியம்! என் அனுபவம் சமுத்திரத்தில் கரைத்த பெருங்காயமாகி விட்டதே....!"

" நான் ஒன்றும் பிடிவாதமாக இல்லை. நீங்கள் மனதில் என்ன நினைத்துப் பேசுகிறீர்கள் என்றே எனக்குத் தெரியவில்லையே!"

" நான் ஒன்றும் புதிதாக மனதில் நினைத்துப் பேசவில்லை. நீ என்னவோ கல்யாணம் வேண்டாம், கல்யாணம் வேண்டாம் என்று பிடிவாதமாய்ச் சொல்லி நாளுக்கு நாள் இளைத்துப் போகிறாயே....."

" இளைத்துப் போகிறேனா! எனக்கொன்றும் அப்படித் தோன்றவில்லையே!" என்றாள் பிரேமா பரபரப்புடன்.

" உனக்குத் தெரியுமா! தெரியாது. பார்க்கிறவர்களுக்கல்லவா தெரியும்! ஆசையை மனதோடு வைத்துக் கொள்ள வேண்டுமென்கிறாயே, அதனால் வந்த வினைதான் இது!"

பிரேமா ஆச்சரியத்துடன் " எனக்கொன்றும் அப்படித் தோன்றவில்லையே! யார் மேல் எனக்கு ஆசை!" என்றாள்.

" உனக்கு விநோதமாய்த்தானிருக்கும். எனக்குத் தெரியும் அது. என்னுடைய அனுபவம் சாதாரணமா! மூன்று தடவை உலகப் பிரயாணம் செய்திருக்கிறேன். எவ்வளவு மனிதர்களைப் பார்த்திருக்கிறேன்! எனக்கு முப்பத்தாறு பாஷைகள் நன்றாகத் தெரியும். இருபத்தினாலு பாஷைகள் அரைகுறையாகத் தெரியும். இதைத் தவிர மெஸ்மரிஸம், இப்னாடிஸம், ரஸவாதம், மனோவசியம், மோடி வைப்பது, கூடு விட்டுக் கூடு பாய்வது எல்லாம் தெரியும். நீயே யோசனை செய்து பார்த்தால் தானே விளங்கும். இதை வெளியே ஒருவரிடமும் சொல்லாதே!"

பிரேமா அவனுக்கு எவ்விதப் பதிலும் சொல்லாமல் ஆழ்ந்த யோசனையில் இருந்தாள்.

" யோசனை செய்; நன்றாக யோசனை செய். இல்லாவிட்டால் எனக்கு மாத்திரம் உன் மேல் காதல் விழுவானேன்!" என்றான் கொஞ்சம் மனத் துணிச்சலை ஏற்படுத்திக் கொண்டு.

பிரேமா திடுக்கிட்டு எழுந்தாள். " காதலா! என்மேல் உங்களுக்குக் காதல் விழுந்திருக்கிறதா! அதிசயம்தான்! ஏதோ போதாத வேளைக்குத்தான் அந்தப் பாழும் காதல் விழுந்திருக்க வேண்டும். எனக்கு அப்படியெல்லாம் ஒன்றும் விழவில்லை" என்றாள் கேலியாக.

" உனக்குத் தெரியவில்லையா! சில சமயங்களில் காதல் அவர்கள் அறியாமலேயே வளர்ந்து விடுவதும் உண்டு. உதாரணமாக, சிலருக்கு ஜுரம் வந்தால் வெளியே தெரியாது. உள்ளூற இருந்து ஜன்னி வரையில் வளர்ந்து கடைசியில் ஒரேயடியாக ஆளைக் கொன்றுவிடும். அதே போலத்தான் காதலும். அதை யோசித்துச் சிந்தித்து அறிந்து தக்கது செய்யவேண்டும்."

" சரி! யோசித்து, சிந்தித்து, அறிந்து, தக்கது செய்கிறேன். நமஸ்காரம். போய் வருகிறீர்களா!" என்றாள் வினயமாக.

" சரி! யோசனை செய்யவாவது சம்மதித்தாயே! மனிதன் தன்னைத் தானே உணர்ந்து கொள்ளவில்லை என்று சொல்லுகிறார்கள் பாரு, அதைப் போலத்தான் இதுவும். விளக்கிலே எண்ணெயும் திரியும் மாத்திரம் போதாது. அதைச் சுடர் விட்டுப் பிரகாசிக்கும்படி தூண்டிவிட வேண்டும். இவைகளெல்லாம் பெரிய மேதைகளுக்குத்தான் தெரியும். மேதைகளென்றால் சுமார் நாற்பது பாஷைகளாவது தெரிந்திருக்க வேண்டும்...சரி! எனக்கு ஏகப்பட்ட ஜோலி இருக்கிறது. என்னுடைய நாலு வருஷ திட்டமும், இருபத்தொன்பது அம்சங்களும் நிறைவேறுத வரையில் எங்கும் பொறுமையாக நான் ஒரு நிமிஷங்கூட நிற்க மாட்டேன்" என்றான் துடிப்புடன்.

" சரி, போய் வாருங்கோ! நீங்கள் பேசப் பேச எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போலிருக்கிறது. நான் நன்றாக யோசித்து, என்னைப் பற்றியும், உங்களைப் பற்றியும், இந்த உலகத்தைப் பற்றியும் தெரிந்து கொள்கிறேன்" என்றாள் அலுப்புடன்.

"அது அப்படித்தானிருக்கும் முதலில். பிறகு பைத்தியம் மாதிரி பிடித்துக் கடைசியில் ஒரு வழிக்கு வரும்!" என்று சொல்லி விட்டு வெளியே போனான் அப்பு. (தொடரும்)

# ஆரோக்கிய ரகசியம்



### யோகாசன நிபுணர்

### ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி

**ஆ**சனம் என்றால் இருக்கை என்று அர்த்தம். யோக ஆசனம் என்பது யோகம் செய்வதற்காக இருக்கும் நிலை அல்லது இருக்கை எனப்படும். யோக ஆசனங்கள் ஹட யோகத்தைச் சேர்ந்தவை. யோகிகள் முனிவர்கள் ஒவ்வொரு நிலையில் இருந்து பல யோக சித்திகளை அடைந்திருக்கிறார்கள். உதாரணமாக மச்சேந்திர ஆசனம் என்று ஒன்று உண்டு. அது மச்சேந்திர முனிவர் சாதனம் செய்த ஆசனம். ஆகையால் அதற்கு அப் பெயர் உண்டாயிற்று. இம்மாதிரி முனிவர்கள் தபஸ்விகள் பல ஆசனங்களில் இருந்து நிஷ்டை, தியானம், சமாதி முதலியவைகளைச் செய்திருக்கிறார்கள். ஒவ்வொன்றிற்கும் வேறு வேறு பலன்கள் உண்டு.

எண்பத்திநான்கு லக்ஷம் வகை ஜீவராசிகள் உலகத்தில் இருக்கின்றன என்பது முனிவர்களின் முடிவு. ஆசன வகைகளிலும் அத்தனை இருக்கின்றனவாம்.

ஆனால் நடைமுறையில் ஒரு நூற்றுக்கு உட்பட்ட ஆசனங்களே இருப்பதாகத் தெரிகிறது. அதிலும் மிகச் சில ஆசனங்களே இதில் விளக்கப்படும். குடும்ப வாழ்க்கை நடத்துபவர்கள் செய்யக் கூடியவை மாத்திரம்தான் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. இவைகளைச் சிறுவர்கள் பிரம்மச்சாரிகள் விருத்தாப்பியர்கள் முதல் ஆண் பெண் வித்தியாசமின்றி எல்லாருமே பழகலாம்.




**ப**த்மாசனம் என்பது நாம் உட்காரும் ஒருநிலை. பத்மம் என்றால் தாமரை. அதன் தண்டை எல்லோரும் பார்த்திருப்பீர்கள். மிக லேசாய் எந்தப் பக்கமும் துவண்டு வளையும். ஆனால் ஜலத்தில் இருக்கும் போது அவ்வளவு பெரிய தாமரையைத் தொய்யவிடாமல் நிமிர்ந்து இருக்கும்.

நிமிர்ந்துநட, நிமிர்ந்து உட்கார் என்று நாம் பள்ளிக்கூடங்களில் படித்திருக்கிறோம். கவியரசர் பாரதியாரும் "நிமிர்ந்த நடையும், நேர்கொண்ட பார்வையும், ஜகத்தில் யார்க்கும் அஞ்சாத நெஞ்சமும்" என்று பாடியிருக்கிறார். நிமிர்ந்த நடை, ஏறுபோல் நடைவேண்டுமென்கிறார்.

சிறுவர்களோ படிப்பதுடன் சரி. அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் புத்தகச் சுமை அவர்களைக் கூன் ஆக்கி விடுகிறது. பிறகு தொழிலில் புகுந்தாலோ சொல்லவே வேண்டாம். அதிலும் ஆபிசில் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு மேஜை மீது இருக்கும் காகிதத்தில் பேனாவினால் வேலை செய்பவர்களுக்கு ஒரு முழம் முதுகு கூன் தள்ளிவிடும். நல்ல மார்பைவிட முன் துருத்திக்கொண்டிருக்கும். அவர்கள் மார்பின் சுற்றளவோ சொல்ல வேண்டியதில்லை. 28 அங்குலம் 30 அங்குலம் இருந்தால் அதிகம். நுரைஈரல் எங்கோ மடிந்து, வேலை செய்ய முடியாமல் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கும்.

இளம் பெண்களுக்கோ கூனி நடப்பது நாகரிகமாகி விட்டது. ஐயோ, பரிதாபம்! எவ்வளவு அதிகம் படிப்பு ஏறுகிறதோ அவ்வளவுக்குக் கூன் தள்ளி விடுகிறது. "ஏனம்மா! இவ்வளவு பலஹீனமாக இருக்கிறாயே, ஏதாவது தேகப் பயிற்சி செய்யக்கூடாதா?" என்றால், "எங்கு நேரம் கிடைக்கிறது? பையாலஜி படிக்க வேண்டும். பிஸியாலஜி படிக்க வேண்டும். அதற்கே நேரம் போதவில்லை" என்று பதில் வரும். மூளையை மாத்திரம் அபிவிருத்தி செய்து, தேகத்தை அசட்டை செய்யும் கல்வி என்ன கல்வியோ?

இவர்கள் தாய்மார்கள் ஆகும் போது, வியாதிகளுக்கு இருப்பிடமாகியும், மருந்துகளின் புதைப் பொருளாயும் ஆவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

நரம்பு பலஹீனம், சோர்வு, ரத்த மின்மை, காசம், க்ஷயம் முதலியன இவர்கள் வாழ்க்கையுடன் ஆரம்பித்து விடுகின்றன. வந்த விருந்தாளியாகிய நோயும் சீக்கிரம் போகமாட்டான். சோம்பேறி வேதாந்தம் அசட்டு நாகரிகம் பரவி இருக்கும் வரை

இவைகளுக்கு நல்ல விருந்துதான். யோகாசனப் பயிற்சியைக் கைக்கொண்டால்தான் இவைகள் இருக்குமிடம் தெரியாமல் மறையும்.

**நா**ம் உயிர் வாழ்வதற்குப் பிராணவாயு மிக அவசியமானது. ஆகாரமில்லாமல் பல நாள் இருக்கலாம். ஜலமில்லாமல் சில நாள் இருக்கலாம். ஆனால் காற்று இல்லாமல் சில நிமிஷம் கூட இருக்க முடியாது. காற்றை இழுக்கவும் விடவும் காற்றுப் பைகள் இரண்டு மார்பில் இருக்கின்றன. நேராய் நிமிர்ந்து, மார்பை விரித்து உட்கார்ந்தாலும், நடந்தாலும், பிராண வாயுவைப் பூரணமாய் இழுத்துவிட முடியும். கூனி உட்கார்ந்தாலோ, நடந்தாலோ பிராணவாயு நுரை ஈரல்நிறைய இழுக்க முடியாது.



ஹீனப்பட்டுப் போகிறது. நல்ல ரத்தம் குறைந்து போகிறது. நுரை ஈரலுக்குச் சரியான வேலை கிடையாது. அதன் மூலை முடுக்குகளில் நல்ல பிராண வாயு ஓட்டமில்லாததால் காசம், க்ஷயம் முதலிய கிருமிகளுக்கு இருப்பிடமாய் விடுகிறது. அங்கு அந்தப் பயங்கரக் கிருமிகள் பல்கிப் பெருகி வளர்ந்து நுரை ஈரலையே சாப்பிட ஆரம்பித்து விடுகின்றன.

கை, கால் முதலிய அவயவங்கள் கெட்டுப் போனால் மரக் கட்டையால் அழகாகச் செய்து மாட்டி விடுகிறார்கள். கண் போனாலும் பீங்கான் கண்ணை வைத்து விடுகிறார்கள். பற்கள் போனாலும் பரவாயில்லை. அழகான பொய்ப் பற்களைக் கொண்டு சிரிக்க முடிகிறது. ஆனால் நுரை ஈரல் போனால் மனிதனின் முடிவும் அவ்வளவே. யாராலும் ஒன்றும் செய்ய முடியாது. ஆரம்பத்தில் சிறுக இருக்கும் போதே கவனித்தால் குணமாகி விடும்.

இருதயம் ரத்தம் பாய்ச்சும் ஒரு பம்பிங் ஸ்டேஷன். நுரையீரல் வழியாய் வரும் பிராணவாயுவினால் கெட்ட ரத்தம் சுத்தமடைகிறது. அந்த சுத்த ரத்தத்தை இரத்தாசயம் அடித்து உடல் பூராவும் பாய்ச்சுகிறது. முதலில் பெரிய குழாய்களில் வந்து பிறகு பல கிளைகளாகப் பிரிந்து மிக மிகச் சிறிய மயிரிழை போன்ற நரம்புகளின் மூலமாக சரீரம் பூராவுக்கும் நல்ல ரத்தம் பாய்கிறது. அது திரும்பி வரும்போது கெட்ட ரத்தமாய் மாறிக் கெட்ட ரத்தக் குழாய்களின் மூலமாகப் பல சிறிய நரம்புகள் பெரிய நரம்புகளில் சேர்ந்தும், பெரிய நரம்புகள் பெரிய குழாயில் சேர்ந்தும் இரத்தாசயத்துக்கு வந்து சேருகின்றன. அங்கு பிராண வாயுவினால் அந்தக் கெட்ட ரத்தமானது சுத்தம் செய்யப்பட்டு, மீண்டும் சரீரம் பூராவும் பாய்ச்சப் படுகிறது.

**இ**ன்று இந்தியாவில் க்ஷயரோகப் பிரச்னை பெரிய பிரச்னை. க்ஷயரோகம் மிகப் பயங்கரமாய்ப் பரவி வருகிறது. அதுவும் நகர வாசங்களில் சொல்ல வேண்டியதில்லை. 'நகர'வாசம் 'நரக'வாசம் என்றே சொல்லலாம். யாருக்கு இந்நோய் இருக்கிறதென்று கண்டார்கள்? வெளிப் பார்வைக்குத் தெரியக்கூடியதல்ல. நுரை ஈரலில் புதைந்து கிடப்பது இந் நோய். அதிகம் முற்றினவர்களை ஒருவாறாக தெரிந்துகொள்ளலாம். இந் நோய் கண்டவர்கள் அவரவர்களின் குடும்பத்துடனேயே இருக்கிறார்கள். அவர்கள் மூச்சு விட்டால் தொற்றும். எச்சில் உமிழ்ந்தால் தொற்றும். அவர்கள் உபயோகித்த சாமான்களை பிறர் உபயோகித்தாலே தொற்றும்.

நாம் கூனி யிருந்தால் நுரை ஈரல் தாராளமாய்ப் பிராண வாயுவை இழுக்க முடியாது அதனால் போதுமான பிராணவாயு கிடைக்காமல், நம் உடம்பிலுள்ள கெட்ட ரத்தம் சுத்தமடையாமல் போய் விடுகிறது. அப்பாவி இருதயம் என்ன செய்யும்? தன்னிடம் வரும் ரத்தத்தை அடித்துப் பாய்ச்ச வேண்டியது அதன் கடமை. அது சரியாக சுத்தமடைந்தாலும் சுத்தமடையா விட்டாலும் தன் வேலையைச் செய்து விடுகிறது. அப்படியே செய்யச் செய்ய ரத்த நாளங்கள் பல



இவர்கள் பொது இடங்களில் பழகுவது இன்னும் பயங்கரம். காற்று, க்ஷயரோகக்காரர்களாலும் மற்றும் பல காரணங்களினாலும் அசுத்தம் ஆகிறது. நல்ல வெய்யிலும், பிராணவாயுவுமே இதைச் சுத்தம் செய்ய முடியும். நாம் கூடுமானவரை நம் வீட்டையும், சுற்றுப்புறங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். கூன் தள்ளாமல் நிமிர்ந்து உட்கார, நிமிர்ந்து நடக்கப் பழக வேண்டும்.




## 25. உய்யும் வழி

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

“ஜனக மகாராஜா இருக்கவில்லையா? அவரைப் போலவே நானும் உலக வாழ்க்கையிலிருந்து கொண்டே ஞானியாகலாம்” என்று சிலர் பேசுவதுண்டு. அப்படிப் பேசுபவர்கள் உலகத்தில் ஒரு ஜனகர்தான் இருந்தார் என்பதை மறந்து விடுகிறார்கள். ஜனகருக்குப் பின் அவரைப்போல் எத்தனை பேர் உலகத்தில் உண்டானார்கள்?

உலக வாழ்க்கையில் இருந்து கொண்டே பற்று இன்றிக் கடமைகளை நிறைவேற்றும் ஞானவானாக இருக்க வேண்டுமானால் கொஞ்சகாலமாவது தனியாக இருந்து தியானத்தில் அமர வேண்டும். ஒரு வருஷம் அல்லது ஆறு மாதம் அல்லது ஒரு மாதம், குறைந்த பட்சம் பன்னிரண்டு நாளாவது இதற்குச் செலவழிக்க வேண்டும். அந்தக் காலத்தில் இடைவிடாமல் பகவானை நினைவில் வைத்துக் கொண்டு அவன் அருளைப் பெற வேண்டி உள்ளத்தைச் செலுத்திப் பிரார்த்தனை செய்ய வேண்டும். உலகத்தில் உனது என்று நினைக்கும் படியான பொருள் ஏது? ஒன்றுமில்லை. இதை மனதில் ஊர்ஜிதப் படுத்திக் கொள்ள வேண்டும். உன்னுடைய பொருள் என்று எண்ணக் கூடிய ஒவ்வொன்றும் ஒரு நாள் அல்லது ஒரு நாள் அழிந்து மறைந்து போகும் என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும். நமக்கு இருக்கும் உறுதியான பொருள் ஒன்றேதான். அது ஆண்டவன். நமக்குள்ள அழியாத பொருள் அவன் ஒருவனே. அனைத்துக்கும் கடவுள் ஒன்றே ஆதரவு. அவனே அனைத்தும். தியானம் செய்து பகவானை எப்படி அடைவேன் என்று சிந்தித்துச் சிந்தித்து மனதை நிர்மலப்படுத்திக் கொள்ள வேண்டும். அவனை அடைவதே ஆசையாகவும் கவலையாகவும் வைத்துக் கொண்டு தியானம் செய். தியானம் பண்ணும் காலத்தில் தியானத்தையும் பக்தியையும் பரிகசிப்பவர்களுடன் சேராமல் இருக்க வேண்டும். பக்தி செய்வதை இகழ்வோர்களுடைய கூட்டுறவு வைத்துக் கொள்ள வேண்டாம். பக்தர்களை அவமதிப்பவர்கள் அல்லது பரிகாசம் செய்பவர்கள்,— இவர்களுடைய சகவாசத்தை நீக்க வேண்டும்.

உள்ளம் நிலை தவறிப் போகும்படியான சந்தர்ப்பங்களில் ஜகன் மாதாவை வேண்டிக்கொள். அவள் உன்னைக் காப்பாற்றுவாள். உள்ளத்துக்குள்ளே மறைந்து நிற்கும் பாபங்களினின்று அவள் உன்னைத் தப்புவிப்பாள்.

பக்கத்தில் ஈசுவரி நிற்கிறாள் என்பதை அடிக்கடி நினைவுக்குத் தந்து

கொள். அப்படிச் செய்தால் பாப எண்ணங்களினின்றும் பாப காரியங்களினின்றும் வெட்கப்பட்டு விலகுவாய். தியானம் செய்து அருள் பெற்றவன் எந்தப் பதவியிலிருப்பினும் எந்தக் கஷ்டம் அல்லது சுகபோகம் நேரிடினும் கலக்கமின்றி நேர்மையான வழியில் நடந்து கொள்ளுவான். தன் கடமைகளை அடக்கத்துடனும் சாதுர்யத்துடனும் செய்து தீர்ப்பான். தெய்வ பக்தியும் மக்களிடம் அன்பும் காரியங்களில் நேர்மையும் அவனிடம் பார்க்கலாம். லௌகிக சாதுர்யத்தில் மற்றவர்களை விட அவன் எந்த விதத்திலும் குறைவாயிருக்க மாட்டான். எல்லாக் காரியங்களையும் ஒழுங்காகச் செய்வான். கல்வி கற்றவர்கள் மத்தியில் அவனும் கற்றவனாகவே இருப்பான். வாதப் பிரதிவாதம் செய்வதில் மற்றவர்களைப் போலவே அவனும் நன்றாகச் செய்வான். தாய் தகப்பன்மார்களிடத்தில் அடக்கத்துடனும் அன்புடனும் ஒரு குறையுமின்றி நடந்து கொள்வான். நண்பர்களிடத்திலும் தன் சுற்றத்தார்களிடத்திலும் மிகப் பிரியமாக இருப்பான். பேச்சு, இனிமையாகப் பேசுவான். உபகார சுபாவத்துடன் நடந்து கொண்டு எல்லோருடைய மதிப்பையும் அன்பையும் பெறுவான். மனைவிக்குப் பிரீதியே உருவெடுத்தாற் போன்ற கணவனாவான். இத்தகைய மனிதனே இல்லறத்தில் இருந்துகொண்டு உலக வாழ்க்கை நடத்தி வந்தாலும் ஞானம் அடைந்தவன் என்று சொல்லப்படுவான்.

பகவான் ராமகிருஷ்ணருடைய உபதேசங்கள் வெறும் சாஸ்திரம் அன்று. தன் அனுபவத்தில் சரி என்று கண்டு அனைவரும் அனுஷ்டிக்கத் தகுந்த வழி என்று அவர் ஆராய்ந்து அறிந்து சொல்லும் உண்மை. தேவி பக்கத்திலே நிற்கிறாள், அவளைச் சரண்புகு, எல்லாம் அடைவாய், உன்னைப் பாபத்திலிருந்து காப்பான்,—என்று அவர் அனுபவத்தில் கண்டு நமக்கும் சொல்லுகிறார். அதை உணர்ந்து நாம் நடந்து கொண்டால், நாமும் உய்வோம்; நாடும் செழிக்கும்.

---

# கல்கி பாப்பா மலர்

இந்த மீன்கள் பறப்பது: விளையாட்டுக்காக அல்ல. பெரிய மீன்களிட மிருந்து தப்புவதற்காகத் தான்.

இது ஒரு சாயக் குருவி. இதன் சாயம் கெட்டிச் சாயம் அல்ல. மழையில் நனைந்தால் வெளுத்து விடுகிறது.

ஆபரேஷன் செய்யும் போது மின்சார விளக்கு அணையவே, மின் மினிப் பூச்சிகள் அடங்கிய பாட்டிலின் உதவியால் ஒரு டாக்டர் ஆப ரேஷனை வெற்றி- கரமாக முடித் - தாராம்.

இந்தக் கோடுகள் பார்வைக்குக் கோண- லாகத் தெரிகின்றன அல்லவா? ஆனல் உண்மை- யில் கோணல் அல்ல.

சாமா-




மூத்தா

## 2. குண்டூசியின் மகிமை!

நகுலன் போட்ட சத்தத்தைக் கேட்டுப் படுத்திருந்தவர்கள் விழித்துக் கொண்டனர். விழுந்து அடித்து ஓடியவன் ஒரு திருடன் என்பதையும் புரிந்து கொண்டனர்.

அவர்களில் ஒருவர் நகுலனை அருகில் அழைத்தார். 'என்னவோ, ஏதோ!' என்று நடுங்கிக் கொண்டே நகுலன் அவர் அருகில் மெதுவாகப் போனான்.

"நீ போட்ட சத்தத்தினால்தான் நான் விழித்துக் கொண்டேன். உன் குரல் மட்டும் கேட்காமல் இருந்து நான் தூங்கிப் போய் இருப்பேனானால் வந்த திருடன் என்னிடம் உள்ள பொருள் அத்தனையும் கொள்ளை அடித்துக் கொண்டு போயிருப்பான். உன்னால் என் பொருள்களும், பணமும் காப்பாற்றப்பட்டன" என்று சொல்லி நகுலன் செய்த உதவியைப் பாராட்டினார். அதுமட்டும் அல்ல; அவனுக்கு இருபத்தைந்து ரூபாய் வெகுமதியும் அளித்தார்.

நகுலனுக்குத் தன் கண்களை நம்பவே முடியவில்லை. 'இது நிஜந்தானா?' என்று அவர் கொடுத்த நோட்டுக்களைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துப் பிரமித்தான். "எல்லாம் இந்தக் குண்டூசியின் மகிமைதான்! குண்டூசி மட்டும் என் மார்பின்மீது குத்தியிராவிடில் நான் கத்தி இருப்பேனா? எனக்கு இந்த வெகுமதி கிடைத்திருக்குமா?" என்று எண்ணி எண்ணி வியப்படைந்தான்.

பொழுது விடிந்தது. நகுலன் பணத்தைப் பத்திரமாக இடுப்பில் முடிந்து கொண்டு, உற்சாகத்துடன் கிளம்பினான். எங்கேயாவது வேலை தேடி அமர வேண்டும் என்னும் ஆவல் கட்டுக்கடங்காமல் கிளம்பிற்று.

ஐந்து ஆறு மைல் நடந்திருப்பான். ரோடு ஓரத்தில் ஒரு சின்னப் பெட்டிக் கடை இருந்தது. அதில் ஒரு கிழவன் உட்கார்ந்து நூல் கட்டிய மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு வெற்றிலை, பாக்கு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தான். "இது என்ன ஊர்?" என்று அந்தக் கடைக்காரனைப் பார்த்து நகுலன் கேட்டான். "செங்கிப்பட்டி" என்று சொல்லிவிட்டு "ஏன் தம்பி?" என்று திருப்பிக் கேட்டான் கிழவன்.

"இல்லை, சும்மாத்தான் கேட்டேன். எனக்கு ஏதாவது இந்த ஊரில் வேலை கிடைக்குமா என்பதற்காகக் கேட்டேன்" என்று சொல்லி விட்டுக் கடைக்கு அருகே போட்டிருந்த ஓட்டைப் பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டான் நகுலன்.

"இந்த ஊரில் என்ன வேலை தம்பி, கிடைக்கப் போகிறது? இங்கிருந்து என் வீடு அரை மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கிருந்து தினம் எனக்குச் சாப்பாடு எடுத்துக் கொண்டுவர

ஒரு பையன் வேண்டும். உன்னால் முடியுமா? ஏதோ, என்னால் முடிந்த மீதி மிச்சத்தைப் போடுகிறேன். மாதம் ஒரு ரூபாய் சம்பளமும் தருகிறேன். உனக்கு இஷ்டமானால் சொல்லு!'' என்று கிழவன் கேட்டான்.

"அப்படியே, தாத்தா!'' என்று நகுலன் சந்தோஷத்துடன் ஒப்புக் கொண்டான். நாம் மாதம் ஒரு ரூபாய் சம்பாதிப்பதற்காகவாவது பயன் பட்டோமே என்று அவனுக்கு உள்ளூற எவ்வளவோ திருப்தி!

பத்து நாட்கள் ஆயின. நகுல னுடைய போக்கும், பேச்சும், நடத்தை யும் கிழவனுக்கு மிகவும் பிடித்து விட்டன. கடையையே நம்பி அவனிடம் விட்டு விட்டு வேறு சில காரியங்களுக் காக வெளியே போகக்கூட ஆரம் பித்து விட்டான் கிழவன். "தம்பி! எனக்கு வயது ஆகிவிட்டது. என்னால் நீண்ட நேரம் கடையில் உட்கார்ந்து வியாபாரம் செய்ய முடியவில்லை. நீ எனக்கு நல்ல சமய சஞ்சீவியாக வந்து சேர்ந்தாய். உன்னை நம்பிக் கடையை விடுகிறேன். உனக்கு இன்று முதல் மாதம் ஐந்து ரூபாய் சம்பளம் தருகிறேன். ஆனால், தம்பி! நீ பொய் சொல்லக் கூடாது; திருடக் கூடாது'' என்றான் கிழவன்.

"சரி, தாத்தா!'' என்று கடையை ஒப்புக் கொண்டான் நகுலன். அம்மா வும் கடைக்காரக் கிழவனும் சொன்ன "பொய் சொல்லக் கூடாது; திருடக் கூடாது'' என்ற இரு புத்திமதிகளும் அவன் உள்ளத்தில் புகுந்து எப்பொழு தும் எதிரொலித்துக் கொண்டே இருந்தன. "நான் மாதம் ஐந்து ரூபாய் முழுசாகச் சம்பாதிப்பதை என் அருமை அம்மா கேள்விப்பட்டால் எவ்வளவு சந்தோஷப்படுவாள்?'' என்று நினைத்து மனதுக்குள் மிகவும் சந்தோஷப் பட்டான் நகுலன்.

*　　*　　*

ஒரு நாள் இரவு; நகுலன் கடை யில் இருந்தான். கிழவன் சந்தைக்குப் போயிருந்தான். இரண்டு பேர் வந் தனர். முறுக்கு மீசையையும் முண்டா சையும் பார்த்து நகுலன் மிரண்டு போனான். "பையா! இரண்டு வாழைப் பழங்கள் கொடு. எங்கள் எஜமான ருக்கு வேண்டும்'' என்று கேட்டனர்.

"இரண்டே இரண்டு பழங்கள் தான் இருக்கின்றன. அவற்றில் ஒன்று கொஞ்சம் அழுகலாக இருக்கிறது. பரவாயில்லையா?'' என்று பயந்த வாறே நகுலன் கேட்டான்.

"பரவாயில்லை! ஒன்று நன்றாயிருக் கிறதல்லவா?'' என்று சொல்லி அவர்கள் ஓரணா கொடுத்து விட்டு அந்தப் பழங்களை வாங்கிக் கொண்டு போனார்கள். நகுலன் பிறகு கடையை மூடி விட்டுக் கிழவன் வீட்டுக்குப் புறப்பட்டுப் போனான்.

அதே இரவு பத்து மணி இருக்கும். கிழவனிடம் நகுலன் அன்றைய வரவு செலவுகளைச் சொல்லிப் பணத்தைக் கொடுத்து விட்டுப் படுத்தான். சில விநாடிக்கெல்லாம் வீட்டுக் கதவை யாரோ தடதடவென்று தட்டும் சத் தம் கேட்டது.

"யார்?'' என்று உள்ளேயிருந்த வாறே கேட்டான் கிழவன்.

"பெரிய ஐயா வீட்டிலிருந்து வந்தி ருக்கிறோம். கதவைத் திற!'' என்று ஒரு குரல் மிகவும் மிடுக்குடன் வந்தது.

'இந்த நேரத்தில் பெரிய பண்ணை யார் வீட்டிலிருந்து என்னத்திற்கு நம் மைத் தேடிக் கொண்டு ஆட்கள் வர வேண்டும்?' என்று பயந்து கொண்டே கிழவன் தள்ளாடியவாறு எழுந்து போய்க் கதவைத் திறந்தான். நகுலன்





கிழவனுக்குப் பின்னால் 'என்னவோ, ஏதோ! யார் கண்டார்கள்?' என்று பீதியுடன் போனான்.

"இன்று இரவு நமது பெரிய பண்ணையாருக்கு வாழைப் பழங்கள் கொடுத்தது யார்? கிழவா, நீதானே?" என்று கேட்டு விட்டு மீசையைத் தடவி கொண்டார்கள் வந்தவர்கள்.

"ஊம்...ஏன்...?" என்று கிழவன் கேட்டான். அவன் கண்கள் அவனையறியாமலே நகுலனைப் பார்த்தன.

"கேட்டதற்குப் பதில்! சீக்கிரம்!" என்று உறுமினார்கள் வந்தவர்கள்.

நகுலன் முன்னால் வந்தான். "ஏன்? நான்தான்!" என்றான். அவனது நாவும், கையும், காலும் 'வெடவெட' வென்று நடுங்கின.

"அப்படியானால் எங்கள் பின்னோடு வா. உன்னைப் பெரிய பண்ணையார் கையோடு கூட்டிக் கொண்டு வரச் சொன்னார்!" என்று சொல்லி விட்டுப் பதிலைக் கூட எதிர்பாராமல் நகுலனைப் பிடித்துக் 'கரகர' வென்று இழுத்துக் கொண்டு போனார்கள். கிழவன் ஒளியிழந்த கண்களால் அவர்களைப் பார்த்துக் கொண்டே பெருமூச்சு விட்டான்.

"நகுலன் நல்ல பையன் ஆயிற்றே! வாழைப் பழம் கொடுத்தால் என்ன பிசகு இருக்க முடியும்?" என்று ஒன்றும் புரியாமல் தடுமாறினான் கிழவன்.

"நான்தான் அப்போதே சொன்னேனே! ஒரு பழம் அழுகல் என்று!..." என்று திக்கிக் கொண்டே நகுலன் அவர்களுக்குப் பின்னால் கலவரத்துடன் சென்றான்.

செங்கிப்பட்டி பெரிய பண்ணையார் அன்று இரவு மணி பதினொன்றுக்குமேல் ஆகியும் கூடத் தூங்கப் போகவில்லை. போன ஆட்களை இன்னும் காணோமே என்று எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டே பின் கையைக் கட்டியபடி வராந்தாவில் நடை போட்டுக் கொண்டிருந்தார்.

போன சேவகர்கள் நகுலனுடன் திரும்பினார்கள். "இவன் தான் தங்களுக்குப் பழம் விற்றவன்" என்று சொல்லிவிட்டு நகுலனைப் பண்ணையாருக்கு முன்னால் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

பண்ணையார் ஒரே தாவாகத் தாவி நகுலனின் அருகே ஓடினார். "நீ தானா பழம் கொடுத்தவன்!" என்று கேட்டு விட்டு அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு எதிரே இருந்த சோபாவில் அமர்ந்தார். நகுலன் அவருக்கு அருகில் உட்கார நடுங்கினான்.

"நீ அந்தப் பழங்களுள் ஒன்றில் குண்டூசியைக் குத்தி வைக்காமல் இருந்தால் இவ்வளவு நேரம் என் உயிர் போயிருக்கும். பழம் வாங்கி வந்த கொலை பாதகர்கள் என்னை எமலோகத்துக்கு அனுப்பி இருப்பார்கள்!" என்று பண்ணையார் சொன்ன போது நகுலனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

பிறகு அவர் சொன்னதன் சாரம்:—

பழம் வாங்கிக் கொண்டு வந்தவர்களுக்குப் பண்ணையாரைக் கண்டால் ஆகாது. எப்படியாவது வஞ்சகமாக அவரைக் கொன்று விட நினைத்துப் பழத்தில் விஷம் தடவி மூடி வைத்து விட்டார்கள். சூது அறியாத பண்ணையார் வழக்கம் போலப் பழத்தை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். நாக்கில் ஏதோ ஒன்று நறுக் கென்று குத்தவே, வாயில் இருந்த பழத்தைச் சட்டென்று துப்பி விட்டார். அப்பொழுது அந்தப் பக்கமாகப் போன பூனை, அவர் துப்பிய பழத்தைத் தின்ன, அது அங்கேயே விழுந்து இறந்து விட்டது! அதைக்

கண்ட பண்ணையாருக்குச் சந்தேகம் தோன்றவே, பழம் வாங்கி வந்தவர்களைக் கூப்பிட்டு அதட்டி உருட்டி விசாரித்தார். கடைசியில் உண்மை வெளிப்பட்டது.

ஏதோ விளையாட்டாக வாழைப் பழத்தில் சொருகிவைத்த குண்டூசி இவ்வளவு அற்புதம் செய்யும் என்று நகுலன் எதிர்பார்க்கவில்லை. அன்று குண்டூசி திருடனை விரட்டி அடித்தது! இன்று பண்ணையாரின் உயிரையே காப்பாற்றி விட்டது. 'ஆஹா! எப்பேர்ப்பட்ட குண்டூசி!' என்று ஆச்சர்யத்தில் ஆழ்ந்தான் நகுலன்.

பண்ணையார் பிறகு அற்புதமான இன்னொரு முடிவுக்கு வந்து மேலும் நகுலனைப் பிரமிக்க வைத்தார். "உன் களையான முகத்தையும், கருணை உள்ளத்தையும் பார்க்கும் போது எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது" என்று சொல்லி நகுலனைச் சுவிகாரம் எடுத்துக் கொண்டார். நகுலன் அடுத்த நாள் முதல் செங்கிப்பட்டி சின்ன பண்ணையாராகிவிட்டான்! எல்லாம் அந்தக் குண்டூசியின் மகிமைதான்! (தொடரும்)

ஒரு குதிரை வியாபாரியிடம் மொத்தம் 51 குதிரைகள் இருந்தன. அவன் தன் மூத்த பிள்ளைக்கு $\frac{1}{2}$ பாகமும், இரண்டாவது பிள்ளைக்கு $\frac{1}{3}$ பாகமும், மூன்றாவது பிள்ளைக்கு 1/9 பாகமும் பிரித்துக் கொடுத்தான் என்றால், அவன் ஒவ்வொருவருக்கும் பிரித்துக் கொடுத்த குதிரைகள் எவ்வளவு?

சென்றவார விடுகதைகளுக்கு விடை:
1. உப்பு 2. மனிதன்

# மணிப் பயல்!

**ப**ரமசிவம் பட்டணம் முழுவதும் சுற்றிப் பார்த்து விட்டார். வீடு கிடைக்கிற வழியாயில்லை. கடைசியில் திருவல்லிக்கேணியில் ஒரு சந்தில் வீடு ஒன்று காலி யிருப்பதாகப் பரமசிவத்தின் காதில் விழுந்தது. உடனே திருவல்லிக்கேணியைப் பார்க்க ஓடினார். அந்தக் குறிப்பிட்ட சந்துக்குப் போனதும் பரமசிவம்பிள்ளையாருக்குப் பிரார்த்தனை செய்து கொண்டார்.

அந்த வீட்டுக்குள் புகுந்து விசாரித்ததில் அங்கே இடம் காலி யிருப்பது வாஸ்தவம்தான் என்று தெரியவந்தது. உடனே பரமசிவத்தின் முகம் அளவற்ற மகிழ்ச்சியினால் மலர்ந்தது.

"இந்த இரண்டு அறைகளும் கூடமும் தான் வாடகைக்கு விடப்போகிற இடம். ஆனால் முக்கியமாக ஒரு விஷயம். குடித்தனம் வருபவர்களுக்குக் குழந்தைகள் இருக்கக் கூடாது!" என்று வீட்டுக்காரர் சொன்னதைக் கேட்டதும் பரமசிவத்தின் முகம் வாடி விட்டது. பேசாமல் நடையைக் கட்டினார். வீட்டுக்குப் போய் அவர் தன் மனைவியிடம் அந்த வீட்டைப் பற்றிச் சொன்னார். அந்த அம்மாள் அடைந்த ஏமாற்றத்தைச் சொல்லி முடியாது. பரமசிவத்தின் பேரன் மணி ஐந்து வயதுப் பையன். அவன் தாத்தாவும் பாட்டியும் பேசிக்கொண்டிருந்ததைக் கவனமாய்க் கேட்டான்.

மறுநாளே திருவல்லிக்கேணிக்குப் போக வேண்டும் என்று மணி ஒரே பிடிவாதம் பிடித்தான். ஆகவே, மணியை அந்த வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனார்.

மணி அந்த வீட்டு வாசலிலேயே தாத்தாவை நிறுத்தி வைத்து விட்டு, தான் மாத்திரம் விடு விடு என்று அந்த வீட்டுக்குள்ளே நுழைந்தான்.



வீட்டுக்காரர் குறுகுறு என்று இருந்த மணியை வியப்புடன் பார்த்தார்.

"மாமா, எனக்கு வீடு வேண்டும். எனக்குக் குழந்தை குட்டி இல்லை. நானும் என் தாத்தாவும் பாட்டியும்தான்! உங்களுக்குச் சம்மதம்தானே!" என்று மணி கம்பீரமாகக் கேட்டான்.

வீட்டுக்காரர் பதில் பேசவில்லை. பரமசிவத்துக்கு வீடு கிடைத்துவிட்டது என்று சொல்லவும் வேண்டுமோ? —விஜயம்




# பாதுஷாவின் காதல்

ஆசிரியர் : சுதர்சன்

மொழிபெயர்ப்பு : ரா. வீ.

## 9. கல் தொங்கிற்று!




தியூனஸ் பரூனின் ஆத்திரத்தையும் ஆங்காரத்தையும் கண்டு கதிகலங்கிப் போய் விட்டாள். அவளுக்குத் தலை சுழன்றது. என்ன பேசுவது என்று புரியவில்லை. வாய் அடைத்துப் போய் வகை அறியாது நின்றாள். அடுத்த கணம் அவளுக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ! சட்டென்று நெருங்கிப் பரூனின் கால்களை — எந்தப் பரூனை அவளுடைய உள்ளமும் உடலும் ஒருங்கே வெறுத்தனவோ, அந்தப் பரூனின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். பிறகு கண்களில் நீர் மல்க, அவனுடைய முகத்தைப் பார்த்தவாறு, "கருணை புரிய வேண்டும். உலகத்துக்கெல்லாம் உயர்ந்த ஜஹா பாதுஷா! நீ என்மீது கட்டாயம் கருணை புரிந்துதான் ஆகவேண்டும். நீயோ தெய்வம். உன் உடல் ஸ்வர்க்கலோகத்து நீரையும் காற்றையும் கொண்டு ஆக்கப்பட்டிருக்கிறது. உலகத்துக் குழந்தைகள் மீது கருணை புரிய வேண்டியது உன்னுடைய கடமை. நீ இவ்வளவு கடின சித்தம் வாய்ந்தவனாக ஆகக்கூடாது; ஆகவும் முடியாது. உன்னை நான் அவ்வளவு ஈவு இரக்கம் அற்றவனாகக் கருதவில்லை. நான் உன் வாசலிலே கருணை மான்யம் வேண்டிக் காத்து நிற்கிறேன். நீ கட்டாயம் என் மீது கருணை புரிந்துதான் ஆகவேண்டும். எவ்விதத்திலும் மறுக்கக்கூடாது; மறுக்கவே கூடாது" என்று கெஞ்சமாட்டாக் குறையாகக் கெஞ்சினாள்.

பரூன் மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்தான். பிறகு தன் குரலில் சிறிது மென்மையை வரவழைத்துக் கொண்டு, "நீ கடின சித்தம் உள்ளவளாக இல்லாமலிருந்தால் பரூனும் கடின சித்தம் உள்ளவனாக ஆக மாட்டான்" என்றான்.

தியூனஸ் 'பட பட' வென்று அடித்துக் கொள்ளும் தன் மனதைத் திடப்படுத்திக் கொள்ள யத்தனித்தவாறே, "நானோ பெண். பெண் எது வேண்டுமானாலும் செய்வாள். பெண்ணால் ஆகாத காரியம் ஒன்றும் இல்லை. ஆயினும் அவளால் தன் எண்ணத்துக்கும் விருப்பத்துக்கும் விரோதமாக இன்னொருவரைக் காதலிக்க முடியாது" என்றாள்.

அதைக் கேட்டதும் பரூன் சட்டென்று, "பரூன் நினைத்தால் ஆகாத காரியம் என்று ஒன்று உலகத்தில் உண்டா? பரூன் மனம் வைத்தால் எதுவும் செய்ய முடியும். ஒரு காரியத்தைச் செய்வதென்று அவன் தீர்மானித்து விட்டால் அதைச் செய்தே தீருவான். முன் வைத்த காலைப் பின் வைக்கும் வழக்கம் இந்தப் பரூனிடம் கிடையவே கிடையாது. கடைசி நிமிஷம் வரை உனக்கு அவகாசம் தருகிறேன். நீ அந்த எகிப்து நாட்டு இளைஞனின் உயிரைக் காப்பாற்ற விரும்பினால், காவலாளியிடம் சொன்னால் போதும். அச்

செய்தி எனக்கு உடனே அறிவிக்கப்படும். அவனுடைய உயிரும் பிழைக்கும். உன் உசிதப்படி செய்!'' என்றான்.

அதைச் சொல்லி முடித்ததும் அவன் கனம் வாய்ந்த தன் தங்கச் செங்கோலைக் கையில் எடுத்துக் கொண்டான். அதற்குப் பின் வாய்திறந்து ஒன்றும் சொல்லாமலே அவ்விடத்தை விட்டு வெளியேறினான்.

நியூனஸ் பருனின் அந்த அதட்டலுக்கும் மிரட்டலுக்கும் என்ன அர்த்தம் என்பதைப் புரிந்து கொள்ள விரும்பினாள்; புரிந்து கொள்ளுவதற்காக முயற்சியும் செய்தாள். ஆனால் எவ்வளவோ முயன்று பார்த்தும் அவளால் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் ஒரு விஷயம் மட்டும் அவளுக்குத் தெரிந்திருந்தது. எந்தச் சாதாரணப் பெண்ணும் கூட அந்த விஷயத்தை அநாயாசமாகத் தெரிந்து கொண்டு விடுவாள். ஆகவே அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. ஏற்கெனவே தீப்பிழம்பாக இருக்கும் பருன் கோபத்தினால் கொதித்துக் கொழுந்து விட்டு எரியத் தொடங்கி விடுவான். ரேம்பஸுக்கு மிக மிகக் கடுமையான தண்டனை கொடுத்துக் கொலை செய்ய உத்தரவிடுவான் என்பது யாருக்குத்தான் தெரியாது?

அந்தப் பயங்கரப் படுகொலைக் காட்சிகள் கற்பனை உருவம் தரித்துத் நியூனஸின் கண்கள் எதிரே காட்சி அளித்தன. அதைக் கண்ணுற்ற நியூனஸ் திகைத்துத் திணறிப் போய்விட்டாள். ரேம்பஸின் மீது அவளுக்கு இருந்த அன்பு அவளுடைய உள்ளத்தை ஒரு உலுக்கு உலுக்கி விட்டது. அவளுடைய அழகிய விழிகள் ரேம்பஸின் கஷ்ட காலத்தை எண்ணி அன்பு நீர் உகுத்தன. அவள் தன்னை மறந்தாள்; தன்னைச் சுற்றியுள்ள சூழ்நிலையை மறந்தாள். உலகத்தையே கூட மறந்துவிட்டாள். அவளுக்கு ஒரே நினைவு! ஒரே சிந்தனை! ரேம்பஸ் அவளுடைய கண்களை விட்டு அகலாமல் கண்களிலேயே நின்றான். கண நேரத்துக்குக்கூட அவன் அவளுடைய கண்ணிலிருந்தும் கருத்திலிருந்தும் மறையவில்லை.

பொழுது புலர்ந்தது. காலை இளஞ்சூரியன் துயில் உரித்துத் 'தள தள' வென்று பிரகாசிக்கும் முகத்துடன் கீழ்வானத்தின் கோடியிலே தலையை நீட்டினான். நியூனஸ் இருந்த அறைக்குப் பக்கத்தில் உள்ள அறையில் மனிதர்கள் நடமாடும் சத்தம் கேட்டது. நிமிஷத்துக்கு நிமிஷம் அந்த நடமாட்டச் சத்தம் அதிகரித்தது. நியூனஸின் அறைக்கும், அந்த அறைக்கும் இடையிலே ஒரு ஜன்னல் இருந்தது. அந்த ஜன்னலுக்கு இரும்புக் கம்பிகள் போடப்பட்டிருந்தன. 'பருனின் சிறைச்சாலைக்கு நம்மைப் போல் அதிர்ஷ்டக் கட்டையான ஆசாமிகள் யாராவது வந்திருக்கிறார்களா, என்ன?' என்று பார்க்கும் நோக்கத்துடன் நியூனஸ் அந்த ஜன்னல் கதவைத் திறந்து அடுத்த அறையை எட்டிப் பார்த்தாள். அப்பப்பா! அந்த அறையில் அவள் கண்ட காட்சிதான் எவ்வளவு பயங்கரம்! எவ்வளவு கோரம்! அவளுக்குத் தன் நரம்புகளில் உள்ள ரத்த ஓட்டமே நின்று விட்டது போலவும், கை-கால், தோள்-இடுப்பு முதலியன ஒடிந்து நொறுங்கி விட்டது போலவும் உள்ளம் உடைந்து சுக்கு நூறாகி விட்டது போலவும் தோன்றியது. சிறகு ஒடிந்த பட்சி போல் அவள் மனம் துடித்தாள். உள்ளொளியெல்லாம் மங்கி ஒரே கும்பிருட்டாகப் போய்விட்டது போல அவளுக்குத் தோன்றியது. அவள் ஜன்னல் கம்பிகளில் தன் தலையை முட்டுக் கொடுத்துக் கொண்டு இரு கைகளாலும் கம்பியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, அப்படியே அசைவற்று ஜன்னலில் சாய்ந்து விட்டாள். அவள் உள்ளம் உணர்விழந்து விட்டது. உடல் சோர்ந்து விட்டது. அவள் கண்ட அந்தக் கோரக்காட்சி அவளை அப்படியே நிலைக்குத்திடச் செய்து விட்டது.

ரேம்பஸ் தரையில் மிகக் கரடு முரடான பெருங் கல்லுடன் இரும்புச் சங்கிலிகளால் கட்டப் பட்டிருந்தான். அவன் தலைக்கு மேலிருந்த மேற் கூரையுடன் ஆயிரக்கணக்கான மணங்குகள் கனமுள்ள பெரும் பாருங்கல் ஒன்று மிகப் பெரும் சங்கிலிகளின் உதவியைக் கொண்டு





ரேம்பஸின் முகம் ஏகமாக வெளுத்துப் போயிருப்பதை ஜன்னல் கம்பிகளின் இடைவெளி வழியே நியூனஸ் கண்டாள். அவளுக்குப் 'பகீர்' என்றது. ரேம்பஸின் கண்களில் வாழ்க்கையின் ஒளி கணத்துக் கணம், நிமிஷத்துக்கு நிமிஷம் மங்கிக் கொண்டே போவதையும் அவள் கவனித்தாள். சாவு நெருங்க நெருங்கச் சவக் களை எப்படித்தான் ஏற்படுகிறதோ. புரியாப் புதிராகவே இருக்கிறது. காதுகளால் கேட்பதற்கும் கண்களால் காண்பதற்கும் மிகவும் வித்தியாசம் இருக்கத்தான் செய்கிறது. நியூனஸினிடம், உன் காதலன் ரேம்பஸ் இப்படியெல்லாம் சித்திரவதை செய்யப்பட்டுக் கொலை செய்யப்படுவான் என்னும் விஷயத்தைச் சொல்லி மட்டும் இருந்தால் அவள் இவ்வளவு பயந்திருக்கமாட்டாள். தலைசிறந்த பொருளான பெண்மையின் காதலைத் 'திடுதிப்' பென்று இப்படித் தியாகம் செய்யவும் முன் வந்திருக்க மாட்டாள். உண்மையில் அவள் பருனின் வாய் மொழியாக இதே வார்த்தைகளைக் கேட்டபொழுது இவ்வளவு கதிகலங்கி வெலவெலத்துப் போகவில்லை. பருனின் அந்தப் பயமுறுத்தல் இப்படிச் செயலாக முகிழ்வதைக் காண அவளுக்கு உள்ளம் நடுங்கியது; உடல் நடுங்கியது; உதிரம் நடுங்கியது; சதை நடுங்கியது. கண்கள் பூச்சி பறந்தன. அந்தக் காட்சியைத் தன் கண்களால் காண்பது தன் சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம் என்று அவளுக்குப் பட்டது. அவள் கேவிக் கேவி அழத் தொடங்கி விட்டாள். அவளுடைய கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருகத் தொடங்கியது.

கட்டப்பட்டுத் தொங்கிக்கொண்டிருந்தது. அந்தக் கல் அந்த அறையின் நீளத்துக்கும் அகலத்துக்கும் ஏற்றவாறு சற்றுச் சிறிதாக அறைக்குள் ஆடாமல் கொள்ளாமல் இறங்கக்கூடிய அளவுக்குக் கச்சிதமாகச் செதுக்கப்பட்டிருந்தது. அந்தக் கல் இடம் இணைக்கப்பட்டிருந்த தேர் வடத்தையும் விடப் பெரிதான சங்கிலிகள் கூரைக்கு மேலே நிறுத்தப் பட்டிருந்த பெரிய பெரிய சகடைகளின் வழியே சென்று வெகு தொலைவுக்கு அப்பால் இருந்த மைதானத்தில் ஒரு பெரிய பல் சக்கரத்தில் சுற்றப் பட்டிருந்தன. அதைச் சுற்றுவதற்கும், தளர்த்துவதற்கும் பருனின் கைதிகள் மாடுகளுக்குப் பதிலாக உபயோகிக்கப்பட்டு வந்தனர்.

தியூனஸ் ஜன்னலண்டை வந்து நின்று கொண்டு பார்க்காத வரையில், தான் அளித்திருக்கும் தண்டனையை நிறைவேற்றக் கூடாது என்று பரூன் உத்தரவு பிறப்பித்திருக்கலாம் என்று விவேகமும் உள்ளுணர்ச்சியும் சேர்ந்து சாதித்தன. ஏனெனில் அவள் ஜன்னலண்டை வந்து நின்றாளோ, இல்லையோ! சிறைச்சாலைப் பிரதான அதிகாரியின் பார்வை அவள் மீது விழுந்தது.

அடுத்த கணமே மாடுகளுக்குப் பதிலாக அந்தக் கொலை பாதக இயந்திரத்தின் ரத்த வெறி பிடித்த சக்கரத்தைச் சுழற்றுவதற்காகப் பூட்டப்பட்டிருந்த கைதிகளின் முதுகில் 'பளார், பளார்' என்று சவுக்கடி விழத் தொடங்கிவிட்டது. சவுக்கடியின் வலி தாளாமல் அவர்கள் புழுவாய்த் துடித்தனர்; மிகவும் பயங்கரமாக 'ஐயோ! அப்பா!' என்று ஓலமிட்டனர். அந்தப் பயங்கரமான ஓலத்தைக் கேட்டும் சிறைக் காவலாளர்களின் கல் நெஞ்சம் கரையவில்லை. அவர்கள் அடிக்கு மேல் அடி அடிக்கவே, கைதிகள் மெதுவாக நகரத் தொடங்கினர். அந்த இயந்திரமும் இலேசாகச் சுழலத் தொடங்கிற்று.

அந்த இயந்திரம் சுழலத் தொடங்கவே, சகடைகளின் வழியே ஓடியிருந்த இரும்புச் சங்கிலிகள் சிறிது சிறிதாகத் தளர்ந்து கொடுத்தன. அந்தப் பெரும் பாறுங் கல்லும் மிகவும் மெதுவாகக் கீழ் நோக்கி இறங்கத் தொடங்கியது. அதைக் காணும் பொழுது, மரணம்தான் வான வீதியிலிருந்து பூமியை நோக்கி இறங்கி வருகிறதோ என்று எண்ணத் தோன்றியது.

ஜன்னலண்டை நின்று பார்த்துக் கொண்டிருந்த தியூனஸ் அடிபட்ட பறவையைப் போலத் துடியாய்த் துடித்தாள். அவள் அங்கு நடக்கும் சம்பவங்கள் அனைத்தையும் நேருக்கு நேர் நின்று தன் கண்களாலேயே கண்டு கொண்டிருந்தாள். அப்படியிருக்கும்பொழுது அவளுக்கு விஷயம் விளங்கவில்லை என்று சொல்லி விட முடியுமா? சாதாரணமான அறிவு படைத்தவர்களே சட்டென்று ஊகித்து உணர்ந்து கொண்டு விட முடியும் என்றால் இயல்பாகவே புத்திக் கூர்மை வாய்ந்த தியூனஸைப்பற்றிச் சொல்லவா வேண்டும்? அதுவும் கண்களுக் கெதிரே காணப்படும் காட்சியைக் கண்ட பின் புரிந்து கொள்ளுவதற்குக் கேட்கவா வேண்டும்? சவுக்கடிபட்டுக் கொண்டிருந்த கைதிகள் உடல் பலம் அனைத்தையும் ஒன்றுகூட்டிச், சக்கரத்தைச் சுழற்றத் தொடங்கி விட்டனர். சக்கரம் சிறிது வேகமாக சுழல ஆரம்பித்ததுதான் தாமதம்; மலை போன்ற அந்தக் கருங்கல் — மரணத்தைக் காட்டிலும் மிகப் பயங்கரமானதும் தன்னிடையே வரும் எந்தப் பொருளையும் தவிடு பொடியாக்கும் தன்மை வாய்ந்ததுமான அந்தப் பாறுங் கல்—கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே இறங்க ஆரம்பித்தது. அதைக் கண்ட தியூனஸின் கண்களுக்கு அது உயிரற்ற வெறுங் கல்லாகத் தோன்றவில்லை. உயிருள்ள மலைப் பாம்பாக — அதுவும் தன் பூத வுடலைப் புரட்ட முடியாமல் புரட்டிக் கொடுத்துக் கொள்ளும் மிக மிகப் பெரிய மலைப் பாம்பாக— காட்சி அளித்தது. அது வாயைப் பிளந்து





" இந்த மருந்தை ஐந்து ரூபாய் சொல்லுகிறீரே?—வாருங்கள், போகலாம்! பிளாக்மார்க்கெட்டில் இதைவிட மலிவாய் வாங்கலாம்!"

கொண்டு ரேம்பஸை விழுங்க வருவது போலத் தோன்றியது. இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் ரேம்பஸ்......

அதற்கு மேல் நியூனஸினால் யோசிக்க முடியவில்லை. அவன் நடுநடுங்கிப் போய்ப் பின் நகர்ந்து விட்டான். அப்பொழுது அவனுடைய கண்களில் ஒரு சொட்டு நீர் கூட இல்லை அவன் துயரத்தின் எல்லைக் கோட்டை மிதித்து விட்டான். துயரம் மிகவும் உச்ச நிலையை அடையும் பொழுது பொங்கி வரும் நீர் வற்றி உலர்ந்து விடுவது யாருக்குமே சகஜம். அவனுடைய உள்ளம் பதறியது; உடல் நடுங்கியது; தலை சுழன்றது. நாக்கு வறண்டு போய் வாயின் மேல் அண்ணத்துடன் ஒட்டிக் கொண்டு விட்டது. அவனுடைய கண்களெதிரே நாற்புறமும் நல்ல கும்மிருட்டு பரவியது. உலகமே 'கிர்'ரென்று வெகு வேகத்தில் 'தட்டாமாலை' சுற்றுவது போலிருந்தது. அவன் 'தடால்' என்று மதிமயங்கிக் கதிகலங்கித் தரையில் விழுந்தான்.

சில விநாடிக்குள் அவன் தானாகவே சுய உணர்வு பெற்றான். மெதுவாக எழுந்து மறுபடியும் ஜன்னலண்டை வந்து நின்றான். தான் காண விரும்பாத - கனவிலும் கூடக் காண விரும்பாத —அந்தக் காட்சியை அவன் மறுபடியும் ஒரு தடவை கண்டான். அந்தக் கொலைகாரக் கருங்கல் கூரைக்கும் தரைக்கும் நடுமத்தியில் வந்து விட்டது. அதைக் கண்ட நியூனஸின் உடல் முழுவதும் ஒரு தடவை வியர்த்து விறுவிறுத்துவிட்டது.

இக்காரியம் நடந்துதான் தீருமோ? இந்தக் கல் ரேம்பஸினுடைய வாழ்க்கைக்கு ஒரு முடிவு கட்டி விட்டுத்தான் மறு காரியம் பார்க்குமோ?

அந்த எண்ணம் எழுந்ததும், 'கூடாது. அதற்கு இடம் கொடுக்கக் கூடாது' என்று நியூனஸ் தன் மனதுக்குள்ளேயே முணுமுணுத்துக் கொண்டான். 'இடம் கொடுக்கக்கூடாது என்பது ரொம்ப நியாயமான உணர்ச்சிதான்! ஆனால் அதற்கு என்ன செய்வது?' என்று யாரோ உள்ளத்தின் ஆழத்திலிருந்து கேட்பது போலிருந்தது நியூனஸுக்கு. அவன் அக்கணமே யோசனையில் ஆழ்ந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் தானாகவே, 'மாட்டேன்! நான் அவனை எவ்விதத்திலும் சாக விட மாட்டேன். எப்பாடு பட்டேனும் அவனைக் காப்பாற்றியே தீருவேன்!' என்று சொல்லிக் கொண்டான். அதற்குப் பின் சில கணங்களுக்கு அவனுடைய மனம் மௌனச் சிந்தனையில் ஆழ்ந்தது. 'ஆம்! பரூன் என் வாயிலிருந்து அன்பு நிறைந்த ஒரு வார்த்தை வராதா என்று ஏங்கிக் கொண்டிருக்கிறானே! என் வாயிலிருந்து அன்பு நிறைந்த வார்த்தை வர வேண்டும் என்பதற்காக அவன் ஒற்றைக் காலால் தவம் செய்யக் கூடச் சித்தமாயிருக்கிறானே! ஆகவே, நான் வாய் அசைத்தால் போதும்; என் கட்டளையைச் சிரமேற்கொண்டு நிறைவேற்ற அவன் சித்தமாகி விடுவான். அப்படியிருக்கும் பொழுது நமக்கு என்ன கவலை?—ஆம், அதுதான் சரி!' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். ஆனால் அடுத்த கணமே, அவனுடைய உள்ளத்துச் சிந்தனை புரண்டு கொடுத்தது.

'பரூனுக்குக் கட்டளை பிறப்பித்து நான் என் காரியத்தில் வெற்றி கண்டுவிடுகிறேன் என்றே வைத்துக் கொள்ளுவோம். நான் அப்படிச் செய்து விட்டால் அதன் முடிவு என்ன ஆகும்?' என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் எழுந்தது.

நியூனஸ் மறுபடியும் ஒரு முறை அந்த அறையை எட்டிப் பார்த்தான். அப்போது அவனுக்குத் தன்னை ஆயிரக் கணக்கான—இல்லை, இல்லை! லட்சக்கணக்கான தேள்கள்—ஏககாலத்தில் கொட்டி விட்டதுபோலத் தோன்றியது. (தொடரும்)

# புத்தி வந்தது!

ர. வே.

கடியாரத்தின் முட்கள் மணி ஐந்தரை என்பதைக் காட்டிக் கொண்டிருந்தன. நான் காகிதங்களை எல்லாம் அடுக்கி, அவற்றுக்கான 'பைலி'ல் வைத்துக் கட்டி, அதை எடுத்து மேஜை டிராயரில் அடைத்துப் பூட்டி விட்டு, ஒரு தரம் பூட்டை இழுத்துப் பார்த்து விட்டு உலகத்தில் உள்ள குமாஸ்தாக்கள் அனைவரும் செய்யும் இனிய காரியங்களை யெல்லாம் செய்து முடித்து விட்டு, காலில் செருப்பை மாட்டிக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினேன்.

நான்கு பர்லாங்கு தூரம் நடந்திருப்பேன். எதிரே முனிசிபல் பார்க்கின் வாயிலில் இருந்த 'நல்வரவு' என்ற பலகை என் கண்ணில் பட்டது. நம்மை இவ்வளவு தூரம் லட்சியம் பண்ணிக் கூப்பிடுகிறானே என்று முனிசிபாலிட்டிக்காரனை வாழ்த்திக் கொண்டே உள்ளே நுழைந்தேன். கதறிக் கொண்டிருந்த வானொலியைக் கடுகளவும் லட்சியம் செய்யாமல், நேரே சென்று ஒரு பெஞ்சின் மேல் அமர்ந்தேன். ரேடியோ ஓசை காதில் விழாது என்று நினைத்துக் கொண்டுதான் நான் அங்கு சென்றேன். அப்படியும் அது என்னை விடவில்லை. ஏனெனில், பிரம்மாவைப் போல் நான்முகனும் நின்று கொண்டிருந்த ஒலி பெருக்கி ஸ்தம்பத்தின் ஒரு குழல் என்னை நோக்கியிருந்தது.



நான் ரேடியோவில் ஆழ்ந்திருந்தாலும், என் கண்கள் சுற்று முற்றும் கவனித்துக் கொண்டு தான் இருந்தன. திடீரென்று என் கண்ணுக்குத் திகைப் பூட்டிய வண்ணம் ஒரு பொருள் காட்சியளித்தது. மண்ணில் கிடந்த அது பளபளவென்று கண்களைப் பறித்தது. கையில் எடுத்துப் பார்த்தேன்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. கொஞ்சம் கூடத் தேய்வு பெறாத, புலி போட்ட புதிய ரூபாய் நாணயம் ஒன்று எனக்கெதிரே 'குரோட்டன்ஸ்' பாத்தி ஒன்றில் மின்னிக் கொண்டிருந்தது என்றால் இலேசான விஷயமா? நான் காசைத் துடைத்து, மணிப் பர்ஸில் எடுத்துப் போட்டுக் கொண்டேன். அப்புறம் பணம் கிடைத்த உற்சாகத்தில் நானும் வான வீதியில் மிதக்கத் தொடங்கி விட்டேன்.

வான வீதியில் மிதந்து கொண்டிருந்த என்னை இவ்வுலகத்திற்கு மீட்டுக் கொண்டு வந்தவர்கள், சற்று நேரம் கழித்து அந்தப் பக்கம் வந்த ஒரு பையனும் அவனது தாயாருமே. பையன் அழுது கொண்டிருந்தான். அவனுடைய காது மடல் தாயாரின் கையில் சிக்குண்டிருந்தது. அவள் அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தாள் என்பது அவனுடைய காது மடல் சிவந்திருந்த வெப்பிலிருந்தே தெரிந்தது. அவனுடைய கண்கள் ஆபீஸ் சிவப்பு மையளவு சிவந்திருந்தன. அவர்களையே கவனித்துக் கொண்டிருந்தேன்.

"ஏண்டா! எங்கே போட்டாய்? அதையாவது சொல்லித் தொலை!"

"அது தானம்மா, ஞாபக மில்லை!"

"கடையில் போய்ச் சாமான்கள் வாங்கிக் கொண்டு வரச் சொன்னால், உனக்கு இங்கே என்னடா வேலை?"—தாயாரின் அந்தக் கேள்விக்குப் பதிலாகப் பையன் விசித்து விசித்து அழ ஆரம்பித்துவிட்டான்.

"அழாதே! எங்கே விளையாடிக் கொண்டிருந்தாய்? சொல்லு. இன்றைக் கென்று என் மூளையும் இப்படிப் பிசகிப் போய் விட்டதே! உன்னை நம்பி ஒரு ரூபாயைச் சலவையாய்க் கொடுத்து அனுப்பினேனே! நாசமாய்ப் போக நீ!"

அவள் மட்டும் புராண காலத்து ஸ்திரீயாக இருந்தால், உடனே அந்தச் சிறுவன் நாசமாய்ப் போயிருப்பான். நல்ல வேளையாக அப்படி ஒன்றும் நிகழவில்லை!

பையன் தலையில் ஓங்கி ஒரு குட்டுக் குட்டிவிட்டு, அவள், "உன் அப்பா வந்தால், அவருக்கு வேறு நான் பதில் சொல்லித் தீர வேண்

ஞமே! இவனை நம்பி நீ ஒரு ரூபாயை எப்படிக் கொடுக்கலாம் என்று என் தலையை அல்லவா போட்டு உருட்டுவார்? காசு கிடைத்தால் போச்சு! இல்லாவிட்டால், இரு! சொல்லுகிறேன்" என்று கூறிய வாறு, ஆத்திரத்துடன் அவன் முதுகில் ஓங்கி ஒரு அடியும் வைத்தாள்.

அவனுக்கோ இன்னது செய்வதென்றே புரியவில்லை. அடி, உதை எல்லாவற்றையும் பெற்றுக் கொண்டு அழுதான். எனக்கு நடந்தது அவ்வளவும் நன்ருய் விளங்கியது. அவள் சாமான் வாங்கி வரும்படி அவனிடம் ஒரு ரூபாயைக் கொடுத்து அனுப்பியிருக்கிருள். வழியில் அவன் தன் சகாக்களுடன் பார்க்கில் விளையாடும் பொழுது ஒரு ரூபாய் நாணயத்தைக் கீழே காணுமற் போட்டு விட்டான். அதன் பலனுகத் தான் அவன் மேற் கூறிய வாறெல்லாம் அனுபவித்துக் கொண்டிருந்தான்.

நான் எந்தப் பாத்தியில் ரூபாய் கண்டெடுத்தேனே, அந்தப் பாத்திக்கு அருகில் சுட்டிக் காண்பித்து அவன் அழுதவாறே, "அம்மா! இங்கேதான் நான் விளையாடிக் கொண்டிருந்தேன்" என்ருன்.

"அதென்னவோ எனக்குத் தெரியாது. பணம் அகப்படாவிட்டால், உன்னை விட மாட்டேன்" என்ருள் தாயார்.

பையன் தொலைத்த காசுதான் எனக்குக் கிடைத்து விட்டதே! ஆனல், அதைப் பற்றி நான் அதிகம் எண்ண மிடத் தயாராயில்லை. ஏனென்ருல், "இது உன் பணம் அல்ல; கொடுத்து விடு!" என்று மனம் சொல்கிறது போல் எனக்குத் தோன்றியது.

"இங்கேயே தான் நான் விளையாடினேன்!" என்று பையன் இரண்டாம் தரம் அழுதுச் சொன்னுன். "அது எங்கே அகப்படப் போகிறது? இந்தக் காலத்தில் அரிச்சந்திரனே காசை எடுத்துக் கொண்டால்கூட, உண்மையை ஒப்புக் கொள்ளமாட்டானே! நம் ஜனங்களா அவ்வளவு தூரம் செய்யப்போகிருர்கள்? எந்தத் திருட்டுக் களவாணிப் பயல் கையில் அகப்பட்டதோ அது? முழிக்கிற முழியைப் பார். காசைத்தேடி எடுடா!" என்று அவன் அம்மா அவனை இன்னும் அதட்டினுள்.

ரூபாயை அவனிடமே கொடுத்து விடலாமா என்று எனக்கு ஒரு கணம் தோன்றியது. காசு கிடைக்கா விட்டால், இவளுக்கு இப்போது இருக்கிற கோபத்தில் தன் பையனை என்ன செய்வாளோ? பாவம்! பையன் பிழைத்துப் போகட்டும் என்று எண்ணினேன். அதுவும் ஒரு நிமிஷத்துக்குத்தான். அடுத்த கணம் மனம் மாறிவிட்டது. காசு பையில் இருக்கிறதோ என்று ஒரு தரம் என் மணிப் பர்ஸைத் தொட்டுப் பார்த்துக் கொண்டேன்.

பணத்தைத் தர முடியா விட்டாலும், வாயாலாவது பையனைக் காப்பாற்றுவோம் என்று எண்ணிய வண்ணம் நான் அவளிடம் "என் அம்மா! பையனைப் போட்டு இப்படி அடிக்கிருய்?" என்று விசாரித்தேன்.

"பாருங்க, எசமான்! இந்தப் பிள்ளை இப்படி ரூபாயைத் தொலைச்சிப் புட்டு நிற்குது" என்ருள். "குழந்தையைப் பிடித்து அடித்தால், தொலைந்த காசு திரும்பி விடுமா?" என்று நான் கேட்டதை அவள் காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. அவள் 'தேடு, தேடு' என்று சுற்றிலும் தேடினுள். பணம் இங்கே இருக்கும்போது, எவ்வளவு தேடிப் பார்த்தாலும் அங்கே கிடைக்குமா?

உண்மையில், பணத் தாசை எனக்கும் நிறைய உண்டென்பது அன்று தான் எனக்குத் தெரிந்தது. ரூபாயை எடுத்து



அவனிடம் கொடுக்க என் மனம் இடம் கொடுக்கவில்லை. அவர்கள் இருவரும் தேட வரும் முன்பே, நான் அந்தக் காசுக்குக் கடைத் தெருவில் என்ன என்ன வாங்கலாம் என்பதைத் தீர்மானம் செய்து வைத்துக் கொண்டு விட்டேன். அதனால் அப்போது அந்தப் பணத்தை இழக்க எனக்கு மனம் வரவில்லை. அதோடு, எனக்குக் கிடைக்க வேண்டும் என்பதற்காகத் தானே தெய்வம் அந்தக் காசை என் கண்களெதிரே கொண்டு வந்து போட்டிருக்கிறது என்று ஒரு காரணம் வேறு கற்பித்துக் கொண்டேன்.

நான் ஓசைப்படாமல், காசுடன் கடைத் தெருவைப் பார்க்க நழுவினேன். பின்னையாண்டான் ராமு தனக்குப் பேசத் தெரிந்த நாளாக என்னை நச்சரித்துக் கொண்டு வரும் பொருளாகிய ஆடும் குதிரை ஒன்று வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டேன். வாசலில் அவன் நின்று கொண்டிருப்பான்; என்னைக் கண்டதும் ஓடி வந்து உற்சாகத்துடன் வரவேற்பான் என்ற நினைப்பில் நான் நடந்து கொண்டிருந்தேன்.

எனக்கு வாசலில் எவ்வித வரவேற்பு உபசாரமும் கிடைக்கவில்லை. பதிலுக்கு அழுகைச் சத்தம் தான் வந்து கொண்டிருந்தது. சுந்தரி அவன் காதைப் பிடித்துக்



கொண்டிருந்தாள். ராமுவோ பொறுக்க மாட்டாமல் 'ஓ'வென்று அழுது கொண்டிருந்தான். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஒரு நிமிஷ நேரம் ரேழியிலேயே நின்று பேச்சைக் கவனித்தேன்.

"அதென்னவோ, எனக்குத் தெரியாது! எப்படியோ அந்த ரூபாயைத் தேடி எடுத்தால் தான் உனக்குச் சாப்பாடு!" என்று கடையில் வந்த சுந்தரியின் சொற்கள் எனக்கு 'பூர்வ கதை'யைத் தெரிவித்தன. இந்த முன் கதைச் சுருக்கத்தை வைத்துக் கொண்டு நானும் அவ்விடத்திலிருந்து மேற்படி தொடர் கதையில் கலந்து கொண்டேன்.

"ஆமாம், இவனிடம் ஒரு ரூபாயைக் கொடுத்தனுப்பு. உன் மூளையே மூளை!" என்று ஆத்திரம் தீரச் சொன்னேன்.

எனக்கு என்ன வருத்தம் என்றால், அதிர்ஷ்டவசமாய்க் கிட்டிய அந்த ரூபாயும் தொலைந்த ரூபாய்க்குச் சரிக்குச் சரியாகி விட்டதே என்பது தான். போனால் போகிறது என்று ராமுவைக் கண்டித்து விட்டு, அவளிடம் நாம் கண்டெடுத்த ரூபாயைக் கொடுத்துக் கோபத்தைத் தணிக்கலாம் என்று எனக்குத் தோன்றியது.

அதே சமயத்தில் பரசுராமனைப் போல் கோடரியும் கையுமாக வாசலில் ஒருவன் வந்து நின்றான். அவன் "கொஞ்ச நேரம் முன்னால் இங்கே ஒரு பிள்ளை வந்ததுங்களா?" என்று என்னை விசாரித்தான்.

"இங்கே உன் வீட்டுப் பிள்ளை எதுவும் வரவில்லை!" என்று நான் சொன்னேன்.

விறகு வெட்டி என்னை விடுவதாயில்லை. "இல்லை, உங்கள் வீட்டுப் பிள்ளைதான்!" என்றான். இதெல்லாம் இவனுக்கு என்ன விசாரணை என்று நான் ஆச்சரியத்தில் ஆழ்ந்தேன்.

"உங்கள் பிள்ளையைக் கூப்பிடுங்கள்!" என்று அவன் சொன்னது என் ஆச்சரியத்தை இன்னும் அதிகப்படுத்தியது. ராமு வந்து நின்றான். "என் தம்பி, நீ அங்கே ஒரு ரூபாய் நாணயம் ஒன்றைக் கீழே போட்டு விட்டாயா?" என்று கேட்டுக் கொண்டே இடுப்பிலிருந்து ரூபாய்க் காசு ஒன்றை எடுத்து நீட்டினான். "நான் உன் பின்னாலேயே உன்னைக் கூப்பிட்டுக் கொண்டே வருகிறேன். காதில் போட்டுக் கொள்ளாமலே ஓடி வந்து விட்டாயே!" என்று விறகு வெட்டி ராமுவைக் கேட்டான்.

எனக்கு ஏற்பட்ட திகைப்பைச் சொல்லி முடியாது. நம்மிடம் இல்லாத பெருக்



ராமு:— என்னுடைய பிறந்த நாளுக்காக வருஷத்துக்கு ஒரு தரம் பள்ளிக்கூடமெல்லாம் லீவு விடுவார்களடா!

சோமு:—எப்போடா பிறந்தே?

ராமு:—தீபாவளியன்று தான் நான் பிறந்தேண்டா!

சோமு:—போடா! என் பிறந்த நாளை உத்தேசித்து வாரத்துக்கு ஒரு நாள் லீவு விடுவார்கள், தெரியுமா?

ராமு:—அது எப்படிடா முடியும்?

சோமு:—நான் ஞாயிற்றுக்கிழமையில் பிறந்தேண்டா!

---

தன்மை இந்த ஏழை விறகு வெட்டியிடம் இருக்கிறதே என்று திணறிப் போய் விட்டேன். "இந்தப் பணத்தை உன்னிடமே வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை உனக்குத் தோன்ற வில்லையா?" என்று நான் அவனைப்பார்த்துக் கேட்டேன்.

"நமக்கு ஏன் சாமி, இந்தப் பேராசை? சுவாமி கொடுப்பதைக் கொண்டு, திருப்திப் பட வேண்டாமா?" என்றான் விறகுவெட்டி.

"ஏன், இந்தப் பணம் மட்டும் சுவாமி கொடுத்தது இல்லையா? உனக்கு அகப்பட வேண்டும் என்றுதானே அவர் இந்தக் காசை உன் எதிரே போட்டிருக்கிறார்?" என்று கேட்டேன் நான்.

"நீங்கள் வக்கீல் மாதிரிக் கேட்டால், எனக்குப் பதில் சொல்லத் தெரியாது, சாமி! பிறர் காசுக்கு ஆசைப்படக்கூடாது. எனக்குத் தெரிந்தது இவ்வளவுதான்" என்று கூறிவிட்டு, அவன் அங்கிருந்து நடையைக் கட்டிவிட்டான். அந்தக் கணமே ரூபாயைக் கொண்டுபோய்ப் 'பார்க்'கில் அழுதுகொண்டிருந்த பையனின் தாயாரிடம் கொடுத்து விட வேண்டும் என்று எண்ணிக் கொண்டு நான் கிளம்பினேன்.

அடுத்த வீட்டுக்காரனிடம் அவசரத்துக்குச் சைக்கிள் இரவல் வாங்கிக் கொண்டு வெகு வேகமாக நான் அப்போது கடைத் தெரு வழியே 'பார்க்'குக்குப் பறந்துகொண்டிருந்தேன். "அம்மா, உங்கள் இரண்டு பேரையும் சோதிக்க விரும்பினேன். அப்போதே என் பையில் பணம் இருந்தது. இனிமேலாவது சிறு பிள்ளையினிடம் அதிகப் பணத்தைக் கொடுத்தனுப்பாதே. இப்பொழுதாவது புத்தி வந்ததா!" என்று கேட்டு விட்டுச் சாமர்த்தியமாகக் காசைக் கொடுத்து விடவேண்டும் என்று வழி தேடுக நான் யோசனை செய்து கொண்டே சென்றேன்.

சைக்கிளைப் 'பார்க்'கின் வாசலில் கொண்டு போய் நிறுத்தினேன். அங்கே அவர்களைக் காணவில்லை. கொஞ்ச தூரம் அப்பால் சென்றேன். தாயாரும் மகனும் போய்க்கொண்டிருந்தனர்.

அவர்களைப் பார்த்ததும் சைக்கிள் பெடலை இன்னும் வேகமாக மிதித்தேன். அவர்களை நெருங்கினதும் சைக்கிளிலிருந்து தொப்பென்று குதித்தேன். என்னைக்கண்ட அவர்கள் மிரள மிரள விழித்தனர். நான் விஷயத்தை விவரமாகச் சொல்லிப் பையனின் தாயாரிடம் ரூபாயைக் கொடுத்தேன்.

"மவராசா! சௌக்கியமாய் இருக்கணும்!" என்று வாழ்த்து எனக்குக் கிடைத்தது. சற்று நேரத்தில் விறகு வெட்டி அந்தப் பக்கமாக வந்தான். இங்கு எதற்காக இவன் வருகிறான் என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவனும் என்னை ஆச்சரியத்தோடு பார்த்தான். "இவனை இப்போ எங்கே அழைச்சிட்டுப் போறே?" என்று அவன் என் எதிரே நின்று கொண்டிருந்தவளைக் கேட்டான். எனக்கு அவர்களது உறவு விளங்க அதிக நேரம் பிடிக்கவில்லை. "அதை ஏன் கேட்கறே, போ! உன் மகன் இன்னிக்குப் பண்ணின வேலை......" என்று நீளமாக அவள் கதையைத் தொடங்குவதற்கு முன்பாகவே, நல்ல வேளையாக சைக்கிள் கொண்டு வந்தோமே என்று எண்ணிக் கொண்டு, அதில் ஏறிச் சிட்டாய்ப் பறந்து வீட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

## சுசீலா கிப்ஸ் உபயோகிக்கிறாள்
## அவள் அழகான பற்களைப் பெறுவாள்

**1** சுசீலா தனது கிப்ஸ் டென்டிபிரிஸின் அழகான டப்பியையும், இனிய புதிய மணத்தையும் விரும்புகிறாள்.

**2** அவள் பிரஷை தண்ணீரில் நனைத்து கிப்ஸ் டென்டிபிரிஸ் கட்டியில் தேய்க்கிறாள்.

**3** அவள் எல்லா பற்களையும் தேய்க்கிறாள். (மேலும் கீழுமாக) உள்ளும் வெளியும் சுத்தம் செய்கிறாள்.

**4** பிறகு தண்ணீரால் வாயை கொப்புளிக்கிறாள். இப்பொழுது கிப்ஸ் உபயோகிப்பதால் அது அழகான பற்களைப் பெற உதவும்.

### <u>உங்கள்</u> குழந்தைகளும் கிப்ஸ் உபயோகிக்கிறார்களா?

கரகரப்பான சுத்தம் செய்யும் வஸ்துக்கள், சாம்பல், கரி இவை போன்றவை, குழந்தைகளின் பற்களுக்கு ஊறு விளைவிக்கலாம். உங்கள் குழந்தைகளை சிறுவயதிலிருந்தே கிப்ஸ் டென்டிபிரிஸ் உபயோகிக்கச்செய்யுங்கள். அவர்கள் பெரியவர்களானதும் வெண்மையான குற்றமற்ற பற்களைப்பெறுவார்கள். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் பற்களுக்கோ ஈறுகளுக்கோ ஒருபொழுதும் கெடுதல்செய்வதில்லை. குழந்தைகளும் பெரியவர்களைப் போலவே, கிப்ஸை விரும்புகிறார்கள். அதற்கு காரணம் கிப்ஸின் இனிய புதிய வாசனையும், தேர்ந்தெடுக்க 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகள் இருப்பதுவும்தான்.




## கிப்ஸ் டெண்டிபிரிஸ்

ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது

GD. 24-172 TM

# பாலும் பாவையும்




சென்ற வருஷம் சென்னை கந்தசாமி கோயில் பக்கம் போயிருந்தால் நீங்கள் கனகலிங்கத்தைப் பார்த்திருக்கலாம். அவன் அங்கே ஒரு புத்தகக் கடையில் வேலை செய்து கொண்டிருந்தான். அவன் உள்ளம் வெள்ளைதான்; ஆனால் உடலின் நிறம் கறுப்பு. அளவுக்கு மீறிய உயரம்; ஆனால் ஆஜானுபாகு அல்ல. அவனை அழகன் என்று சொல்ல முடியாது; ஆனால் அவலட்சணம் என்றும் சொல்வதற்கில்லை. காற்றுப் புகாத துருத்தியைப் போல அவன் உடம்பு எப்பொழுது பார்த்தாலும் எலும்பும் தோலுமாக இருக்கும். பார்த்தவுடனே, அவன் சேஷன் விதிகளைப் பரிபூரணமாக அனுசரிப்பவன் என்று சொல்லிவிடலாம். அடியில் ஒரு காலு முழ வேஷ்டி; மேலே ஒரு ஜிப்பா — இரண்டும் வெகு காட்டனாகச் சலவைத் தொழிலாளியின் முகத்தைக் காணாதவை போலிருக்கும். வயதுக்கு ஏற்றாற்போல் அவனிடம் அமைந்திருந்தது ஒன்றே ஒன்றுதான்—அதுதான் அவனுடைய சம்பளம். அவனுக்கு வயதும் முப்பது; சம்பளமும் ரூபாய் முப்பது!—ஆனால் வயதைக் கணக்கிட்டு அவனுடைய முதலாளி அவனுக்குச் சம்பளம் கொடுக்கவில்லை என்பதை இங்கே சொல்லிவிட வேண்டும்.

தாய் தந்தையற்ற கனகலிங்கம் அப்போது பிரம்மசாரியாகத்தானிருந்தான். அதைப் பற்றி அவன் அவ்வளவாகக் கவலைப்படவும் இல்லை. மேலும், கல்யாணமென்றால் சும்மாவா?—அதற்கு முன்னாலும் செலவு; பின்னாலும் செலவு. தன் செலவுக்கே 'தகிங்கிணதோம்' போடும் கனகலிங்கம், கல்யாணச் செலவுக்கு எங்கே போவான்?

'பரோபகாரிக'ளான ஹோட்டல் காரர்களை எட்டிக் கூடப் பார்க்க முடியாதபடி தனக்குச் சம்பளம் கிடைத்து வந்ததால், கனகலிங்கம் மாதம் இருபது ரூபாய் கொடுத்துத் தன் நண்பன் ஒருவன் வீட்டில் சாப்பிட்டு வந்தான். பாக்கிப் பத்து ரூபாயைத் தான் இருந்த அறைக்கு வாடகையாகக் கொடுத்து வந்தான்.

மாதம் முப்பது ரூபாய் சம்பளம் தவிர, கடையின் முதலாளி அவனுக்குத் தினசரி காலணா 'தக்ஷிணை'யும் கொடுத்து வந்தார். அதைத்தான் அவன் தன்னுடைய கைச் செலவுக்கும், மற்றச் செலவுகளுக்கும் வைத்துக் கொள்வது வழக்கம்.

இந்த ரீதியில் பத்துப் பதினைந்து வருஷ காலத்தை அவன் எப்படியோ கழித்துவிட்டான். அதுவரை அவன் முன்னுக்கு வராமலிருந்ததற்குக் காரணம் எத்தனையோ இருந்தன. அவை எல்லாவற்றையும்விட முக்கியமானது, அவன் எதையும் வெளிப்படையாகச் சொன்னது; வெளிப்படையாகச் செய்தது.

அதற்கு உதாரணமாக இந்தச் சம்பவத்தைத்தான் பாருங்களேன்—ஒரு நாள் மாலை நேரம். முதலாளி காப்பி சாப்பிடப் போயிருந்தார். கனகலிங்கம் மட்டும் கடையில் இருந்தான். அப்பொழுது ஓர் எழுத்தாளர் கையில் ஒரு கட்டுக் கையெழுத்துப் பிரதியுடன் கடைக்கு வந்து, "முதலாளி இல்லையா?" என்று கேட்டார்.

"இல்லை; உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று விசாரித்தான் கனகலிங்கம்.

"அருமையான நூல் ஒன்று எழுதியிருக்கிறேன்; அதைப் புத்தகமாக வெளியிட வேண்டும்......"

வந்தவர் தாம் சொல்லவந்ததை முடிக்கு முன்பே, "ஆசிரியர் உயிரோடு இருக்கிறாரா, செத்துவிட்டாரா?" என்று கேட்டான் கனகலிங்கம்.

வந்தவருக்குத் தூக்கிவாரிப் போட்டது. "ஏன்?" என்று அவர் தாக்குழறக் கேட்டார்.

"இங்கே செத்துப் போன நூலாசிரியர்களின் நூல்களைத்தான் வெளியிடுவது வழக்கம்......"

"அப்பொழுதுதான் அந்த நூலுக்கு ஒரு தனி மகத்துவம் இருக்குமென்றா?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை; ஆசிரியருக்கென்று பணம் கொடுக்க வேண்டிய அவசியம் இராதல்லவா?"

இதைக் கேட்டதும் அந்த எழுத்தாளருக்குக் கோபம் வந்து விட்டது. "அப்படியானால் நீங்கள் செத்துப் போனவனிடமிருந்தா காகிதம் வாங்குகிறீர்கள்?" என்று கேட்டார்.

"இல்லை; உயிரோடு இருப்பவனிடம் தான் வாங்குகிறோம்" என்றான் கனகலிங்கம்.

"அப்படியானால் அவனுக்கு நீங்கள் பணம் கொடுக்க வேண்டியிருக்குமே!" என்று சொல்லி விட்டு, எழுத்தாளர் துப்பாக்கியிலிருந்து கிளம்பிய குண்டைப் போலக் கிளம்பினார்.

அதற்குள் கையில் ஒரு தினசரிப் பத்திரிகையுடன் அங்கே வந்த முதலாளி எழுத்தாளரைத் தடுத்து நிறுத்தி, "என்ன விஷயம்?" என்று விசாரித்தார். அவர் நடந்த விஷயத்தைச் சொன்னார்.

உடனே, "அவன் கிடக்கிறான், மடப் பயல்! அவனுக்கு என்ன தெரியும்?—ஏண்டா, இங்கே செத்துப் போனவர்களின் புத்தகங்களை மட்டுமா நாம் போட்டுக்கொண்டிருக்கிறோம்?—நீங்கள் கொடுத்துவிட்டுப் போங்கள், ஸார்! நான் பார்த்து ஒரு வாரத்துக்கெல்லாம் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கிறேன்" என்றார் முதலாளி.

எழுத்தாளர் அவரிடம் கையெழுத்துப் பிரதியைக் கொடுத்துவிட்டுக் கனகலிங்கத்தை ஒரு தினுசாகப் பார்த்துக்கொண்டே கடையை விட்டுச் சென்றார். அவருடைய தலை மறைந்ததும், "ஏண்டா, உனக்கு நான் என்ன சொன்னாலும் தெரியவில்லை?—நம்முடைய 'பாலிஸி'யை இப்படியா வருவோர், போவோரிடமெல்லாம் வெளிப்படையாகச் சொல்லிக்கொண்டிருப்பது? ஆசாமியைத் தான் நேரில் பார்த்தாச்சு; அப்புறம் 'நீர் உயிரோடு இருக்கிறீரா, இல்லையா?' என்று கேட்பானேன்? பேசாமல் கையெழுத்துப் பிரதியை வாங்கி வைத்திருந்து ஒரு வாரத்துக்குப் பிறகு திருப்பிக் கொடுத்துவிட வேண்டியதுதானே?—சரி, இந்த இழவை எந்த மூலையிலாவது கொண்டு போய்ப் போட்டு விட்டு வா!—உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்......" என்றார் முதலாளி.

கனகலிங்கம் அந்தக் கையெழுத்துப் பிரதியைக் கொண்டு போய் வைத்துவிட்டு



வந்து, "என்ன விஷயம்?" என்று விசாரித்தான்.

"நாளை மறுநாள் அருந் தமிழ் வளர்த்த அகஸ்தியனுக்குக் கலைஞானபுரத்தில் விழா கொண்டாடப் போகிறார்களாம். மூன்று நாட்கள் விழா தொடர்ந்து நடக்குமாம். இங்கேதான் வியாபாரம் மந்தமாயிருக்கிறதே! நீ ஒரு முந்நூறு ரூபாய்ப் புத்தகங்களுடன் அங்கே போய்விட்டு வருகிறாயா?" என்று கேட்டார் முதலாளி.

கனகலிங்கம் ஒன்றும் பதில் சொல்லாமல் ஒரு நிமிஷம் இருந்தான்.

"ஏன் பேசாமலிருக்கிறாய்?" என்று கேட்டார் முதலாளி.

"நான் என்னத்தைச் சொல்வது? அகஸ்தியனுக்காக அனுதாபப் படுகிறேன்!" என்றான் கனகலிங்கம்.

"என்ன, அப்படிச் சொல்கிறாய்?"

"அவன் ஒருவன்தான் இந்த விழாக்காரர்களின் கையில் இதுவரை சிக்காமலிருந்தான். பாவம், இப்பொழுது அவனும் அகப்பட்டுக் கொண்டான் போலிருக்கிறது!"

"நமக்கு ஏன் இந்த வீண் வம்பெல்லாம்?—இகழ்வதாயிருந்தால் எதை வேண்டுமானாலும் இகழ்ந்து கொண்டிருக்கலாம்; அதே மாதிரி புகழ்வதாயிருந்தாலும் எதை வேண்டுமானாலும் புகழ்ந்துகொண்டிருக்கலாம்—நமக்குத் தெரிய வேண்டியதெல்லாம் என்ன?—அங்கே ஏதாவது புத்தக வியாபாரம் நடக்குமா, நடக்காதா என்பதுதான்!

"எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. அகஸ்தியனுக்கு இனி யாரும் பெரும் புகழும் தேடி வைக்க வேண்டாம். அவன் ஒருவேளை உயிரோடிருந்து ரேஷன் அரிசிக்குக் காசில்லாமல் திண்டாடினாலும் யாராவது அவனுக்கு ஒரு நிதி திரட்டிக் கொடுக்கலாம். அதற்கும் இப்பொழுது அவசியமில்லை. அகஸ்தியனையும் பணத்தையும் துணையாகக் கொண்டு பெரும் புகழும் அடைய விரும்பும் சில பிரகிருதிகள் அவனுக்கு விழா நடத்தப் போகிறார்கள். பொழுது போக்குக்குக் காசு செலவழிக்க வழியில்லாதவர்கள் அங்கே வந்து கூடப் போகிறார்கள். அப்படிப்பட்ட இடத்தில் புத்தக வியாபாரம் எப்படி நடக்கும்? ஆடல் பாடலுக்குப் பத்துப் பதினைந்து ரூபாய் அநியாயமாக விட்டெறிபவர்களும், அரை நிர்வாணக் காட்சியை சினிமாவில் அலுக்காமல் பார்ப்பதற்காக மூன்று நாட்களுக்கு முன்னரே இரண்டரை ரூபாய் டிக்கெட்டை முண்டியடித்துக் கொண்டு வாங்குபவர்களும் நிறைந்த இந்தப் பட்டணத்திலேயே புத்தகம் என்றால் 'இரவல் தருகிறாயா?' என்று கேட்கிறார்கள். அப்படியிருக்கும்போது......"

"அது எப்படி வேண்டுமானாலும் இருந்து விட்டுப் போகட்டும். நீ அங்கே போய்த்தான் வரவேண்டும்......"

"சரி."

"நாளை இரவு வண்டிக்குப் போகிறாயா?"

"போகிறேன்."

"இந்தா, இந்தப் பத்து ரூபாயை வைத்துக் கொள்; கலைஞானபுரம் போய்ச் சேருவதற்கு இது போதும். நாளைக் காலையில் வந்ததும் புத்தகங்களைப் பொறுக்கி எடுத்துப் 'பார்சல்' கட்டி ரயிலில் அனுப்பிவிடு. நீ போய் அங்கே 'டெலிவரி' எடுத்துக் கொள்ளலாம். என்ன சொல்கிறாய்?"

"அப்படியே செய்கிறேன். ஆனால் திரும்பி வருவதற்கு......"

"பணம் வேண்டும் என்கிறாயா? அதற்குத்தான் புத்தகங்கள் இருக்கின்றனவே?"

"விற்காவிட்டால் ......?"

"என்ன தம்பி, நீ கொஞ்சங்கூடத் தன்னம்பிக்கை இல்லாதவனாயிருக்கிறாயே! வாழ்க்கையில் தன்னம்பிக்கைதான் அவசியம் வேணும், தம்பி!—நீ போ; பயப்படாமல் போ! நீ கொண்டு போகும் புத்தகங்கள் உனக்கு வேண்டிய காசைக் கொடுக்கும். தினசரி உன்னுடைய செலவுக்கு நீ இரண்டு ரூபாய் எடுத்துக் கொள்; அங்கிருந்து திரும்பி வருவதற்கும் ஒரு பத்து ரூபாய் எடுத்துக் கொள். பாக்கியை என்னிடம் கொண்டுவந்து கொடுத்தால் போதும்."

"போனதும் அங்கே நான் ஏதாவது ஒரு ஹோட்டலில்தானே தங்கவேண்டும்? ஹோட்டல் அறைக்கு முன் பணமாக ஏதாவது கொடுக்க வேண்டாமா?"

"கொடுக்க வேண்டியதுதான்!" என்று சொல்லிவிட்டு, முதலாளி அவனிடம் இன்னும் ஒரு ஐந்து ரூபாயை எடுத்துக் கொடுத்து, "போதுமா?" என்று கேட்டார்.

"போதும்" என்று சொல்லிவிட்டு, "அதற்குமேல் கேட்டால்தான் நீங்கள் கொடுக்கப் போவதில்லையே!" என்று தனக்குள் நினைத்துக் கொண்டான் கனகலிங்கம்.

## 2

கலைஞானபுரத்தில் உள்ள 'கலா விலா'வில் கனகலிங்கம் தங்கினான். அன்றிரவு அவன் சாப்பிட்டுவிட்டுப் படுக்கப் போகும்



டிக்கெட் கலெக்டர்:—அம்மா, இவர்கள் எல்லாருக்குமா அரை டிக்கெட் வாங்கியிருக்கிறீர்கள்?

ஸ்திரீ:—ஆமாம்......!

டிக்கெட் கலெக்டர்:—இதோ, ரயில்வே கட்டணப் புத்தகத்தில் என்ன போட்டிருக்கிறது, தெரியுமா?

ஸ்திரீ:—என்ன போட்டிருக்கிறது?

டிக்கெட் கலெக்டர்:—'பன்னிரண்டுக்கு உட்பட்டவர்களுக்கு அரை சார்ஜ் வசூலிக்கப்படும்' என்று போட்டிருக்கிறது......

ஸ்திரீ:—இங்கே என் குழந்தைகள் பதினொரு பேர் தானே இருக்கிறார்கள்?

---

போது மணி எட்டு, எட்டரை இருக்கும். மறுநாள் காலை 'அகஸ்தியர் விழா' ஆரம்பமாக இருந்தது. அதற்காக அந்தப் புத்தகத்தில் நாலு, நாலு பிரதிகளை எடுத்துத் தனியாக வைத்து விட்டு, அவன் படுக்கையை விரித்துப் படுத்தான்.

எங்கிருந்தோ ஒரு பெண்மணியின் 'விம்மல் சத்தம் வந்து அவன் காதில் விழுந்தது!

எழுந்து உட்கார்ந்து, அந்த விம்மல் சத்தம் எங்கிருந்து வருகிறது என்று கவனித்தான்.

அந்தச் சத்தம் வேறு எங்கிருந்தும் வரவில்லை; அவனுடைய அறைக்கு அடுத்தாற்போலிருந்த அறையிலிருந்துதான் வந்து கொண்டிருந்தது!

'அடுத்த அறையில் யாரோ கணவனும் மனைவியுமாக வந்து தங்கியிருக்கிறார்கள் போலிருக்கிறது!— வந்த இடத்திலாவது இவர்கள் வம்பில்லாமல் இருக்கக் கூடாதா? வீட்டிலும் சண்டை; வெளியிலும் சண்டைதானா? — வள்ளுவர் சொன்ன இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம், மனை மாட்சி—இவற்றின் லட்சணம் இதுதானா?" என்று தனக்குள் அலுத்துக் கொண்டே, கனகலிங்கம் மீண்டும் படுக்கையில் படுத்தான்.

நிமிஷத்துக்கு நிமிஷம் அந்த விம்மல் சத்தம் அதிகரித்துக் கொண்டே சென்றது!

'இது என்ன சங்கடம்?—மனைவியை அழ வைத்து விட்டுக் கணவன் என்ன செய்து கொண்டிருக்கிறான்? அவளை அவன் சமாதானப்படுத்தக் கூடாதோ?'

கனகலிங்கம் மறுபடியும் எழுந்து உட்கார்ந்து சுற்றுமுற்றும் பார்த்தான்.

விம்மல் சத்தம் நின்று, அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது!

கனகலிங்கம் எழுந்து நின்றான்; சிறிது நேரம் அப்படியும் இப்படியுமாக அந்த அறைக்குள்ளேயே உலாவினான்.

'இந்த வேதனையை எவ்வளவு நேரம் சகித்துக் கொண்டிருப்பது? கணவனுக்காக மனைவி தூங்காமலிருக்கலாம்; மனைவிக்காகக் கணவன் தூங்காமலிருக்கலாம். இவர்களுக்காக நான் ஏன் தூங்காமலிருக்க வேண்டும்?'

கனகலிங்கம் தன் அறையை விட்டு வெளியே வந்தான். அந்த ஹோட்டல் மாடியில் அவர்கள் தங்கியிருந்த இரண்டு அறைகளைத் தவிர வேறு அறைகள் எதுவும் இல்லை. ஹோட்டல் தொழிலாளிகள் அனைவரும் படுத்துக்கொண்டு விட்டார்கள். முதலாளி கதவை இழுத்துப் பூட்டிக் கொண்டு வீட்டுக்குப் போய்விட்டார். தெருவிலும் ஜன நடமாட்டம் அதிகமாக இல்லை. அங்கங்கே ஓரிருவர் ஏணியின் மீதும் சுவரின் மீதும் ஏறி, 'அகஸ்தியர் விழா'வுக்காக—இல்லை, கூலிக்காக—மாவிலைத் தோரணங்கள் கட்டிக் கொண்டிருந்தனர். அந்தத் தோரணங்களுக்கு இடையிடையே கட்டப்பட்டிருந்த அட்டைகளில் 'அகஸ்டியர்' வாழ்ந்து கொண்டிருந்தார்; அவருடன் 'டமி'லும் போனால் போகிறதென்று வாழ்ந்து கொண்டிருந்தது!

ஒரு கணம் கைப்பிடிச் சுவரில் கைகளை ஊன்றிய வண்ணம் மேற்கூறிய காட்சியைக் கவனித்துக் கொண்டிருந்த கனகலிங்கம், மறுகணம் தன் அறைக்குத் திரும்பினான்.

அப்பொழுதும் அடுத்த அறையிலிருந்து வந்து கொண்டிருந்த அழுகைச் சத்தம் நிற்கவில்லை!

'அட கடவுளே! நல்ல முறையில் அவளைச் சமாதானப்படுத்த முடியாவிட்டாலும் கொஞ்சம் அதட்டி மிரட்டியாவது பார்க்கக் கூடாதா, அவன்? ஆசாமியின் குரலையே காணோமே! பெட்டிப் பாம்பாகச் சுருண்டு கிடக்கிறானோ, அவன்? — அதெல்லாம் ஒன்றும் இருக்காது; அவன் அவ்வளவு சாது

வாக இருந்தால் அவனை என் வம்புக்கு இழுத்திருக்கப் போகிறான்?—ஒரு வேளை......!'

கனகலிங்கம் கொஞ்சம் துணிந்து, மெள்ள அடுத்த அறையை நெருங்கினான். நல்ல வேளையாகக் கதவு உள்ளே தாளிடப் படாமல் வெறுமனே சாத்தி வைக்கப் பட்டிருந்தது; சத்தம் செய்யாமல் கதவைக் கொஞ்சம் திறந்து உள்ளே எட்டிப் பார்த்தான்.

இது என்ன கூத்து!—உள்ளே இருந்தவள் ஒரு பெண்; ஒரே ஒரு பெண்!—அவளுடன் யாரும் இல்லை; ஆமாம், இல்லவே இல்லை!

"அம்மா......!"

இந்த வார்த்தை அவன் வாயிலிருந்து சரியாகக் கூட வெளிவரவில்லை. அதற்குள் பழைய சம்பவமொன்று அவனுடைய நினைவுக்கு வந்துவிட்டது. ஒரு சமயம் அவன் இப்படித்தான் ஒரு பெண்மணியை 'அம்மா......!' என்று அழைத்துவிட்டான். வந்தது மோசம்; அவள் 'என்னைப் பார்த்தால் உனக்கு அவ்வளவு வயதாகிவிட்டவள் போலவா தோன்றுகிறது!' என்று கத்திக்கொண்டே அவனுடன் சண்டைக்கு வந்து விட்டாள்!—அதிலிருந்து எந்தப் பெண்மணியைக் கண்டாலும் அவன் 'அம்மா!' என்று அழைப்பதில்லை. இப்பொழுது......

'சரி, வேறு என்னவென்று அழைப்பது?'

"அம்மா......!"

அவள் 'சட்'டென்று அழுகையை நிறுத்தி, கண்களை அவசர அவசரமாகத் துடைத்துக்கொண்டு திரும்பிப் பார்த்தாள்!

கனகலிங்கத்தின் பார்வை அவள் கழுத்தின்மீது விழுந்தது. அவன் எதிர்பார்த்தபடி அவளுடைய கழுத்தில் தாலி இல்லாமற் போகவில்லை; இருந்தது!

'அப்படியானால் இவள் கணவன் எங்கே? எங்கேயாவது போயிருப்பானோ?—நான் இவளை விசாரிக்கப் போய், திடீரென்று அவன் வந்து சேர்ந்து, அதன் காரணமாக ஏதாவது விபரீதம் ஏற்பட்டால்......?'

கனகலிங்கம் திரும்பினான்.

"நில்லுங்கள்!—ஐயா, நில்லுங்கள்!" என்றாள் அந்தப் பெண்.

கனகலிங்கம் நின்றான்.

"உள்ளே வாருங்கள்!" என்றாள்.

கனகலிங்கம் உள்ளே சென்றான்.

இத்தனைக்கும் அந்தப் பெண் அப்போது மகுடி வாசித்துக் கொண்டிருக்கவில்லை; கனகலிங்கமும் அதற்குக் கட்டுப்பட்டு ஆடிக்கொண் டிருக்கவில்லை!

நடந்ததெல்லாம் இதுதான்; அவன் அவளை ஒருமுறை—ஆம், ஒரே ஒரு முறை—ஏற இறங்கப் பார்த்து விட்டான்!

அந்தப் பெண்ணும் அப்பொழுதுதான் பிறந்திருக்கவில்லை; அவள் பிறந்து குறைந்த பட்சம் பதினாறு வருஷங்களாவது ஆகியிருக்கும். ஆயினும் அன்று மலர்ந்த மலரைப் போல—பின் பனிக் காலத்துப் புல்வெளியைப்போல—நீண்ட கோடை மழைக்குப் பிறகு 'குபீ'ரென்று வெளுத்த வானத்தைப் போல—அவள் அழகு விகசித்தது!

ஆனால் அவள் அழகு ஏழ்மையின் இரக்கத்தக்க அழகு அல்ல; செல்வத்தின் செருக்கு மிக்க அழகு. மந்திரவாதியைப் போல நிலைத்த கண் நிலைத்தபடி பார்க்கச் செய்யும் அவளது கொல்லும் விழிகளும், கண்டவுடன் ஆசைகொண்டு மின்னத் தோன்றும் அவளது குழந்தைக் கன்னங்களும், மேலும் மேலும் இன்பத்தைக் காணத் துடிதுடிக்கும் அவளது உதிராத இதழ்களும் அவள் கவலை யென்பதையே இன்னதென்று அறியாமல் வளர்ந்தவள் என்பதை எடுத்துக் காட்டின.

அத்தகைய அழகைக் கண்டு கனகலிங்கத்தின் கண்கள் சும்மா இருக்குமா?—அவை அந்த அழகியின் அழகைத் திருட்டுத்தனமாகப் பருகின—ஆம், அவளுக்கும் தெரியாமல்தான்!

"ஐயா!......இனி......இனி......நீங்கள்தான்......எனக்குத் துணை!" என்றாள் அந்தப் பெண் தட்டுத் தடுமாறிய வண்ணம்.

கனகலிங்கம் அசந்து போய், "நான்...நான்...நானா...!" என்று குழறினான்.

"ஆமாம்; நீங்கள்தான்!—எனக்கு இனி வேறு யாரும் கதியில்லை!"

"உங்கள் கணவர்......?"

"'என் கணவரா!—இல்லை, என் காதலர் என்று சொல்லுங்கள்!—அவன் நாசமாய்ப் போகட்டும்; அவனைப் பாம்பு பிடுங்கட்டும்; அவன்மீது மோட்டார் கார் ஏறட்டும்; அவன் ஏறிச் செல்லும் ரயில் கவிழட்டும்......"

"வேண்டாம், அம்மா! ரயில் கவிழ்ந்தால் அவன் மட்டும் சாகமாட்டான்; அவனுடன் எத்தனையோ நிரபராதிகள் சாக நேரிடும்..."

"பாண்டியனுக்காக மதுரைமா நகரைக் கொளுத்தும்போது கண்ணகி மற்றவர்களுக்காகக் கவலைப்பட்டாளா? இராவணனுக்காக இலங்கையைக் கொளுத்தும்போது அனுமார் சீதா தேவிக்காகக் கவலைப் பட்டாரா? நான் மட்டும் அந்தத் துரோகனுக்காக ரயில் கவிழ வேண்டுமென்று நினைக்கும்

போது மற்றவர்களைப் பற்றி என் கவலைப் பட வேண்டும்?"

"கோபம் எவ்வளவு கொடியது என்பதைத்தான் அந்தக் கதைகள் காட்டுகின்றன. அத்தகைய கோபத்துக்கு நீங்களும் ஆளாக வேண்டாம் என்கிறேன்......"

"அந்தக் கதைகள் கிடக்கட்டும்; என்னுடைய கதையைக் கொஞ்சம் தயவுசெய்து கேட்கிறீர்களா?" என்றாள் அந்தப் பெண்.

"சொல்லுங்கள்; கேட்கிறேன்" என்றான் கனகலிங்கம்.

"நானும் அந்த கய வஞ்சகனும் சென்னைக் கலாசாலையொன்றில் சேர்ந்து, 'ஹாஸ்ட'லில் தங்கிப் படித்து வந்தோம்..."

"ஓஹோ! கதை பழைய கதையாகத்தான் இருக்கும் போலிருக்கிறதே......!"

"ஆமாம், வாழ்க்கையே பழைய வாழ்க்கையா யிருக்கும்போது கதை மட்டும் எப்படிப் புதிய கதையா யிருக்கும்?"

"அதற்காக ஒருத்தியைப் பலரும், பலரை ஒருத்தியும் கல்யாணம் செய்து கொண்டு ஒழுக்கத்தைக் கைவிடக் கூடாதல்லவா?"

"ஏது, நீங்கள் ரொம்பப் பொல்லாதவரா யிருப்பீர்கள் போலிருக்கிறதே!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை—பேச்சுத்தான் அப்படியிருக்கும்; நடத்தை அதற்கு நேர் விரோதமாயிருக்கும்!"

"அதுதானே மனித சுபாவம்?—அப்படிப் படித்துக்கொண்டு வரும்போது......"

"உங்கள் இருவருக்குமிடையே காதல் 'தொபுகடீ'ரென்று குதித்ததாக்கும்!"

"அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்!"

"நடுவே 'வில்லன்' யாரும் வரவில்லையா?"

"வந்தான்; ஆனால் அவன் மகா சாது வில்லனாக இருந்தான். அவன் பெயர் தசரதகுமாரன். சாக்ஷாத் தசரதகுமாரனே சீதாதேவிக்காகச் சிவ தனுசை ஒடித்தான்; மாரீசனை வதைத்தான்; இராவணனுடன் போரும் தொடுத்தான். இந்தத் தசரத குமாரன் ஒருமுறை என்னுடன் வந்து 'மாட்டினி ஷோ' பார்க்கக் கூட விரும்பவில்லை—அவ்வளவு பயம்! — என்னைப் பார்த்துப் பெருமூச்சு விடுவதோடு அவன் தன் காதலை நிறுத்திக் கொண்டான். இளமையின் இதயத் துடிப்பை அறியாத அவனுடைய நடத்தை எனக்குக் கொஞ்சங் கூடப் பிடிக்கவில்லை. ஆகவே......"

"நீங்கள் தசரத குமாரனைக் கைவிட்டு, இளமையின் இதயத் துடிப்பை அறிந்த பழைய அந்த மகானுபாவனுடன் கூடிக் குலாவினீர்களாக்கும்!"

"ஆமாம்; அந்த மகானுபாவனின் அழகைவிட அவன் பேச்சுத்தான் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அவன் என் அழகை அனுபவித்த விதமே அலாதி. அடிக்கடி நான் அணிந்து கொண்டிருக்கும் நகைகளைச் சுட்டிக் காட்டி, 'இந்த நகைகள் கூட உன்னால் எவ்வளவு அழகு பெற்று விடுகின்றன!' என்று கூறி அதிசயிப்பான் அவன். அதைக் கேட்கும்போதெல்லாம் என் உச்சி குளிர்ந்து விடும்! — இப்படி எத்தனை எத்தனையோ சம்பவங்கள்!— இத்தனைக்கும் நாங்கள் இருவரும் ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள் கூட அல்ல. நான் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்தவள்; அவன் ராமநாதபுரத்தைச் சேர்ந்தவன்......"

"அப்படிச் சொல்லுங்கள்! — உங்கள் இருவருக்கும் மாதந்தோறும் ஊரிலிருந்து பணம் வந்து கொண்டிருந்ததாக்கும்?— இந்தக் காதலே எப்பொழுதும் இப்படித்தான்; என்னைப்போல் சொந்தமாக உழைத்துச் சம்பாதித்த காசைக் கொண்டு வாழ்க்கை நடத்துகிறார்கள், பாருங்கள்—அவர்களுக்கிடையே இந்தக் காதல் உதயமாவதில்லை; பிறத்தியார் காசில் வயிற்றை வளர்ப்பவர்களுக் கிடையேதான் இந்தக் காதல் உதயமாகிறது. இல்லையென்றால் பெற்றோர் காசில் கல்யாணம் பண்ணிக்கொண்டு சொந்தக் காசில் தனிக் குடித்தனம் செய்ய ஆரம்பித்ததும் பாழும் காதல் அஸ்தமித்து விடுமா?"

---



போலீஸ் இன்ஸ்பெக்டர் (ஒரு வீட்டில் களவு போன சாமான்களின் ஜாபிதாவை எழுதிக் கொண்டு):—உம், இன்னும் எதையாவது காணோம் என்றால் இப்போதே சொல்லி விடுங்கள். அப்புறம் ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டு வந்து தொந்தரவு பண்ணுறீர்கள்!

வீட்டுக்காரச் சிறுவன்:—இப்போதுதான் ஞாபகம் வருகிறது, ஸார்! என்னுடைய கணக்கு நோட்டைப் பத்து நாட்களாகக் காணவே காணோம்!

"எங்கள் காதல் கல்யாணமாவதற்கு முன்பே அஸ்தமித்து விட்டதே, அதற்கு என்ன சொல்லுகிறீர்கள் !"

"என்னைக் கேட்டால் காதல் என்று ஒன்று உலகத்தில் இல்லவே யில்லை என்று சொல்வேன். உண்மை என்னவென்றால் 'காமம்' என்று சொல்வதற்குச் சிலர் அந்தானில் கூச்சப்பட்டிருக்கிறார்கள். அதற்காக அவர்கள் 'காம'த்துக்குக் 'காதல்' என்று பெயர் வைத்திருக்கிறார்கள்......"

"சில சமயம் எனக்குக்கூட அப்படித்தான் தோன்றுகிறது."

"சில சமயம் என்ன ?—எந்தச் சமயத்திலும் எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது. வாழ்க்கையில் காதலை எதிர்பார்த்து ஏமாந்த சில சோணகிரிகளின் கட்டுக் கதை காதல்; அது ஓர் இனிய கனவு; கற்பனைச் செல்வம்; கதைகளுக்கும் காவியங்களுக்கும் ஜீவநாடி போன்றது; ஆனால் படித்து அநுபவிப்பதோடு அதை நிறுத்திக் கொள்ள வேண்டும். வாழ்க்கைக்கு......"

"வாழ்க்கைக்கும் காதல் ஜீவநாடி போன்றதுதான் !"

"இல்லையென்று நான் சொல்லவில்லை. ஆனால் வாழ்க்கையில் அதைக் கடைப்பிடிப்பதுதான் முடியாத காரியமா யிருக்கிறது."

"ஏன் முடியாது ?—ஆண்களால் வேண்டுமானால் முடியாமலிருக்கலாம்; பெண்களால் நிச்சயம் முடியும்" என்றான் அவன்.

கனகலிங்கம் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறீர்கள் ?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"ஒன்றுமில்லை; நீங்கள் கதையைச் சொல்லுங்கள்" என்றான் கனகலிங்கம்.

"சரி, சொல்லுகிறேன் கேளுங்கள்—கலாசாலையில் எங்கள் காதல் விழிகளால் வளர்ந்தது; கலாசாலைக்கு வெளியே புன்னகையால் வளர்ந்தது; சினிமா 'மாட்டினி ஷோ'க்களிலும் கடற்கரை யோரங்களிலும் எங்கள் காதல் கரங்களாலும் இதழ்களாலும் வளர்ந்தது. கடைசியில்......"

"கோடை விடுமுறை வந்ததாக்கும்? இருவரும் பிரிய மனமில்லாமல் பிரிந்திருக்களாக்கும் ?"

"ஆமாம். ஆனால் கோடை விடுமுறை மட்டும் வரவில்லை; எங்கள் கலாசாலைப் படிப்பும் ஒருவாறு முடிந்துவிட்டது."

"அப்புறம் உங்கள் காதலை உங்களுடைய பெற்றோர் விரும்பியிருக்க மாட்டார்கள்..."

"ரொம்ப சரியாய்ச் சொல்லுகிறீர்களே?"

"தெரிந்த கதைதானே ?"

"அது சரி; எங்கள் காதலை எங்களுடைய பெற்றோர் விரும்பாமற் போகவே, நாங்கள் இருவரும் வீட்டில் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பி இங்கே வந்து சேர்ந்தோம்......"

"காந்தர்வ மணம் செய்து கொள்ளலாம் என்று எண்ணி வந்தீர்களாக்கும் ?"




"இந்தக் காலத்தில் எங்கே காந்தர்வ மணம் செய்து கொள்வது? கொஞ்ச நாட்கள் இப்படி இருந்துவிட்டு, அப்புறம் சென்னைக்குச் சென்று 'ரிஜிஸ்தர் கல்யாணம்' செய்து கொள்ளலாம் என்று இருந்தோம். அதற்குள்......"

"என்ன நடந்தது ?"

"அதைத்தான் இதோ சொல்லப் போகிறேனே!-அன்றிரவு நாங்கள் வீட்டை விட்டுக் கிளம்பும்போது நல்ல இருட்டு. வழியில் மட்டுமல்ல; ரயிலிலும் நாங்கள் ஒருவரை யொருவர் அவ்வளவாகக் கவனித்துக் கொள்ளவில்லை. எங்கள் கவனமெல்லாம் 'நம்மை யாரும் இந்தக்



கோலத்தில் பார்த்து விடாமல் இருக்க வேண்டுமே’ என்பதில்தான் இருந்தது...”

“அந்தச் சமயத்தில் ‘ஜனங்கள் ஒருவரைப் பற்றி யொருவர் தெரிந்து கொள்ளாமலிருப்பதே ரொம்ப நல்லது’ என்று நீங்கள் எண்ணியிருப்பீர்களே?”

“ஆமாம்; அதைத்தான் நாங்கள் அப்பொழுது எண்ணிச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தோம். ஊரில் ஒரு சிலர் தெரிந்தவர்களாயிருக்கும்போதே நமக்கு இவ்வளவு சங்கடமாயிருக்கிறது; உலகத்தில் எல்லோருமே நமக்குத் தெரிந்தவர்களாயிருந்துவிட்டால் வேறு வினையே வேண்டாம்—நல்ல வேளையாக, நான் பயந்ததற்கு ஏற்றாற்போல் அன்று ஒரு சம்பவமும் நிகழவில்லை. அதற்கேற்றாற் போல வழியில் எங்களைக் கண்டு யாரும் சந்தேகப்படாமலிருப்பதற்காக அவன் ஏற்கெனவே ஒரு தாலியையும் கொண்டு வந்து என் கழுத்தில் கட்டியிருந்தான்!—அப்புறம் கேட்பானேன்? அதுவே நாங்கள் புதுமணத் தம்பதிகளைப் போல நடந்து கொள்வதற்கு ‘லைஸன்’ஸாகவும் ‘பெர்மிட்’டாகவும் இருந்தது. அதன் காரணமாக எந்தவிதமான உபத்திரவமும் இன்றி நாங்கள் இருவரும் இங்கே வந்து சேர்ந்தோம். அன்று மாலை இருவரும் தேன் குடித்த நரிகள்போல இங்கே உட்கார்ந்திருந்தபோது அவன் என்னை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தான். ‘என்ன பார்க்கிறீர்கள்?’ என்று கேட்டேன். அவன் விஷமத்தனத்துடன் சிரித்துக் கொண்டே, ‘பிறந்த மேனியாக வந்திருக்கிறாயே, அதைத்தான் பார்க்கிறேன்!’ என்றான். எனக்கு வெட்கமாக இருந்தது. ‘விளையாட்டுக்காக அப்படிச் சொல்கிறானாக்கும்’ என்று எண்ணி, ‘ஏன், என்னுடைய புடவை, ரவிக்கையெல்லாம் உங்கள் கண்ணில் படவில்லையா?’ என்று கேட்டேன்.

'அதற்குச் சொல்லவில்லை; நகை நட்டுகள் ஒன்றுமில்லாமல் வந்திருக்கிறாயே, அதற்காகச் சொன்னேன்!' என்றான். எனக்கு இது என்னவோபோல் இருந்தது. 'நம்முடைய காதலை விரும்பாதவர்களுடைய நகை நட்டுகள் நமக்கு என்னத்துக்கு என்று எல்லாவற்றையும் கழற்றி வீட்டில் வைத்துவிட்டு வந்துவிட்டேன்' என்றேன். 'சரி, தொலையட்டும்' என்றான் அவன். நானும் 'அப்பாடி!' என்று பெருமூச்சு விட்டேன். அன்று மாலை கொஞ்சம் இருட்டியதும் இருவரும் முடுக்கிவிட்ட நாட்டினத்தைப் போல இந்த ஊரைச் சுற்றிச் சுற்றி வந்தோம். அன்று நாங்கள் பார்த்தவற்றை விடப் பேசியதுதான் அதிகம். அன்றைய இரவோ, 'என்றும் நீங்காத இரவாக இந்த இரவு இருக்கக் கூடாதா?' என்று என்னை நினைக்கச் செய்தது. மறுநாள் காலை, 'பகலாயிருப்பதால் நான் மட்டும் வெளியே போய் வருகிறேன்' என்றான் அவன். எனக்கும் அவன் சொன்னது சரியென்று பட்டது. 'போய் வாருங்கள்; சீக்கிரமாகத் திரும்பி விடுங்கள்' என்று சொல்லி யனுப்பினேன். அன்று போனவன்தான்; அப்புறம் இந்தப் பக்கம் திரும்பவேயில்லை. எனக்கு ஒரே கவலையாகப் போய்விட்டது. அன்று பகல் மட்டுமல்ல; இரவு பூராவும் கண் விழித்து அவனுக்காகக் காத்திருந்தேன்—ஊஹூம், வரவில்லை; வரவேயில்லை. இந்த விஷயத்தை நான் எப்படி வெளியே சொல்வது? யாரிடம் சொல்வது?— வேறு வழியின்றி என்னை நானே நொந்துகொண்டு, அடுத்த நாள் காலை மாடி வராந்தாவுக்கும் இந்த அறைக்குமாக நடை போட்டுக் கொண்டிருந்தேன். மணி ஏழு, எட்டு என்று பத்தும் ஆயிற்று. எதிர்பாராத விதமாகத் தபால்காரன் என் பெயருக்கு வந்திருந்த ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தான். பரபரப்புடன் அதை வாங்கிப் பிரித்துப் படித்தேன்: 'அகல்யா! என்னை மன்னித்துவிடு. நான் ஒன்று நினைக்க, நீ ஒன்று நினைத்து விட்டாய்! — இனிமேல் என்ன செய்வது? — காதலினால் ஆத்மாவைத்தான் திருப்திப் படுத்த முடியும்; வயிற்றைத் திருப்திப் படுத்த முடியாது. எனவே ஒன்றும் புரியாமல் நான் வந்த வழியே திரும்பிச் செல்கிறேன். கடவுள் உன்னைக் காப்பாற்றட்டும்—இந்திரன்' என்று அந்தக் கடிதத்தில் அவன் எழுதியிருந்தான். எனக்கு எப்படி இருந்திருக்கும்?—பைத்தியம் பிடித்தவன் போல அந்தக் கடிதத்தை ஒருமுறை உற்றுப் பார்த்தேன். பிறகு, அதைச் சுக்கு நூறாகக் கிழித்து எறிந்துவிட்டு, அந்த நிமிஷத்திலிருந்து அழுகிறேன், அழுகிறேன், அழுது கொண்டே இருக்கிறேன்........."

"பேஷ்! 'இந்திரன்' என்ற பெயருக்குத் தகுந்தாற்போலவே அவன் வேலையெல்லாம் இருந்திருக்கிறதே?"

"உங்களுக்கு எல்லாம் வேடிக்கையாயிருக்கிறது!"

"எல்லாவற்றையும் வேடிக்கையாகக் கருதுவதால்தான் என்னால் உயிர் வாழ முடிகிறது, அம்மா!"

"இல்லை, எந்த முட்டாளாவது நகை நட்டுகளுக்காக யாரையாவது காதலிப்பதுண்டா?"

"அவன் முட்டாள் இல்லை அம்மா, முட்டாள் இல்லை. அவன்தான் தற்கால அறிவாளி; இன்றைய உலகம் தெரிந்தவன்!"

"இன்றைய உலகம் தெரிந்தவனுடைய லட்சணம் நம்பி வந்தவளை நடுத் தெருவில் விடுவதுதானா?"

"இல்லை—நம்பி வந்தவளைக் கொண்டு தான் வாழ முடியுமா என்று முதலில் பார்ப்பது; 'முடியாது' என்று தோன்றினால் அவளைக் கைவிடுவது—இதுதான் இன்றைய உலகம் தெரிந்தவனின் லட்சணம். அதாவது, தான் பிறருக்கு உபயோகமாயிருக்கக் கூடாது; பிறர் தனக்கு உபயோகமாயிருக்க வேண்டும் என்று எவன் நினைக்கிறானோ, அவன்தான் இந்தக் காலத்தில் மேதை என்று மதிக்கப்படுகிறான்; அவனால் தான் இந்த உலகத்தில் விரும்பியபடியெல்லாம் வாழவும் முடிகிறது!"

"நீங்கள் சொல்வது ஒருவிதத்தில் உண்மைதான்!—அவன் கெட்ட கேட்டுக்குக் கடவுளை வேறு துணைக்கு அழைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தீர்களா?"

"பார்க்கப்போனால் கடவுளைத் துணைக்கு அழைப்பவர்கள், கடவுளுக்குப் பயப்படுகிறவர்களெல்லாம் யார் என்று நினைக்கிறீர்கள்? அவர்களில் பெரும்பாலோர் உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைப்பவர்கள், தோல் இருக்கச் சுளை விழுங்கிகள், ஜேப்படித் திருடர்கள், தூங்கும்போது கழுத்தை அறுப்பவர்கள், படுமோசக்காரர்கள், பாவிகள், நயவஞ்சகர்கள் — ஆகியவர்கள்தான்! எப்பொழுதுமே மடியில் கனமில்லாதவனுக்கு வழியில் பயம் இருப்பதில்லை யல்லவா?"

"என்னால் நீங்களும் கோபங் கொண்டு விட்டீர்கள் என்று தெரிகிறது — என்னை மன்னியுங்கள். நான் இன்னும் மூன்று நாட்கள்தான் இங்கே இருக்க முடியும். அதுவரைதான் இந்த அறைக்கு வாடகை கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்குப் பிறகு நான்

எங்கே போவது? எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் செய்த தவறைத்தான் அவனும் செய்தான். ஆனால் அவன் ஆண் மகன்; அவனால் வீட்டுக்குத் திரும்ப முடிந்தது. என்னால் திரும்ப முடியுமா?—எனவேதான் உங்கள் உதவியை நான் நாடுகிறேன். இனி நீங்கள்தான் எனக்குத் துணை!" என்று மீண்டும் சொல்லித் தன் கதையை ஒருவாறு முடித்தாள் அகல்யா.

கனகலிங்கம், "நான் எத்தனை நாட்கள் உங்களுக்குத் துணையாயிருக்க முடியும்? நானும் இங்கே மூன்று நாட்கள்தான் இருக்கப் போகிறேன். அதற்குப் பிறகு சென்னைக்குப் போகப் போகிறேன்" என்றான்.

"நானும் உங்களுடன் சென்னைக்கே வந்து விடுகிறேனே!"

"என்னுடன் வந்து என்ன செய்வது?"

இந்தச் சமயத்தில் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள்போல, "உங்களுக்கு விவாகமாகி விட்டதா?" என்று கேட்டாள் அகல்யா.

"இல்லை" என்று கையை விரித்தான் கனகலிங்கம்.

"அப்படியானால் நான் உங்களை......"

"......கல்யாணம் செய்து கொள்ளுகிறேன் என்கிறீர்களா?"

"............"

"ஏற்கெனவே செய்த தவறு போதாதென்று மீண்டும் ஒரு முறை தவறு செய்யப் பார்க்கிறீர்கள்......!"

"எது தவறு?—என்ன இருந்தாலும் நான் ஒரு பெண்; சமூகத்தில் தனித்து வாழ முடியாதவள். அதிலும் தற்சமயம் நான் 'வழுக்கி விழுந்தவ'ளாகிவிட்டேன். இந்த நிலையில் என்னைப் போன்றவர்களை உங்களைப் போன்ற இதய முள்ளவர்கள்தான் ஆதரிக்க வேண்டும்."

"இந்தக் காலத்தில் இதயம் மட்டும் இருந்து பிரயோஜனம் இல்லையே, அம்மா......!" என்று ஆரம்பிக்கும்போதே அகல்யா குறுக்கிட்டு, "என்னைப் பார்த்தால் உங்களுக்கு 'அம்மா' மாதிரியா தோன்றுகிறது?" என்று கேட்டுவிட்டு, 'நாற்பது வால்ட்' சிரிப்பொன்றைச் சிரித்தாள். அதாவது, தன்னை 'அம்மா' என்று அழைப்பதைத் தான் விரும்பவில்லை யென்பதை அவள் அவ்வாறு தெரிவித்துக் கொண்டாள்!

கனகலிங்கமும் விஷயத்தை ஒருவாறு புரிந்துகொண்டான். அவன் பதிலுக்கு ஒரு 'எண்பது வால்ட்' சிரிப்புச் சிரித்துவிட்டு, "அழுகையையும் சிரிப்பையும் நினைத்த மாத்திரத்தில் வரவழைத்துக் கொள்வதில் பெண்கள் கைதேர்ந்தவர்கள் என்று சொல்கிறார்களே, அது உண்மைதான் போலிருக்கிறது!" என்றான்.

"ஆமாம், உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவதில் புருஷர்கள் கெட்டிக்காரர்கள் என்று சொல்கிறார்களே, அது கூட உண்மைதான்!" என்றாள் அகல்யா.

"தேவலையே! சிறிது நேரத்துக்கு முன்னால் என்னைப் 'பொல்லாதவள்' என்று சொன்னீர்கள்; இப்பொழுது நீங்களும் 'பொல்லாதவ'ளாக......"

"அப்படிச் சொல்லுங்கள்—என்ன இருந்தாலும் இந்த 'ள்' போட்டுப் பேசுவதிலுள்ள சுகம் 'கள்' போட்டுப் பேசுவதில் இருப்பதே யில்லை!"

"'நீ' சொல்வதைப் பார்த்தால் இப்பொழுது நம்மிடையே காதல் புனர்ஜன்மம் எடுத்து விட்டதுபோல் தோன்றுகிறது!"

"நீங்கள் 'நீ' ஆன பிறகு காதல் புனர்ஜன்மம் எடுக்காமல் என்ன செய்யும்?"

"நாசமாய்ப் போச்சு; காதலுக்குக் காசு அல்லவா வேண்டியிருக்கிறது?"

"எனக்குக் காசு பெரிதல்ல; காதல்தான் பெரிது!"

கனகலிங்கம் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டாள் அகல்யா.

"ஒன்றுமில்லை; தூக்கம் வருகிறது!" என்று மீண்டும் அதே பதிலைச் சொல்லிவிட்டு, ஒரு நீண்ட கொட்டாவி விட்டான் கனகலிங்கம்.

"அப்படியானால் போய்த் தூங்குங்கள்; மேலே பேசுவதற்குத்தான் இன்னும் மூன்று நாட்கள் இருக்கிறதே!" என்றாள் அகல்யா.

"அது சரி; ஆனால் காதலுக்குத் தூக்கம் பிடிக்காதே!" என்றான் கனகலிங்கம்.

"ஆமாம், அது ஒரு 'பசி!' அந்தப் பசி தீர்ந்தால்தான் தூக்கம் பிடிக்குமாம்!" என்று சொல்லிக் கொண்டே கனகலிங்கத்தை நெருங்கி, அவனுடைய தோள்களைப் பற்றத் துணிந்தாள் அகல்யா.

"இதிலிருந்து சமூகத்தில் புரையோடிப் போயிருக்கும் புண்ணை 'ஆபரேஷன்' செய்து ஆற்றுவதில் முனைந்திருக்கும் சில சீர்திருத்த வாதிகளின் நாவல்களை நீ படித்திருக்கிறாய் என்று தெரிகிறது!—வேண்டாம்; 'பசி' தீர்ந்து விட்டால் நானும் 'இந்திர'னைப்போல் ஓட்டம் பிடித்தாலும் பிடித்து விடுவேன்!" என்று சொல்லிக் கொண்டே தன் அறைக்குச் சென்றான் கனகலிங்கம்.

(தொடரும்)

# ஜீவஜோதி

**எம். எஸ். எம்.**

"ஞானகுல்ய விலாஸ்" என்ற பங்களா பிரசித்தி யடைவதற்கு அதன் சொந்தக்காரராகிய ஸ்ரீமான் ஜீவநாடி அவர்கள் காரணமென்றால், ஜீவநாடி பிரசித்தி யடைவதற்கு அவர் வியாபாரம் செய்துவந்த பெருங்காயம் தான் காரணம். "ஜீவநாடி மார்க்" பெருங்காயத்தின் மணம் ஒவ்வொரு வீட்டிலும் நிகழ்ந்து கொண்டிருந்ததற்குக் காரணம் அந்தப் பெருங்காயத்தின் அபூர்வ வாசனை மட்டுமல்ல; அதை உபயோகப்படுத்தும் நாட்டிய நடன நக்ஷத்திரங்களும்தான் காரணம்.

ஜீவநாடி தன்னுடைய பெருங்காயத்தை விளம்பரப் படுத்திய முறையே அலாதி. ஒவ்வொரு மாதமும் ஒரு குட்டி நடன நக்ஷத்திரத்திற்குத் தன் சொந்தச் செலவில் அரங்கேற்றம் ஏற்பாடு செய்து, அதற்காகச் செய்யும் ஒவ்வொரு விளம்பரத்தின் கடைசியிலும், "பேபி பத்மலோசனி 'ஜீவநாடி மார்க்' பெருங்காயத்தை அவள் வீட்டுச் சமையலில் உபயோகப் படுத்தாவிட்டால் ஓரேயடியாக அழுவாள்!" அல்லது, "குமாரி கோவிந்தராமி 'ஜீவநாடி மார்க்' பெருங்காயமா என்று பார்த்து வாங்குவதால்தான் அவள் நடனக் கலையை மூன்றே மாதத்தில் கற்றுக்கொள்ள முடிந்தது" என்று பொது ஜனங்களுக்கு சுயமாகத் தெரிவிப்பார். இதனால் ஒவ்வொரு 'பேபி'யும் ஜீவநாடி மார்க் பெருங்காயத்தின் மணம் சமையலில் வீசாவிட்டால் அழுது ரோதனம் செய்ய ஆரம்பித்தது! ஒவ்வொரு 'குமாரி'யும் ஜீவநாடி மார்க் பெருங்காயத்தை வீட்டில் வாங்காவிட்டால் தலையைக்கூட வாரிக்கொள்ளாமல் முகத்தைத் 'தூக்கி' வைத்துக் கொள்ள ஆரம்பித்தாள்! இதன் காரணமாக அநேக பெற்றோர்கள் வீட்டில் தொந்தரவு பொறுக்க மாட்டாமல் அந்தப் பெருங்காயத்தையே வாங்கித் தொலைத்தார்கள்!

ஜீவநாடி மூலமாக மேடைக்கு வந்த சுமார் ஐம்பது நடன நக்ஷத்திரங்களில் பல முதல் ஆட்டத்துடன் மறைந்தன. ஒரு சில மட்டும் சுடர்விட்டுப் பிரகாசித்தன.

ஆனால் ஜீவநாடியின் கவனத்தை முற்றிலும் கவர்ந்த நாட்டிய திலகம் குமாரி வனஜோதிதான்! அவரது வாழ்க்கையைப் புதிய திசையில் செலுத்திய பெருமையும் குமாரி வனஜோதியையே சேர்ந்தது.

ஜீவநாடி பெருங்காய வியாபாரத்தில் இறங்கி ஐம்பது மாதங்கள் பூர்த்தியாயின. அந்தப் பொன் விழாவைக் கொண்டாடத்தான் குமாரி வனஜோதியின் நாட்டிய அரங்கேற்றம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

சபையில் கூட்டத்திற்குக் குறைவில்லை. இதற்காக ஜீவநாடி தனியாக டிக்கெட்டும் விற்பனை செய்யவில்லை. பொன் விழாவையொட்டி ஒரு சேர் ஜீவநாடி மார்க் பெருங்காயம் வாங்குபவர்களுக்கு இந்த நடனக் கச்சேரிக்கு ஒரு சாதாரண டிக்கட்டும், ஒரே சமயத்தில் ஐந்து சேர் வாங்குபவர்களுக்குக் குடும்பத்தோடு ஒரு சோபா டிக்கெட்டும் கொடுப்பதாக அவர் எல்லாப் பத்திரிகைகளிலும் விளம்பரப்படுத்தி யிருந்தார்.

கச்சேரிக்கு விஜயம் செய்த பேபிகளெல்லாம் காலில் சிலம்பையும் சதங்கையையும் கட்டிக்கொண்டு நாட்டியத்தை ரசிக்க வந்தார்கள்; குமாரிகளெல்லாம் கண்களில் மையைக் காதுவரை தடவிக்கொண்டு நாட்டியத்தை வேல் விழியால் பார்க்க வந்தார்கள்.

சபையின் நடுவே ஸ்ரீமான் ஜீவநாடி உட்கார்ந்திருந்தார். இரு பக்கங்களிலும் அவருடைய ஆத்ம நண்பர்களான ஸ்ரீமான்கள் ஜபதபம், தாபஜுரம், ஜடிவேகம் ஆகியவர்கள் அமர்ந்திருந்தார்கள்.



திரை விலகியது. குமாரி வனஜோதியின் வனப்பைக் கண்டு ஜீவநாடி ஒரு கணம் திகைத்தார். பிறகு விழித்தார். பிறகு சுயநிலைவிற்கு வந்தார். அப்போதுதான் அவருக்குத் தனக்கு வயது முப்பத்தி நாலானாலும் தான் ஒரு பிரம்மசாரியென்பது நினைவிற்கு வந்தது.

'ஏன் குமாரி வனஜோதியையே மணம் செய்து கொள்ளக் கூடாது!' என்று ஒரு அசட்டு எண்ணம் ஒரு விநாடி அவர் மனதில் தோன்றி மறைந்தது. தனக்குத் தானே ஒரு பைத்தியக்காரச் சிரிப்புச் சிரித்துக் கொண்டார். பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஜீவநாடியின் பிராண சிநேகிதரான ஜபதபம் இலேசாக இதைக் கவனித்து விட்டார்.



"என்ன ஜீவநாடி! என்ன ஜிரிப்பு!" என்றார் ஜபதபம்.

இவருக்கு நாக்கு சில சமயம் சொன்ன படி கேட்பதில்லை.

"ஒன்றுமில்லை; சும்மாத்தான்!" என்றார் ஜீவநாடி அர்த்தமில்லாமல்.

"சும்மா விஷயத்தை சொல்லு!" என்றார் ஜபதபம் மறுபடியும்.

ஜீவநாடிக்குத் தன் உள்ளத்தை ஜபதபத்திடம் முதலில் வெளியிட வெட்கமாயிருந்தது. ஆனால் ஜபதபம் கட்டாயப் படுத்தவே தன் எண்ணத்தை வெளியிட்டார். அதோடு பதினெட்டு வயதுகூட நிரம்பாத அந்தப் பெண்ணுக்கும் முப்பத்துநான்கு வயதான தனக்கும் வயதுப் பொருத்தம் இருக்குமா என்றும் பயப்பட்டார்.

ஆனால் குமாரி வனஜோதிக்கு ஜீவநாடியை மணப்பதில் ஆக்ஷேபணையில்லையென்று தெரிந்தது. இன்னும் பார்க்கப்போனால் நாட்டிய கலா போஷகரும் பெருங்காய மன்னருமான ஜீவநாடியை மணம் செய்துகொள்ளத் தான் பெரும் பாக்கியம் செய்திருக்க வேண்டுமென்று சொன்னதாகத் தெரிந்தது. மேலும், மனது வித்தியாசமில்லாமலிருந்தால் வயது வித்தியாசமும் தானே குறைந்து விடுமென்று புரிய வைத்ததாகவும் தெரிந்தது.

வேதகோஷங்கள் ஒலிக்க, மங்கள வாத்தியங்கள் முழங்க ஒரு சுபதினத்தில் வனஜோதி—ஜீவநாடியின் விவாகம் 'ஜாம், ஜாம்' என்று நடந்தேறியது!

★

**வ**ருடங்கள் மூன்று சென்றன. முன்பு கோலாகலமே குடி கொண்டிருந்த "ஞான சூன்ய விலாஸ்" இப்போது சோபையிழந்து காணப்பட்டது. அங்கிருந்த வேலைக்காரர்களெல்லாம் எதையோ பறி கொடுத்தவர்கள் போல முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டிருந்தார்கள். வேலைக்காரிகள் முந்தானையால் கண்களை அடிக்கடி துடைத்து விட்டுக் கொண்டிருந்தார்கள். வனஜோதி அம்மாள் தன் அறையை விட்டு வெளியே வருவதேயில்லை. காரணம் இதுதான்; தன்னையும் நாட்டிய ரசிகர்களையும் மகிழ்விக்கத் தனக்கு ஒரு புத்திரி இன்னும் ஜனிக்காததால் ஸ்ரீமான் ஜீவநாடி தன்னுடைய நண்பர்களான ஸ்ரீமான்கள் ஜபதபம், தாபஜூரம், ஜடிவேகம் ஆகியவர்களைக் கலந்து கூடிய சீக்கிரத்தில் இரண்டாவது கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்து விட்டார்.

ஜீவநாடி மறு விவாகம் செய்து கொள்ள நிச்சயித்த மாதமே ஒரு சுப செய்தியை அவர் காதில் வனஜோதி ரகசியமாக ஓதினாள். ஜீவநாடிக்கு ஒரு வினாடி, தன் நாடியே ...'நின்று' ஜீவனே போய்விடும் போலாய் விட்டது. அடுத்த வினாடி சுய உணர்வுக்கு வந்ததும் பக்கத்திலிருந்த வேலையாளிடம் யாரையோ கூப்பிட்டனுப்பினார்.

அடுத்த நிமிஷம் நாட்டிய கேசரி ஜாலகோஷம் பறந்து வந்து சேர்ந்தார். அவரிடம் ஜீவநாடி விஷயத்தைத் தெரிவித்தார். தன் சந்தோஷத்தைத் தெரிவித்து விட்டுப் பிறக்கப்போகும் ஜீவநாடியின் பெண் குழந்தைக்கு நாட்டியம் கற்றுக் கொடுக்க மறு நாள் முதல் ஏற்பாடு செய்வதாய்ச் சொல்லி விட்டுப் போனார், ஸ்ரீமான் ஜாலகோஷம்.

சுபத்திரையின் வயிற்றில் சிசுவாயிருக்கும் போதே நாரதரிடம் அபிமன்யு கதை கேட்டாற்போல, பேபி பரிமள சுகந்தாவும் பூமியில் ஜனிக்கு முன்பே நாட்டியக் கலையின் ஆரம்ப விதிகளை ஜாலகோஷத்திடம் கேட்கத் தொடங்கினாள். அதன் காரணமாக 'ஞான சூன்ய விலா'ஸில் 'டக், டக்' என்ற தட்டுக் குழியின் ஓசை இடைவிடாமல் கேட்கத் தொடங்கியது. ஜாலகோஷம் 'ஞான சூன்ய விலா'ஸிற்குத் தினந்தோறும் விஜயம் செய்து வனஜோதியின் எதிரில் ஆரம்பப் பாடத்தை ஒப்புவித்தபோது அவளுக்கு நாளுக்கு நாள் தன் கணவனிடம் அன்பு அதிகரித்துக் கொண்டே போயிற்று.

நாளாக ஆக நாட்டிய கேசரி ஜாலகோஷத்திற்கும் உற்சாகம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. நாட்டியம் பயிலும் மாணவியை நேரில் வைத்துக் கொண்டு நடனம் சொல்லித் தருவதில் ஜாலகோஷம் எவ்வளவோ சிரமப் பட்டிருக்கிறார். ஆனால் இப்பொழுது கர்ப்பத்தில் இருக்கும் சிசுவுக்கு நாட்டியம் சொல்லித் தருவது அவருக்கு மிகவும் சுலபமாயிருந்தது. தான் இப்போது செய்துவரும் நவீன முறையால் பேபி பரிமள சுகந்தாவுக்குப் பத்தே மாதத்தில் நாட்டிய அரங்கேற்ற வைபவம் ஏற்பாடு செய்து விடலாமென்று குதூகலப் பட்டார். ஜீவநாடியோ ஒரு படி அதிகமாய்ப் போய்ப் பத்திரிகைகளில் விளம்பரமே கொடுத்து விட்டார்!

பரிமள சுகந்தா என்ற பெயரைக் கேட்டதும் பொது ஜனங்கள் ஏதோ புதிய மார்க் பெருங்காயம் அல்லது பாக்குப்பொடி என்று நினைத்துக் கொள்ளக் கூடாதென்று எண்ணி, 'ஜீவநாடி - வனஜோதியின் புத்திரி, நாட்டிய கேசரி ஜாலகோஷத்தின் பிரதம சிஷ்யை' என்ற விஷயத்தையும் விளம்பரத்தில் சேர்த்தார். அடுத்த










சில மாதங்களில் நடக்கப்போகும் இந்த நாட்டிய அரங்கேற்ற விழாவிற்கு இப்போதே தயாராயிருக்கும்படி மகா ஜனங்களை எச்சரித்தார்!

வனஜோதியின் வாழ்க்கையின் திருநாள் நெருங்கிக் கொண்டே வந்தது. இன்னும் இரண்டொரு நாட்களில் பேபி பரிமள சுகந்தா பூமியில் அவதரித்து ரசிக மகாஜனங்களுக்கு அபயமளிப்பாள் போலிருந்தது. கடைசியில் அந்த வினாடி வந்தேவிட்டது. அறையின் உள்ளே யிருந்து காற்றில் மிதந்துவந்த "குவா, குவா!" என்ற இனிய சத்தம் ஜீவ நாடியின் காதில் ஊர்வசியின் கானம்போலவும் ரம்பையின் கீதம்போலவும் திலோத்தமையின் நாதம்போலவும் விழுந்தது. ஞானகோசமும் தன்னுடைய பிரதம சிஷ்யையைக் கண்ணால் தரிசிக்க வெகு ஆவலுடனும் ஆதுரத்துடனும் தவித்துக் கொண்டிருந்தார்.

அறையின் கதவு பாதி திறக்கப்பட்டது. ஒரு நர்ஸ் உள்ளேயிருந்து தன் தலையை வெளியே நீட்டினாள். "தாயும் குழந்தையும் சௌக்கியம்" என்று அவள் சுருக்கமாய்ச் சொன்னாள்.

"பரிமள சுகந்தா சௌக்கியமா!" என்ற அர்த்தமற்ற கேள்வியைப் போட்டார் ஜபதபம்.

"தாயார்தானே! சௌக்கியமாயிருக்கிறாங்க; நீங்கள் ஒன்றும் பயப்பட வேண்டாம்!" என்றாள் நர்ஸ்.

"தாயாரைச் சொல்லவில்லை; பெண்ணைத்தான் சொல்லுகிறார்!" என்று திருத்தினார் தாபஜுரம்.

"இவருக்குப் பெண்ணாயிருந்தாலும் அந்த அம்மாள் குழந்தைக்குத் தாயார்தானே!" என்று தர்க்கம் பேசினாள் நர்ஸ்.

விஷயத்தை விளக்க நினைத்த ஞானவேகம், "அட கஷ்டமே! தாயார் என்று சொல்லப்படும் பெண்ணைப் பற்றி இவர் கேட்கவில்லை. இப்போது பிறந்திருக்கிற குழந்தை என்று சொல்லப்படும் பெண்ணைப் பற்றித்தான் இவர்...."

"பெண் குழந்தையா! அட பாவமே! பிறந்திருப்பது ஆண் குழந்தையல்லவா....!" என்று நர்ஸ் தான் சொல்ல வந்ததை முடிக்கு முன்பே ஜீவநாடி மயங்கிக் கீழே விழுந்து விட்டார்.

அவ்வளவுதான்; ஞானகோஷத்தின் கையிலிருந்த ஜாலரா 'டப்' என்று நழுவிக் கீழே விழுந்தது. ஜபதபம் தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டு நடைபாதையில் தேம்பிக் கொண்டே கீழே உட்கார்ந்தார். தாபஜுரம் ஒன்றும் தோன்றாமல் ஸ்தம்பித்துப் போய்த் தூணில் சாய்ந்து விட்டார். ஞானவேகம் அதி வேகமாய் வெளியே ஓடினார்.

ஆனால், அறையினுள்ளே ஸ்ரீமதி வனஜோதி இதையொன்றும் கவனித்ததாகத் தெரியவில்லை. அவள் தன்னையே மறந்து தன்னுடைய அருமை மகனுடன் கொஞ்சிக் கொண்டிருந்தாள். "என்னுடைய இருண்ட வாழ்க்கையில் விளக்கை யேற்றிய ஜீவஜோதியே!" என்று பச்சிளம் பாலகனை முகத்தோடு முகம் வைத்துக் கொண்டு அவள் மெய் மறந்திருந்தாள்!

# பூச்சாண்டி

கி. ரா. கோபாலன்



இரவு மணி எட்டு இருக்கும். ஒரு நொண்டிப் பிச்சைக்காரன், "அம்மா! தாயே! பசியாய் இருக்குது; கொஞ்சம் அன்னம் போடுங்க, அம்மா!" என்று ஒவ்வொரு வீடாகக் கேட்டுக் கொண்டே வந்தான். சில வீடுகளில் அவன் கூச்சலுக்குப் பதிலே இல்லை. சில வீடுகளில் "இல்லை, போ!" என்ற பதிலே வந்தது. அவனும் அலுப்படையாமல் ஒவ்வொரு வீடாக நின்று, நின்று கேட்டுக் கொண்டு வந்தான்.

அவன் பெயர் முருகன். பிச்சை எடுப்பதற்காகவே பிறந்தவனல்ல அவன். கடவுளின் சோதனையாலோ, உலகத்தின் சோதனையாலோ அவன் அந்த கதிக்கு வந்து விட்டான். இடையில் ஏற்பட்ட ஏதோ ஒரு விபத்தினால் அவனுடைய ஒரு காலும் ஒரு கையும் முடமாகி விட்டன. எவ்வகைத் தொழிலுக்கும் உபயோகமில்லாத அவன் ஊனமடைந்த காலுக்கு அனுசரணையாக ஒரு கோலை ஊன்றிப் பிச்சை எடுப்பதையே தொழிலாகக் கொண்டு அலைந்தான்.

அந்த மாடி வீட்டு வாசலில் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அந்தப் பெண்ணின் இடையில் சுமார் ஒன்றரை வயது மதிப்பிடக் கூடிய குழந்தை ஒன்று எதற்கோ பிடிவாதம் பிடித்து அழுது கொண்டிருந்தது. அந்தக் குழந்தையின் அழுகையை நிறுத்த அவள் ஏதேதோ சமாதானங்களெல்லாம் செய்து கொண்டிருந்தாள். இத்தனை வீடுகளிலும் 'இல்லை' என்ற சொல்லையே கேட்டு வந்த பிச்சைக்காரனுக்கு அந்த வீட்டு வாசலில் நிற்கும் பெண்ணைப் பார்த்ததும் சிறிது ஆறுதல் ஏற்பட்டது. அந்தப் புண்ணியவதியாவது மனம் இரங்கித் தனக்கேதேனும் கொடுப்பாள் என்ற நம்பிக்கையில், "அம்மா! தாயே! புண்ணியவதி! பசிக்குக் கொஞ்சம் அன்னமிருந்தால் போடு, தாயே!" என்றான்.

இந்தக் குரலைக் கேட்டதும் இவ்வளவு நேரம் குழந்தையைச் சமாதானப் படுத்த முடியாமல் திணறிக்கொண்டிருந்த அந்தப் பெண்ணுக்கு ஒரு யுக்தி தோன்றியது. "ஐயோ! அதோ பார், பூச்சாண்டி! அழாதே! பிடிச்சுண்டு போயிடுவான்!" என்று குழந்தைக்கு அந்தப் பிச்சைக்காரனைக் காட்டிப் பயமுறுத்தினாள். குழந்தையும் அவனைப் பார்த்துப் பயந்து அழுகையை நிறுத்தி விட்டது.

"அம்மா, மகராஜி! ஏதாவது கொஞ்சம் போடுறியா?" என்றான் பிச்சைக்காரன் கெஞ்சும் குரலில்.

அந்தப் பெண் அலக்ஷியமாக, "போ! போ! ஒன்றுமில்லை; இந்த வேளையில் யார் உனக்குச் சோறு படைப்பா?" என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள்.

முருகன் மெதுவாக நொண்டி நொண்டி நடக்கலானான். அந்தத் தெருவிலுள்ள இன்னும் இரண்டு மூன்று வீடுகளிலும் கேட்டு ஏமாற்றமடைவது வீண் என்று அவனுக்குத் தோன்றியது. தவிர அவன் மனதில் இன்னொரு போராட்டமும் எழுந்துவிட்டது.

'பூச்சாண்டி......!'

'பூச்சாண்டி என்றால் என்ன? பேயா, பிசாசா? அல்லது பெரிய ராட்சதனா......?'

'இவை எல்லாவற்றையும் விட அந்தப் பூச்சாண்டி மிகக் குரூரமான ஏதோ ஒன்றாகத்தானிருக்க வேண்டும்!'

இது அவன் மனதிற்கு மிகுந்த வேதனையைக் கொடுக்க ஆரம்பித்தது. 'இந்த உலகத்தில் அப்படிப்பட்ட ஜன்மமா நான்?

ஒரு சிறு குழந்தையின் கண்ணில் அவ்வளவு பயங்கரமாகப் படுவதற்கு நான் எத்தனை கோடி பாவங்கள் செய்திருக்க வேண்டும்?'

'பிச்சைக்காரன்' என்று சொல்லுவது கூட அவனுக்கு அவமானமாகப் படவில்லை. 'நொண்டி' என்று பரிகாசம் செய்வதுகூட அவனுக்கு மனவேதனையை உண்டாக்கவில்லை. ஆனால் 'பூச்சாண்டி' என்று தன்னை ஒரு குழந்தைக்குச் சுட்டிக் காட்டுவதைச் சகித்துக் கொள்ளும் சக்தி மாத்திரம் அப்பொழுது அவனுக்கில்லை.

இன்னும் ஓர் ஆச்சரியம்! அந்தப் பிச்சைக்கார முருகனுக்குக் கூட ஒரு மனைவி இருக்கிறாள் — அவனுக்குக் கூட ஒரு குழந்தை இருக்கிறது. அவன் மனைவி அவனைப் பூச்சாண்டியாகக் காட்டிக் குழந்தையை ஒரு நாளும் பயமுறுத்தியதில்லை. அந்தக் குழந்தையும் அவனைக் கண்டதும் 'அப்பா!' என்று தாவி வருவதுதான் வழக்கம்.

இதை நினைத்ததும் அவன் மனது சிறிது சமாதானமடைந்தது. கடைசியில், வாழ்க்கைத் தரத்தில் தன்னைப் போல் தாழ்வடைந்திருக்கும் மனிதர்களை இன்னும் தாழ்வடையச் செய்ய வேண்டாமா?— அதற்காக ஆரம்பத்திலிருந்தே குழந்தைகளுக்குத் தன்னைப் போன்றவர்களிடம் வெறுப்பு உண்டாகும்படிச் செய்ய உயர்ந்த மனிதர்கள் 'பூச்சாண்டி' என்ற வார்த்தையைக் கண்டு பிடித்திருப்பதாக அவன் தீர்மானித்தான். 'பூச்சாண்டி' என்ற வார்த்தை எந்த அகராதியில் இருக்கிறதோ? அதற்கு உண்மையான அர்த்தம் எதுவோ? ஆனால் அது மிகவும் பயங்கரமான—கேவலமான—வார்த்தையாகத்தான் அவனுக்குத் தோன்றியது.

குடலில் பசி குடைந்து கொண்டிருந்தது; 'வா' என்று கூப்பிட்டு ஒரு பிடி சோறு கொடுப்பவர்கள் இல்லை. அதைப் பற்றிக் கூட அவன் அப்பொழுது கவலைப்படவில்லை. 'பூச்சாண்டி' என்ற வார்த்தைதான் பசியின் வேதனையை விட அவன் மனதை அப்போது வாட்டித் துளைத்துக் கொண்டிருந்தது.

அவனுடைய மனைவியும் குழந்தையும் அந்த ஊர் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்திலுள்ள ஒரு பெரிய ஆலமரத்தடியில் தங்கி யிருந்தார்கள். அந்த ஆலமரத்தடியை நோக்கித்தான் அவன் போய்க் கொண்டிருந்தான்.

முருகன் அங்கே சென்றபொழுது அவனுடைய குழந்தை விக்கி விக்கி அழுது கொண்டிருந்தது. அவன் மனைவி அதற்கு ஏதேதோ சமாதானம் செய்து கொண்டிருந்தாள். முருகனும் அவளோடு சேர்ந்து குழந்தையைச் சமாதானம் செய்யத் தொடங்கினான். குழந்தையின் அழுகை நிற்கவில்லை.

இந்தச் சமயத்தில் ஆடம்பரமாக மேனாட்டு முறையில் உடை யணிந்த கனவான் ஒருவர் அந்தப் பக்கம் வந்து கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் முருகனின் மனைவிக்குப் பளிச்சென்று ஒரு யோசனை உதயமாயிற்று. "ஐயோ! அதோ பாரு! பூச்சாண்டி! பிடிச்சுக்கிட்டுப் போயிடும்!" என்றாள் குழந்தைக்கு அந்தக் கனவானைச் சுட்டிக் காட்டி. அந்த மனிதரைப் பார்த்துப் பயந்து குழந்தையும் அழுகையை நிறுத்திவிட்டது.

அவ்வளவு நேரமும் இருண்டு குமைந்த முருகனின் உள்ளத்தில் இப்பொழுது ஒரு புது ஒளி உதயமாயிற்று. பூச்சாண்டி என்பது பிச்சைக்கார வர்க்கத்தில் மாத்திரமல்ல, பணக்கார வர்க்கத்திலும் இருக்கிறது என்ற உண்மையை அவன் உணர்ந்து கொண்டான். உடனே அவன் தன் ஊன்றுகோலை எடுத்துக்கொண்டு எங்கோ கிளம்பினான்.

"இப்பொழுதுதானே வந்தீங்க? அதற்குள்ளே எங்கே கிளம்புறீங்க?" என்றாள் அவன் மனைவி.

"நாலு தெரு சுத்தினேன்; ஒரு பருக்கை கூடக் கிடைக்கல்லே. இனிமேலாச்சும் ஏதேனும் கிடைக்குமான்னு இன்னும் ரெண்டு தெரு சுத்திப் பார்த்துட்டு வாரேன்" என்றான் முருகன்.



டாக்டர்:—உன் வயிற்று வலிக்கு ஒரு 'மிக்ஸ்சர்' தருகிறேன்: இரண்டு நாளில் சரியாய்ப் போய்விடும்!

நோயாளி:—வேணாங்க! ஒரு கல்யாணத்திலே கடலை எண்ணெயிலே செய்த 'மிக்சரை'த் தின்னதினாலேதானுங்க எனக்கு இந்த வயித்து வலி வந்தது!




சூரியன் அஸ்தமிக்கும் நேரம். வானம் தங்கநிறமாகவும் செந்தழலின் செந்நிறமாகவும் இரத்த வர்ணமாகவும் காட்சி யளித்தது. மலையாள நாட்டில் நிலத்தைக் கீறிக் கொண்டு உள்ளுக்கு வரும் சமுத்திர நீரின் (உப்பங் கழியின்) விரிந்த நீர்ப் பரப்பில் விழுந்த பனை மரங்களின் அடர்த்தியான நிழல் செவ்வானத்துப் புறப்படலத்தில் தீட்டப் பெற்ற நிழல் படம் போல் காட்சி யளித்தது.

அப்பொழுது வீசிய மென்காற்று அந்நீரில் சின்னஞ்சிறு அலைகளைக் கிளறி விட்டன. ஆம், அந்த மென்காற்று இல்லையேல் அந் நீர்ப்பரப்பு சலனமின்றி, கண்ணாடி போல் இருந்திருக்கும். வெகு தூரத்திலிருந்து யாரோ ஒரு செம்படவன் குழல் ஊதிக் கொண்டிருந்தான். அந்தக் குழலோசை ஒரு கணம் மிகத் தெளிவாகக் கேட்டது. அடுத்த கணம் குயிலின் குரலெனக் கேட்டது. அதற்கடுத்த கணம் மிக மிக மெல்லிய குரலில் ரகசியம் பகர்வது போல் கேட்டது. எனினும் இக் குழலோசை அங்கு நிலவிய அமைதியைக் குலைப்பதற்குப் பதில் அதிகப்படுத்துவதாகவே இருந்தது!

என் ஓடக்காரனும் அங்கு நிலவிய அமைதியில் லயித்துப்போய்த் துடுப்புப் போடவும் மறந்து உட்கார்ந்திருந்தான். ஆம், அவ்விடத்தில் நிலம் முக்கோண வடிவமாக இருந்ததால், நீர் வளைந்து செல்ல வேண்டியிருந்தது. அந்த வளைவில் எங்கள் குறுகிய நீண்ட படகு மெல்லத் தவழ்ந்து சென்றது. கரையோரமிருந்த பனை மரங்களின் நிழல் தண்ணீரில் விழுந்த தானது விசித்திர வேலைப்பாடுகள் செய்யப் பட்ட தங்க நகையைப்போல் தோற்றமளித்தது. அதைக் கீறிக் கொண்டு படகு அவ் வளைவில் மெல்லச் சென்றது.

வெகு சீக்கிரத்திலேயே அந் நிழலை விட்டு வெளியேறினோம். அப்போதும் ஓடக்காரன் பக்கத்தில் துடுப்புகளைப் போட்டுக் கொண்டு மௌனமாகத்தான் உட்கார்ந்திருந்தான். ஓடம் சின்னஞ் சிறு அலைகளுடன் மெல்ல மிதந்து சென்றது. இந்த ஓடம் இல்லையேல் அந்த உப்பங்கழி நிச்சலனமாகத்தான் இருந்திருக்கும். சுருங்கக் கூறப்போனால் எந்தச் சத்தமும் எந்த அசைவும் அசைக்க முடியாத அளவுக்கு அங்கே சாந்தி நிலவியது; அழகு பொலிந்தது! என் படகும் படகிலிருந்த நாங்கள் இருவருமே சிலைபோல் உட்கார்ந்திருந்தோம். நாங்கள் ஊர்ந்து போவதாகவே தெரியவில்லை. ஏன், காலதேவனே, தன் வேலையை மறந்து ஸ்தம்பித்து நின்று விட்டதாகத் தோன்றியது. ஆம், அங்கு அப்படிப் பட்ட அமைதி நிலவியது!

நான் திரும்பிப் பார்த்தேன். சமுத்திரக் கரையோரமாகப் பனை மரங்கள் இருந்தன. பனை மரங்களுக்கு அப்பால், கொல்லம் நகரத்து வீடுகளின் வெள்ளைச் சுண்ணாம்பு பூசிய மாடி வீடுகள் பனை மரங்களுக்கு மேலே காட்சி யளித்தன. கொல்லம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வந்த ரயிலின் 'கூ' என்ற அறைகூவல் எங்கோ வெகு தூரத்திலிருந்து கேட்டது. ஏன், வேறொரு உலகத்திலிருந்து வருவது போல்தான் காதில் பட்டது!

நானோ தேய்ந்துபோன பழைய படகு ஒன்றில் சுப்பிரமணிய சுவாமி மயிலாசனத்தில் அமர்ந்திருப்பதுபோல் உட்கார்ந்திருந்தேன். படகோ, நாம் மூச்சு விடும் போது மார்பு விம்மி அமுங்குவது போல் மெல்ல எழும்பி அமுங்கும் அலை கொண்ட சமுத்திரத்தில் மிதந்து கொண்டிருந்தது. அந்நிலையில் மனித உயிருக்கு எவ்வித மதிப்பும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. மனித உயிர் வெகு அற்பமாகத் தோன்றியது. கன்னங் கரேல் என்றிருந்த அந்த அரை நிர்வாணப் படகோட்டி கடந்து போன நூற்றாண்டிலிருந்து வந்தவனோ அல்லது கற்காலம் இரும்புக்காலம் என்பது போன்ற மிகப் பழம் காலத்திலிருந்து வந்தவனோ! அதாவது இந்தப் படகோட்டி, மனிதன் முதல் முதலில் படகு கட்டக் கற்றுக் கொண்டு, சக்கி முக்கிக் கற்களைத் தேய்த்துத் தீப்பொறி கிளப்பக் கற்றுக்கொண்ட காலத்தைச் சேர்ந்தவனோ என்றெல்லாம் என் மனசு எண்ணியது.

இப்பொழுது, கடலின் அக்கரையிலே ஆரஞ்சு உருண்டையெனத் திகழ்ந்த சூரியன் ஒரு விநாடி கடலில் மூழ்கி விடுவோமா வேண்டாமா என்று தயங்கினான். அடுத்த விநாடி



வெகு லாகவமாகக் கடலில் மூழ்கினான். போகிற போக்கில் தன் கடைசிக் கிரணங்களால் தொடுவானத்தை ஒரு சில வினாடிகள் பிரகாச மயமாகச் செய்து விட்டு, கடலின் நுண்ணிய வளைவைத் தங்க ரேக்குக் கட்டினாற் போல் ஒரு கணம் மின்னவும் செய்து விட்டு மறைந்தான். அற்ப நேரமே நீடிக்கும் சூரியாஸ்தமனத்தின் இந்த பிரபாவம் முடிந்ததும், இருள் திரை வானத்தையும் வையத்தையும் ஒருங்கே போர்த்தி விட்டது.

இருள் கவிந்ததானது என் உள்ளத்தை மிகச் சோர்வுறச் செய்தது. என் மனம் ஈடுபட்டிருந்த பழங்கால நாகரிகத்திலிருந்தும் சூழ்நிலையிலிருந்தும் விடுபட்டுத் தற்காலத்துக்கு வந்துவிட விரும்பினேன். படகுக்காரனிடம் 'கொல்லத்துக்குத் திரும்பிப் போவோம்' என்று கூறவும் வாய் எடுத்து விட்டேன். அப்போது ஏதோ ஒன்று என் கவனத்தைக் கவர்ந்தது. நான் சொல்ல வந்த வார்த்தைகள் என் உதடுகளிலேயே உறைந்து விட்டன. ஆம், ஒரு குண்டூசித் தலையளவு தோற்றமளித்த வெளிச்சம் தூரத்தே எங்கோ நகர்ந்து செல்வது போல் தெரிந்தது. ஒருகால் பிசாசு ஏதாகிலும் கையில் விளக்கேந்திக் கடலில் நீந்திச் செல்கிறதோ என்று நினைத்தேன். மொத்தத்தில் எனக்கு ஒரே பிரமிப்பாக இருந்தது. அடுத்த கணம் ஏதாகிலும் சூழ்ச்சியோ என்று எண்ணினேன். அதற்கடுத்த கணம் ஒருவிதக் 'கிலி' என்னைப் பற்றிக் கொண்டது.

ஆகவே, அந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு, ''அது என்ன!'' என்று ஓடக்காரனைக் கேட்டு விட்டேன்.

அவன் கொஞ்சங்கூடப் பயமோ நடுக்கமோ சந்தேகமோ ஒன்றும் அடையாமல் என் பக்கம் திரும்பிக்கூடப் பாராமல் ''உங்களுக்கே அது என்னவென்பது வெகு சீக்கிரத்தில் புரிந்துவிடும், ஐயா!'' என்று தெளிவான ஆங்கிலத்தில் கூறினான். ''இது என்ன விசித்திரமாக இருக்கிறதே!'' என்று தோன்றியது எனக்கு.

பாரத தேசத்திலேயே திருவாங்கூரில்தான் படித்தவர்கள் மிக அதிகம். எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் சதவிகிதம் மற்றப் பகுதிகளை விட அதிகமாக இருந்த போதிலும் ஒரு படகோட்டி வெகு சரளமாக ஆங்கிலம் பேசுவான் என்று எதிர்பார்க்க முடியுமா! ஆயினும் என் படகுக்காரன் வெகு சரளமாக ஆங்கிலத்தில் பேசினான். அப் பேச்சுத் திறமைதான் என்னை அவன்பால் வசீகரித்தது. அதனால்தான் தோணித் துறையில், கும்பலும் சத்தமும் அதிகமிருந்த நீராவிப் படகுகளும், நிர்ப்பயமாகப் பிரயாணம் செய்யக்கூடிய பெரிய படகுகளும் எத்தனையோ இருந்தாலும், இவனுடைய ஆட்டங் கண்ட ஓட்டைப் படகையே தேர்ந்தெடுத்தேன்.

எங்கள் படகு வெகு நிதானமாக அவ்வுப்பங் கழியில் வளைந்து வளைந்து சென்றது. அப்போது அவன் ஒன்றும் அதிகமாகப் பேசிவிடவில்லை. அது எனக்கு மிகவும் சௌகரியமாகவே இருந்தது. ஆம், வேறு எந்த வாயாடி வழித்துணை கிடைத்திருந்தாலும் நாங்கள் சென்ற வழியிலிருந்த ஊர்களைப் பற்றிய அனாவசியமான விவரங்களைக் கூறி உபத்திரவப் படுத்தி, அந்த மாலை நேரத்தின் அமைதியைக் கெடுத்திருப்பான். சாதாரணமாக உல்லாசப் பிரயாணம் செய்ய வருவோர், தாங்கள் செல்லும் வழிகளில் உள்ள பாறைகள், திட்டுகள், தீவுகள், கிராமங்கள், கலங்கரை விளக்குகள் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளைக் கேட்டறிந்து குறித்துக் கொள்வார்கள். அந்தப் பைத்தியம் எனக்குச் சற்றும் கிடையாது. நான் இந்தப் பிரசித்தி பெற்ற உப்பங்கழியின் அமைதியையும் அழகையும் ரசிக்கத்தான் வந்திருந்தேன். ஆனால் இயற்கை வனப்பைப் பார்த்துப் பார்த்து அலுப்பு ஏற்படும் சமயங்களில் மட்டும் ஓடக்காரனின் முகத்தைப் பார்ப்பேன்!

மழையிலும் வெய்யிலிலும் அடிபட்டுப் பாடமாகி நரையும் திரையுமாக இருந்த அவன் முகத்தைப் பார்ப்பேன். அதிலிருந்து ஒருவிதமான சிந்தனைப் பின்னல்கள் என் மனதில் எழும். எத்தகைய வாழ்க்கை இதுகாறும் நடத்தி வந்திருக்கிறானோ இவன்! என்னென்ன எண்ணங்கள் இவன் மனதில் எழுமோ! 'வாழ்வு ஒரு சதமில்லை; வாழ்வு அர்த்தமற்றது, வாழ்வில் ஒன்றுமே யில்லை' என்று வாழ்க்கையை நெடுக ஆராய்ந்து மேற்கண்ட முடிவுக்கு வந்தவன் போல் தோற்றமளிக்கிறதே இவனுடைய முகபாவமும், முகச் சுருக்கங்களும்! இந்த முடிவுக்கு வர இவன் வாழ்க்கையில் எத்தகைய சம்பவம் காரணமாக இருந்திருக்கும்! துன்பத்தை ஏளனமாகப் பரிகசித்துச் சிரிப்பது போன்ற பாவம் இவன் முகத்தில் தோன்றுகிறதே, அதற்குக் காரணம் ஏதாக இருந்திருக்கக் கூடும்! — இவ்வாறெல்லாம் நான் யோசிக்கத் தொடங்கி விடுவேன். நிற்க.

அந்த விளக்கு வெளிச்சத்தைப் பற்றி நான் கேட்டபோது, 'வெகு சீக்கிரத்தில் உங்களுக்கே புரிந்து விடும் ஐயா!' என்று கூறினான் அல்லவா! அந்த வார்த்தைகளுக்குமேல் ஒரு வார்த்தை கூடக் கூறாமல், அவன் வெளிச்சம் வந்த திசையை நோக்கிப் படகைத் திருப்பித் துடுப்புப்போட்டான். எனக்கோ, 'என்னவோ, ஏதோ!' என்ற பயம் தோய்ந்த ஆவல் என் உள்ளத்தை அழுத்திக் கொண்டிருந்தது. கடைசியில் அவ்விருட்டிலிருந்து ஒரு படகு வெளிப்பட்டது. அப்படகில் ஒரு பெண் தன் கையில் விளக்கேந்திக் கொண்டிருந்தாள்.

அந்தக் கனாந்தகாரத்தில் அவள் எங்கே போய்க் கொண்டிருக்கிறாள்! ஏன் போகிறாள்! உண்மையிலேயே அவள் எலும்பும் சதையும் உள்ள ஒரு பெண்தானா!—என்ற பற்பல சந்தேகங்கள் எழுந்தன. இருட்டினாலும், மனத்தில் ஏற்பட்ட பயப் பிராந்தியாலும் கற்பனை செய்து கொண்ட உருவோ!—ஆகிய எண்ணங்கள் எல்லாம் என் மனத்தில் எழலாயின.

படகுக்காரன் வெகு நிதானமாகத் துடுப்புப் போட்டான். ஏன், துடுப்புப் போடுவது கூடக் காதில் விழாதபடி அவ்வளவு மெல்லத் துடுப்பு போட்டு, எங்கள் படகு அவளுடைய படகை நெருங்கி விடாதபடி பார்த்துக் கொண்டான். ஆகவே நாங்கள் இருளில் மறைந்தே இருந்தோம். அவளும் எங்களைப் பார்க்கவில்லை.

ஆனால் எங்களுக்கோ, அவளுடைய கையிலிருந்த விளக்கு வெளிச்சத்தில் அவளுடைய மெல்லிய உருவத்தைப் பார்க்க முடிந்தது.

அவ்விடத்தில் தலை மட்டத்துக்கு மேல் வானத்தை நோக்கி விரல் நீட்டி எச்சரிக்கை செய்வது போல் ஒரு மரத்தின் அடிமரம் நீட்டிக் கொண்டிருந்தது. அன்று பகல் அதை அங்கே ஏற்கெனவே பார்த்திருந்தேன். இப்பொழுது அந்த அடி மரத்தை நெருங்கியதும் அவள் படகு நிதானப்பட்டது. அந்த அடிமரத்தில் ஒரு விளக்கு பொருத்தப் பட்டிருந்தது. அந்தப் பெண் அதன் அருகில் சென்று, அந்த விளக்கில் மண் எண்ணெய் ஊற்றி, தீக்குச்சி கிழித்து விளக்கைப் பொருத்தினாள்.

அந்தக் கலங்கரை விளக்குப் பொருத்தியானதும், அதன் வெளிச்சத்தில் அவள் முகம் தெரிந்தது. இப்பொழுது ஒரு கணம் நினைத்துப் பார்த்துக் கொண்டால்கூட அந்த முகம் நன்றாக ஞாபகம் வருகிறது. ஆம், அவ்வளவு சுலபமாக மறந்துவிடக்கூடிய முகம் அல்ல அவளுடையது. ஏனெனில் அவளுடைய உடல் தோற்றத்துக்கும் முக பாவத்துக்கும் அவ்வளவு வேற்றுமை இருந்தது. அவளுடைய மேனி பசலை பாய்ந்திருந்தது. உடம்பு சோர்வுற்றிருந்தது. கன்னம் ஒட்டி உலர்ந்திருந்தது. தலைமயிர் சரம் பட்டுச் சடையாக இருந்தது. திரியைக் கோதி விளக்கை ஏற்றிய கை துவண்டு சதையின்றி எலும்பாக இருந்தது. ஆனால் அவளுடைய விசாலமான அழகிய கண்களில் கனிவும் கருணையும் வழிந்தது. ஏதோ ஒரு புனிதப் பொருளை—அல்ல—புண்ணிய புருஷனை ஆவலுடன் எதிர்நோக்கும் பாவம் காணப்பட்டது. அவள் முகத்தில் ஒரு காந்தி வீசியது! அது, அவள் யாருக்காகவோ, தன்



னைப் பரிபூரண பக்தியில் அர்ப்பணம் செய்து விட்டு அந்தத் தியாகத் தீயில் எரியும் உள்ளத்தின் பிரகாசம் அவள் பசலை உடலின் ஒவ்வொரு பகுதியிலும் வெளிப்படுவது போலத் தோன்றியது.

அவள் இதழ்களில் புன்னகை தவழ்ந்தது. அவள் முகத்தில் தன் குறிக்கோள் நிறைவேறியே தீரும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை பிரகாசமாகத் தோன்றியது. மொத்தத்தில் கடும் விரதங்களைப் பக்தியுடன் அனுஷ்டிக்கும் பிக்ஷுணியின் முகத்திலன்றி, அறிவின் எல்லையைக் கண்ட ஞானியின் முகத்திலன்றி, காதலன் வருகையை ஆவலுடன் எதிர்பார்க்கும் காதலியின் முகத்திலன்றி வேறு எங்கும் காணக்கிடைக்காத ஒரு அரிய தேஜஸ் அவள் முகத்தில் ஜொலித்தது.

பிறகு அவள் தன் படகைத் திருப்பிக் கொண்டு, அந்நிலவொளியில் தெரிந்த செம்படவர்கள் குடிசையிருந்த ஒரு தீவு பக்கமாகச் சென்றாள். அவள் திரும்பிச் சென்றபோது ஏதோ பாடிக் கொண்டே சென்றாள். குழலோசை போன்ற குரலில் இரக்கமும் சோகமும் தோய்ந்த பாடலாக என் காதில் விழுந்தது. அதைக் கேட்டபோது முன்பின் கேட்டறியாத ஒரு விசித்திரப் பாட்டாகவுமிருந்தது; கூடவே இந்தப் பாட்டை எப்போதோ யாரோ பாடக் கேட்டிருப்பது போலவும் தோன்றியது. அவளுடைய அந்தப் படகோட்டிகளின் மலையாளத்தில் கேட்டதில்லை என்றாலும் வேறு எதிலோ




மனைவி :—நம் கல்யாணத்திற்கு முன் நீங்கள் எந்தப் பிச்சைக்காரன் கேட்டாலும் ஒரு அணா கொடுப்பீர்களாமே!

புருஷன் :—அது உண்மைதான் ; கல்யாணமாவதற்கு முன்னால் என்னிடம் ஒரு அணா இருந்தது !

---

எப்போதோ யாரோ பாடக் கேட்டிருப்பது போலத் தோன்றியது.

"அவள் பாடுவது என்ன!" என்று என் ஓடக்காரனைக் கேட்டேன்.

அதற்கு அவன், " தங்கள் காதலர்களை எதிர்பார்க்கும் சமயங்களில் பெண்கள் எங்களில் பாடும் பாட்டு அது !" என்றான்.

'ஓ! அதற்காகத்தான், அவள் இவ்வளவு தூரம் படகு செலுத்தி வந்து தன் கணவனை—அல்ல தன் காதலனை—இருட்டில் வழி தவறிப் போகாமல் இருப்பதற்காக விளக்கு ஏற்றி வைத்துவிட்டுப் போகிறாளோ! பாவம், பார்க்கப் பரிதாபமாகத்தான் இருக்கிறது. ஆனால் வியப்படைவதற்கு ஒன்றுமில்லை. உலகத்தில் இது சகஜந்தான்' என்று என் மனதில் சொல்லிக் கொண்டே, "இன்று அவன் வருவானோ !" என்று என் படகோட்டியைக் கேட்டேன்.

அதற்கு என் ஓடக்காரன் பதில் சொன்னான். இருட்டிலிருந்து வந்த அவன் குரலில் சோகம் தோய்ந்திருந்தது. எனினும் கொச்சை வார்த்தைகள் கலக்காமல் தெளிவான ஆங்கிலத்தில், " இல்லை, ஐயா, இன்று அவன் வரமாட்டான், ஏன்! அவன் என்றுமே வரமாட்டான்! அவன் இவ்வுலகிலேயே இல்லை ; இறந்து விட்டான் !" என்றான்.

" அட பாவமே !" என்று திடுக்கிட்டுக் கூறினேன். பிறகு தொடர்ந்து, "அந்தப்பெண்ணுக்கு அவன் இறந்து விட்டான், திரும்பி வரமாட்டான் என்ற செய்தியே தெரியாதோ !" என்று கேட்டேன்.

"அவளுக்குத் தெரியும். தெரிந்தாலும் அவள் நம்பமாட்டேன் என்கிறாள். அவனுக்காக, அவன் வருகைக்காக இன்னும் காத்துக் கொண்டிருக்கிறாள்..." என்றான்.

அப்படியானால் இவள், இப்படித் தினந்தோறும் இரவில் என்றும் வர முடியாத ஒரு ஆசாமிக்கு வழிகாட்ட வருவைக்கரையில் விளக்கேற்றிக்கொண்டு வருகிறாளாக்கும் என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். அடுத்த கணம் அவளுடைய பரிபூரண வரலாற்றைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற எழுத்தாளர்களுக்கே இயற்கையாகவுள்ள ஆவல் என் உள்ளத்திலும் கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது. ஓயாது கேள்விமேல் கேள்வி கேட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக அவளைப் பற்றிய எல்லா விவரங்களையும், லகுவில் கூற இணங்காத என் படகோட்டியிடமிருந்து தெரிந்து கொண்டேன்.

பாமர மக்களின் வீரத்தை எடுத்துக் காட்டும் அற்புதக் கதை அது. 1942-ம் வருஷத்துப் புரட்சிப் புயல் தேசமெங்கும் வீசியபோது, எங்கோ தென் கோடியிலிருக்கும் திருவிதாங்கூர் உப்பங்கழிகூடப் பொங்கியது. அப்போது மக்கள் அன்னிய ஆட்சியின்மீது கொண்டிருந்த தங்கள் தீரா மனக் கசப்பை மாணவர் சத்தியாக்கிரகம், தொழிலாளர் வேலை நிறுத்தம், விவசாயிகள் வேலை நிறுத்தம் ஆகிய முறைகளில் காண்பித்துக் கொண்டனர். அவர்களுடன் கொல்லம் தோணித்துறையின் பல்லாயிரக்கணக்கான படகுக்காரர்களும் சேர்ந்து கொண்டனர். அவர்களும் ஒத்துழையாமை செய்தனர். பல வாரங்கள் வேலைக்குப் போகவில்லை. போலீஸார் குண்டாந்தடி பிரயோகித்துப் பார்த்தனர் ; ஆனால் அதற்கு அவர்கள் மசியவில்லை. "'உப்பங்கழி இரத்த ஆறாக மாறினாலும் வேலைக்குத் திரும்புவதில்லை' என்று தீர்மானமாக இருந்து விட்டோம்" என்று கூறி நிறுத்தினான்.

"'உப்பங்கழி இரத்த ஆறாக மாறினாலும்' இந்தச் சொற்றொடர் ரொம்ப அழகாக இருக்கிறதே! படம் வரைந்து காட்டுவதுபோல் மனதில் பதிகிறதே! சொற்றொடர் பீதியுண்டாக்குவதாக இருந்தாலும் விஷயத்தை நன்கு விளக்குகிறது. அந்தச் சொற்றொடர் உனக்கு எப்படித் தெரிந்தது! யார் சொல்லிக் கேட்டது !" என்று கேட்டேன்.

" அவன் சொன்னது ஐயா! படகோட்டிகள் மீட்டிங்கில் அவன் சொன்னான். அவன் பெயர் கிருஷ்ணன். அவனும் ஒரு படகோட்டிதான். அவனுக்குக் கொஞ்சம் பள்ளிப் படிப்பு உண்டு. திருவனந்தபுரத்தில்வேறு கொஞ்சகாலம் இருந்தான். அவன் பல புஸ்தகங்கள் வாசித்திருந்தான். பல தலைவர்களின் பிரசங்கங்களைக் கேட்டிருந்தான். நல்ல நடாத்திரம் பொருந்திய இளைஞன். கொல்லம் தோணித் துறையிலிருந்து இந்தத் தீவுக்கு, அதாவது மூன்று மைல் நீந்தியே வருவான், தன்னுடைய ராதையைப் பார்ப்பதற்கு..."

" அவன் பெயர் கிருஷ்ணன் ; அவள் பெயர் ராதை! பலே! நல்ல பொருத்தமாயிருக்கிறதே!—கதையில் வருகிறப் போல் !—இல்லையா !" என்றேன்.

நான் ஆங்கிலத்தில் 'பொருத்தமாக இருக்கிறாது' என்று கூறியது அவனுக்கு விளங்கவில்லை. "நிஜ வாழ்க்கையில் இம்மாதிரி பெயர்கள் வாய்ப்பதில்லை யல்லவா" என்று கூறியவுடன், "வாஸ்தவம், அவள் பெயர் ராதை அல்ல! வேறு ஏதோ; எனினும் அவளை ராதா என்றுதான் அழைக்க விரும்பினான். ராதா-கிருஷ்ணன், கிருஷ்ணன்-ராதா! அவர்கள் எவ்வளவு அழகான ஜோடி! எல்லாச் செம்படவர்களுமே அவர்கள் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறார்கள் என்ற செய்தியைக் கேட்டுச் சந்தோஷப் பட்டார்கள்!" என்று கூறிவிட்டுச் சற்றுத் தயங்கினான். பிறகு "ஆம், எல்லோருமே சந்தோஷப் பட்டார்கள், ராதையைத் தாங்கள் ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டும் என்று ஆசைப் பட்டவர்களைத் தவிர!" என்று தான் முதலில் கூறிய கடைசி வாக்கியத்தை இவ்வாறு திருத்திக் கூறினான்.

பிறகு மௌனத்தில் ஆழ்ந்து விட்டான். அவனைப் பேசவைக்க மறுபடியும் தூண்டுகோல் போடவேண்டியதாகி விட்டது.

"இந்த ராதை எட்டு வருஷத்துக்கு முன் ரொம்ப அழகாக இருந்திருப்பாள் அல்லவா!" என்றேன்.

அவன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுவிட்டுத் துடுப்பை மெள்ளப் போட்டுக் கொண்டே, "அழகு என்று சொன்னீர்கள்! அதற்கு மேலே ஒரு வார்த்தை இருந்தால் சொல்லுங்கள். ஆகா! என்ன அழகு! மீனைப் போன்ற பளபளப்பான மேனி. இந்த உப்பங்கழியைப் போன்ற ஆழமான கண்கள். இந்தக் கடற்கரையில் வளரும் அழகிய பனைமரங்கள் போன்ற நல்ல உயரம்! . . ." என்று சொல்லிக் கொண்டே வந்தான்.

இவ்விதம் மூலக் கதையை விட்டு வேறு எங்கெல்லாமோ கற்பனை யுலகில் சஞ்சரிக்கத் தொடங்கிவிட்டான். 'என்ன நடந்தது' என்று சம்பவங்களைக் கேட்க ஆவல் கொண்டிருக்க அவன் கவிஞனைப்போல் வர்ணனையில் இறங்கிவிட்டால் எனக்கு எப்படி யிருக்கும்! ஆகவே, கதை கேட்பவர்கள் கேட்பதுபோல், "அப்புறம் என்ன நடந்தது!" என்று கேட்டு, அவனை மூலக் கதைக்குத் திருப்பிக் கொண்டுவர வேண்டியிருந்தது.

"அவனுடைய அந்தப் பிரசங்கத்துக்குப் பிறகு அவனைக் கைதுசெய்ய 'அரஸ்ட் வாரண்ட்' வந்தது. அவன் எங்கோ தலை மறைவாகத் திரிய ஆரம்பித்தான். போலீஸ் புலிகள் அவனைத் தேடத் தலைப்பட்டார்கள். அவனைப் பிடிப்பதற்கு வெகு தூரத்துக்கு வெகு தூரம் வலை விரித்தார்கள். ஆனால் அவன் அகப்படவே இல்லை. போலீஸாருக்கு அவன் இருப்பிடம் தெரியவில்லை என்றாலும் எல்லாப் படகுக்காரர்களுக்கும் எல்லாச் செம்படவர்களுக்கும் அவன் இந்தக் கருநீல உப்பங்கழியில் நீந்தித் தன் ராதையைப் பார்க்கத் தினந்தோறும் இரவில் செல்கிறான் என்பது தெரியும். இதை யறிந்த அவர்கள், போலீஸ்காரர்களின் கையற்ற பரிதாப நிலையைக் கண்டு சிரித்தார்கள். கிருஷ்ணனின் துணிச்சலைக் கண்டு பெரிதும் சந்தோஷப்பட்டார்கள். ஆம், நான் முதலில் கூறியபடி கிருஷ்ணன் மீது பொறாமை கொண்டவர்கள் தவிர அத்தனை பேருமே சந்தோஷப் பட்டார்கள்."

இவ்விதம் கூறிவிட்டு மறுபடியும் அவன் மௌனத்தில் ஆழ்ந்து விட்டான். ஆகவே நான் மறுபடியும், "பிறகு என்ன நடந்தது!" என்று கேட்டு அவன் மௌனத்தைக் கலைக்க வேண்டி யிருந்தது. அவன் தொடர்ந்தான்:—

"சந்திரன் தோன்றாத மூன் இரவுகள் வரலாயின. இருட்டில் தைரியமாக நீந்தி வரும் கிருஷ்ணனுக்கு உதவியாக இருக்கும் பொருட்டு, இன்று பார்த்தீர்களே அதே இடத்தில் விளக்கு வைத்தாள் ராதை. அன்றைய தினத்திலிருந்து ஒவ்வொருநாளும் சூரியன் அஸ்தமித்தவுடன் ராதை ஒரு படகில் வந்து விளக்கை ஏற்றிவிட்டுப்போவாள். ஆம், இன்று செய்தாற்போல் அவள் செய்து வந்தாள்."

உடனே நான் திரும்பித் தண்ணீரின் நடுவிலிருந்த அவ் வெளிச்சத்தைப் பார்த்தேன். உயிரைக் காப்பாற்றும் அந்தச் சின்னஞ் சிறு விளக்கு வெளிச்சத்தின் துணையைக் கொண்டு அந்த ஆழி நீரைக் கிருஷ்ணன் நீந்திச் செல்லும் போது உண்டாகும் சலசலப்புப் போன்ற சத்தம் என் காதில் விழுந்தது.

"பிறகு என்னவாயிற்று!" என்றேன்.

அதற்கு அவன் பதில் கூறியபோது, குரல் தழுதழுத்தது. உள்ளத்தின் அடிவாரத்திலிருந்து

---



பெரியவர் (மாப்பிள்ளை பார்க்க அலைபவர்):—ஏனப்பா சீனு! நீ இன்னும் தனியாகத்தானே இருக்கிறாய்?

சீனு:—இல்லையே! நான் என் அண்ணாகூட இருக்கிறேன்!

முதல்வர்:— அது சரி, உன் அண்ணாகூட இன்னும் தனியாகத் தானே இருக்கிறார்?

சீனு:—இல்லை! அவன் என் கூடத்தான் இருக்கிறான்!

குரல் எழுவது போல் தோற்றியது. "வழக்கம்போல் அன்றும் அவன் விளக்கேற்றினான். ஏற்றி என்ன பயன்! விளக்கை ஏற்றி விட்டுச் சென்ற சற்று நாழிகைக்கெல்லாம் எவனோ ஒருவன் வந்து அணைத்து விட்டான். கிருஷ்ணன் அந்நிலை நோக்கி நீந்தி வந்த போது வெளிச்சம் இருக்கவில்லை."

"ஏன் இந்த மடத்தனத்தை அவன் செய்தான்! ஏன் இந்தப் பயங்கரமான காரியத்தைச் செய்தான்!"

"அவன் காதலின் முன்னிட்டு இதெல்லாம் செய்ய வேண்டியது அவசியம் என்று நினைத்தான். ராதையின் மீது அவன் கொண்ட காதலின் காரணமாக அவ்வாறு செய்தான். கிருஷ்ணனுக்குப் போட்டியாக அவளைக் காதலிக்கவே, அவன் அவ்வாறு செய்ய வேண்டியதாயிற்று. அவளை அடைய வேண்டுமென்ற ஆசை அந்தப் பாதகனுக்கு அளவு கடந்து இருந்தது. 'பைத்தியம்' என்று சொல்லும் அளவு முற்றியிருந்தது — அவன் காதல். மேலும் கிருஷ்ணன் உயிருடன் இருக்கும் வரை ராதையை அடைவதென்பது இயலாத காரியம் என்பதையும் அறிந்திருந்தான். ஆகவே, அவன் தன் கைகளாலேயே கிருஷ்ணனின் கழுத்தை நெரித்துக் கொல்வதற்கொத்த அக் காரியத்தைச் செய்தான். அதாவது அச்சுடரை அணைத்தான். ஆனால் அவன் ஒரு விஷயம் மட்டும் அறிந்திருக்கவில்லை. கிருஷ்ணன் இறந்த பிறகும் அவளை அடைவதென்பது முக்காலும் இயலாத காரியம் என்பதுதான் அது!"

இவ்வாறு அவன் கூறிக் கொண்டு வந்த போது நாங்கள் கொல்லம் படித்துறையை நெருங்கிக் கொண்டிருந்தோம். ஆகவே, படகை விட்டு இறங்குவதற்குள் அந்தக் கதையின் முடிவை அறிய வேண்டும் என்ற ஆவல் எனக்கு அதிகரித்தது. "சரி, கிருஷ்ணன் மூழ்கி இறந்தான். பிறகு என்ன வாயிற்று!" என்றேன்.

"கிருஷ்ணன் இறந்த பிறகு எங்கள் வேலை நிறுத்தமும் முறிந்தது."

"ராதை என்னவானாள்! அவள் தன் காதலனின் அகால முடிவை எப்படி ஏற்றுக் கொண்டாள்! அச்சோகத்தை எப்படித் தாங்கினாள்!" என்று மிக்க ஆவலுடன் கேட்டேன்.

"அவள் மூழ்கி இறந்தான் என்பதை அவள் நம்பவே இல்லை. அதற்கேற்றாற் போல் 'பாருங்களேன், இறந்தவனுடைய பிரேதம் கிடைக்கவே இல்லையே! ஆகவே, இன்னும் அவள் அவன் வருவான் என்றே நம்புகிறாள். தினம் இரவு இங்கு வந்து விளக்கேற்றி வைத்து விட்டுப் போகிறாள். ஆனால் ஊரார், அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள்."

"அந்துரோகி, கிருஷ்ணனைக் கொன்று, தன் கூட்டத்தாருக்கும் துரோகம் செய்து அவர்கள் உரிமைக்கும், சுதந்திரத்துக்கும் தீங்கு விளைவித்த அந்தப் படுபாவி என்னவானான்!" என்று கேட்டேன்.

இந்தக் கேள்விக்குப் படகோட்டியிடமிருந்து பதிலே வரவில்லை. கல்லேபோல் அமர்ந்திருந்தான். அவன் துடுப்பு கிளப்பிய சிற்றலைகளின் சத்தத்தைத் தவிர வேறு எத்தகைய சத்தமும் அவனிடமிருந்து வரவில்லை. ஆனால் அவனுடைய குற்றமுள்ள நெஞ்சின் படபடப்பு என் காதுகளில் மிகத் தெளிவாக விழுந்தது!

அப்பொழுது ஒரு சத்தம் வெகு சமீபத்திலிருந்து கேட்டது. அதே சத்தம் வெகு தூரத்திலிருந்து சற்று நேரத்துக்கு முன் கேட்டது. ஆனால் இப்பொழுது இச்சத்தத்திற்கு ஒரு புதுப்பொருள் இருந்தது.

படகின் இருபுறமும் அலைமோதி எழும் இனிய 'கள கள' த்வனியை விட்டு இனிப் பிரிந்து செல்லவேண்டும் என்று நினைவுறுத்தியது அச்சத்தம்.

கிருஷ்ணனின் தியாகத்தினால் புனிதமடைந்த உப்பங்கழியிலிருந்து நான் பிரிந்து செல்ல வேண்டும் என்பதை நினைவுறுத்தியது.

மனிதன் அழிந்தாலும், மக்கட் சமுதாயத்தில், ஊழி ஊழிகாலம் நின்று வழிகாட்டிச் செல்லும் நம்பிக்கையின் ஸ்தூல வடிவமாகத் திகழ்ந்த அந்த ராதையின் நந்தா விளக்கினின்றும் பிரிந்து செல்லவேண்டும் என்பதையும் நினைவுறுத்தியது, கொல்லம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வந்த ரயிலின் அறை கூவல்!

(தமிழாக்கம்: என். வி. எஸ்.)

நீல மாம்பளம்!
மாம்பளம்!
நீல மாம்பளம்!!

ஏய், நீலமாம்பழம்!
இந்தாப்பா!

?!?

பழைய மாம்பலத்துக்கு
எப்படிப்பா போறது?

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 304. மார்பில் விழுந்தது அறை!

யுத்த களத்தைப் பார்த்தோம். சுக்கிரீவனும் கும்பன் என்ற அரக்க சேனாதிபதியும் போர் புரிந்தார்கள்.

கும்பன் ஒரு பெரிய தண்டாயுதத்தைக் கொண்டு மோத வந்தான்.

சுக்கிரீவன் பக்கத்திலிருந்த ஒரு மரத்தைப் பிடுங்கி, அதைக் கொண்டு தண்டாயுதத்தின் வேகத்தைத் தடுத்து விட்டான்.

ஆனால் மரம் நொறுங்கிப் போய் விட்டது. சுக்கிரீவனுக்குக் கோபம் வந்துவிட்டது. அப்படியே போய் கையினால் குத்திக் கும்பனைத் தீர்த்து விட வேண்டியதுதான் என்று சொல்லிக் கொண்டு, அதற்காக ஆயத்தம் பண்ணினான்.

அந்தத் தருணத்தில் நீலன் என்ற குரங்கு ஓடியே வந்து சுக்கிரீவன் கையில் ஒரு மாபெரும் தண்டாயுதத்தைக் கொடுத்து விட்டான்.

ஆகவே சுக்கிரீவன் கைக்கும் தண்டாயுதம் வந்து விட்டது.

அத்தண் டு
  கொடுத்ததும், கைக்கொ(டு)
    அமைந் தான்;
ஒத்தண் டமும்
  மண்ணும்ந டுங்க
    உருத் தான்;
பித்தன் தட
  மார்பொடு தோள்கள்
    பிளந் தான்;
சித்தங் கள்
  கலங்கிஅ ரக்கர்
    திகைத் தார்.

[அத்தண்டு கொடுத்ததும் கைக்கொடு அமைந்தான்: நீலன் தண்டாயுதத்தைக் கொடுத்ததும் அதைச் சுக்கிரீவன் கையில் வாங்கினான். யுத்தத்துக்குத் தயார் ஆகிவிட்டான்; ஒத்தண்டமும் மண்ணும் நடுங்க உருத்தான்: வானமும் மண்ணும் ஒன்றாகச் சேர்ந்து நடுங்கும்படி ஒரே படியாய்க் கர்ஜித்தான்; அந்தக் கர்ஜனையோடு தண்டாயுதத்தைக் கும்பன்மேல் பிரயோகித்தான். பித்தன் தட மார்பொடு தோள்கள் பிளந்தான்: சுக்கிரீவனது கர்ஜனையால் பைத்தியம் பிடித்தது போல் திகைத்து நின்ற கும்பனது மார்பையும் தோள்களையும் நொறுக்கினான்; சித்தங்கள் கலங்கி அரக்கர் திகைத்தார்: இதைப் பார்த்த அரக்கர் ஒவ்வொருவருமே மனம் கலங்கித் திகைத்துப் போய் நின்றார்கள்.]

* * *

சுக்கிரீவன் தண்டாயுதத்தால் அடித்த அடிகள் கும்பன்மேல் வெகு வேகமாகவே விழுந்து விட்டன.

இடியும் மின்னலும் ஒரு மலையின் மேல் விழ அது அடி பெயர்ந்து கீழே விழுவது போல் விழுந்து விட்டான் அரக்க வீரனாகிய கும்பன்.

அடியுண் டஅ-
  ரக்கன்,அ ருங்கனல்
    மின் ன
இடியுண் டதோர்
  மால்வரை என்ன
    விழுந் தான்;
முடியும் இவன்
  என்றிட ;— முன்னம்
    வெருண் டான்,
'ஒடியும் உன்
  தோள்'என மோதி
    உடன் றான்

[அடி உண்ட அரக்கன்: சுக்கிரீவனது தண்டாயுதத்தால் அடிபட்ட கும்பன்; அருங் கனல் மின்ன இடி உண்டதோர் மால்வரை

யென்ன விழுந்தான்: கொடிய நெருப்பு மயமான மின்னலை வீசிக்கொண்டு இடி விழவும், அதனால் உயர்ந்த மலை ஒன்று புரண்டு விழுந்தால் எப்படி யிருக்குமோ அப்படி விழுந்தான் கும்பன்; முடியும் இவன் என்றிட: செத்தான் இவன் என்று எண்ணி னான் சுக்கிரீவன். எண்ணின மாத்திரத்தில் தானே; முன்னம் வெருண்டான்: அந்த க்ஷணத்திலேயே கோபாவேசத்தோடு எழுந் தான் கும்பன்; அந்தக் கோபாவேசத்திலேயே ஒடியும் உன் தோள் என மோதி உடன்றான்: 'இதோ ஒடியப்போகிறது உன்னுடைய தோள்' என்று சொல்லிக்கொண்டு தண்டா யுதத்தோடு மோதிச் சண்டைக்கு வந்தான் கும்பன்.]

* * *

சுக்கிரீவனது தோளில் கும்பனது தண்டாயுதம் விழுந்தது. கொஞ்சம் மயக்கம் வந்தது சுக்கிரீவனுக்கு. சற்றுத் தடுமாறவும் செய்தது கால்.

உடனடியாகவே அந்தத் தடுமாற்றம் நீங்கியும் விட்டது.

தோளிற் புடை
உண்டயர் சூரியன்
மைந் தன்

தாளிற் தடு
மாறல்த விர்ந்து
தகைந் தான்:

வாளிக் கடு
வில்விசை யால்எதிர்
மண் டி,

ஆளித் தொழில்
அன்னவன் மார்பின்
அறைந் தான்.

[தோளிற் புடை உண்டு: தோளில் அடிபட்டு: அயர் சூரியன் மைந்தன்: திகைப்புற்ற சுக்கிரீவன்; தாளிற் தடுமாறல் தவிர்ந்து தகைந்தான்: கால் கொஞ்சம் தடுமாறியது. அது உடனடியாக நீங்கியும் விட்டது. உடனே எதிர்க்க ஆரம்பித்தான்; வாளிக் கடு வில் விசையால் எதிர் மண்டி: கொஞ்சம் பின் வாங்கி அம்பின் அதி வேகத்தோடு எதிரே பாய்ந்து; ஆளித்தொழில் அன்னவன் மார்பின் அறைந்தான்: சிம்மம்போல் வீர வேகத்தோடு போர் செய்த அரக்கனுடைய மார்பில் கதாயுதத்தால் ஒரு அறை அறைந் தான் சுக்கிரீவன்.]

இந்த விதமாக மோதியும் பின் வாங்கியும் பிறகு மோதியும் தண்டாயுதங் களைச் சிறிது நேரம் பிரயோகித்து வந்தார்கள் இரு வீரர்களும். இனி என்ன செய்கிறார்கள் என்பதை அடுத்த இதழில் பார்க்கலாம்.











# கலங்காத நெஞ்சம்!

ரா. பா.

வாசலில் கார் வந்து நின்ற சத்தம் கேட்டுச் சமையலறையிலிருந்து எழுந்து வந்தாள் கமலா. அவள் கணவன் டாக்டர் நீலகண்டன்தான் அப்போது உள்ளே நுழைந்தான்.

"டாக்டர் ஸார்! ஏது, இன்று இவ்வளவு சீக்கிரம் திரும்பி விட்டீர்களே! நர்ஸிங் ஹோமில் நோயாளிகளே இல்லையா?" என்று பரிகாசமாகக் கேட்டு வரவேற்றாள் அவன் மனைவி கமலா.

"இப்போதைக்கு நான்தான் பெரிய நோயாளி!" என்று அலட்சியமாகக் கூறி விட்டுக் கழுத்தில் தொங்கிய 'ஸ்டெதஸ்கோப்'பைக் கழற்றி மேஜையின்மீது போட்டான் நீலகண்டன்.

"என்ன, உங்களுக்கே உடம்பு சரியில்லையா? என்ன அப்படித் திடீரென்று?" என்று பதற்றத்துடன் கேட்டாள் கமலா.

"உடம்புக்கு மட்டும்தான் நோய் வருமா? மனதையும் பீடிக்குமல்லவா?" என்றான் நீலகண்டன். அவன் குரல் சற்றுக் கடுமையாகவே இருந்தது.

"ஓஹோ! உங்களுக்கு மனோவியாதியா? அதற்கு மருந்தே கிடையாதாமே?" என்று கூறிவிட்டுக் 'கலகல'வென்று சிரித்தாள் அவள். அந்தச் சிரிப்பு அப்போது நெருப்பாக இருந்தது, அவனுக்கு.

"மனதைக் குணப்படுத்த மருந்து இல்லாவிட்டாலும், அதை வாட்டி வதைக்கும் விஷம் ஏராளமாக இருக்கிறது; அதுவும் உன்னிடமே இருக்கிறது" என்று நீலகண்டன் ஆத்திரத்துடன் கத்தியதும் கமலா நடுநடுங்கிப் போய்விட்டாள்.

"நீங்கள் சொல்லுவதொன்றும் எனக்கு விளங்கவே யில்லையே?" என்று அவள் கம்மிய குரலில் கேட்டபோது தன் கணவன் முகத்தில் பிரதிபலித்த கோபம் உச்சநிலையை அடைந்து விட்டதை உணர்ந்தாள்.

"விளங்காதுதான்! எப்படி விளங்கும்? இதைச் சொல்ல உனக்கு வெட்கமாயில்லை? ஆமாம் ...... இன்று நீ யாரைக் கேட்டுக்கொண்டு உன் பிறந்த வீட்டுக்குப் போனாய்? அங்கே போக வேண்டாமென்று எத்தனை தடவை உனக்குச் சொல்லியிருக்கிறேன்?" என்று கர்ஜித்தான் நீலகண்டன்.

சமீபகாலத்தில் தன் தந்தையின்மீது நீலகண்டனுக்கு ஏதோ காரணத்தினால் வெறுப்பு அதிகமாகி வந்திருப்பது அவளுக்குத் தெரியும். தன் தந்தையுடன் உறவாடுவதையே கௌரவக் குறைவாகக் கருதுகிறான் தன் கணவன் என்பதையும் அவள் உணர்ந்துதானிருந்தாள். காப்பியைக் கொடுத்துவிட்டு நடந்த விஷயத்தை விவரமாகக் கூறினால் அவன் ஆவேசம் தணிந்து விடும் என்று எண்ணிப் பேசாமல் சமையலறைக்குத் திரும்பிவிட்டாள் கமலா.

காப்பிக்கு அவள் தயவை எதிர்பாராமல் எழுந்து வெளியே சென்று விட்டான் நீலகண்டன். மனம்போன போக்கில் காரைச் செலுத்திக்கொண்டே வந்தவன், கடற்கரைக்கு வந்ததும் சட்டென்று நிறுத்தினான். குளிர்ந்த காற்று மேலே பட்டதும் கொதிப்பேறியிருந்த அவனது மூளையும் ஒரு நிலைக்கு வந்தது. கண்ணெதிரில் மோதிவரும் கடலலைகளைப் போலவே, அவன் உள்ளக்கடலில் பழைய சம்பவங்கள் எல்லாம் அலைமோதின.

* * *

அப்போது அவன் ஒரு மாணவன். திருவல்லிக்கேணியில் ஒரு தனியறையில் வாசம்; ஹோட்டலில் சாப்பாடு. சிறு வயதிலேயே பெற்றோர்களை இழந்துவிட்ட அவனுக்கு அண்ணன் கங்காதரன்தான் ஒரே ஆதரவு. அவன் தந்தை டெபுடி கலெக்டர் வேலையிலிருந்து ஓய்வுபெறுவதற்குப் பல வருடங்கள் முன்பே இறந்து விட்டதால், பிரமாதமான சொத்து ஒன்றும் அவர் விட்டுச் செல்லவில்லை. மூத்தவனான கங்காதரனுக்கும் படிப்புக்கும் வெகு தூரம். 'எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு மூன்று தடவைகள்தான் பணம் கட்டலாம்' என்ற விதி அவன் படிப்புக்கு அதோடு முற்றுப் புள்ளி வைத்துவிட்டது. தன் தம்பியாவது நன்றாகப் படிக்கிறானே என்பதில் அண்ணனுக்குப் பெருமை. கிராமத்திலிருந்து நிலபுலன்களைக் கவனித்துக்கொண்டு, தம்பியின் படிப்புக்குப் பண உதவி செய்து வந்தான் கங்காதரன். அண்ணன் தன் விஷயத்தில் காட்டிய சிரத்தையை நினைவிலிறுத்திக் கொண்டு, வெகு சுட்டிகையாகப் படித்து வந்தான் நீலகண்டன்.

அந்தச் சமயத்தில்தான் விதி அவன் வாழ்க்கையில் வந்து புகுந்து விளையாடத் தொடங்கியது.

ஒரு நாள் ஹோட்டலில் சாப்பிட்டு விட்டு ஈரக் கையை மேல் துண்டில் துடைத்தவாறு வாசலுக்கு வந்த நீலகண்டன், வானத்தை அண்ணாந்து பார்த்துவிட்டு ஒரு கணம் தயங்கினான். லேசான தூற்றல் விழுந்து கொண்டிருந்தது. மழை பலமாகப் பிடித்துக் கொள்ளுமுன் வீடுபோய்ச் சேர்ந்து விடுவதுதான் மேல் என்று தீர்மானித்தவனாய் நடையை எட்டிப்போட்டு வேகமாக நடக்க ஆரம்பித்தான். மனிதன் எதிர்பார்க்கிறபடி எல்லாமே நடந்து விடுகின்றனவா?

திடீரென்று மழை பலத்து விட்டது. அந்தத் தெருவையும் கடந்து, அதற்கடுத்த தெருவையும் தாண்டிவிட்டால் அப்புறம் அவன் வீடு வெகு தூரமில்லை. ஆனால் அது நடக்காத காரியம் என்று நிதர்சனமாகத் தெரிந்துவிடவே அருகிலிருந்த ஒரு மாடி வீட்டுக்கு அருகில் ஒதுங்கி நின்றுகொண்டான் அவன். சில நிமிடங்களில் மழையின் வேகம் குறையவே, அங்கிருந்து தெருவில் அடியெடுத்து வைத்தான். அவ்வளவுதான்! 'பொத்'தென்று அவன் தலையில் வந்து விழுந்தது, ஒரு வாழை இலை! சாப்பிட்டு விட்டு மாடியிலிருந்தபடியே விட்டெறியப் பட்ட எச்சில் இலை அது என்று ஊகித்தவனாய் மேலே நோக்கினான். அப்போதுதான் உள்ளிழுக்கப்பட்ட ஒரு வளைக்கரம் மாடியில் தெரிந்த மங்கலான விளக்கொளியிலும் அவனுக்குத் தெரியாமற் போகவில்லை.

ஆத்திரமும் அவமானமும் ஒரே சமயத்தில் அவனைத் தாக்கின. உடனே ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய், அந்த வீட்டுக் கதவைப் படபட வென்று இடித்தான். "யாரது?" என்று கேட்டுவிட்டுக் கதவைத் திறந்தார், சுமார் ஐம்பது வயது மதிக்கத் தக்க ஒருவர்.

"நீங்கள் தானே இந்த வீட்டிலிருப்பது?" என்றான் நீலகண்டன்.

"ஆமாம்; என்ன விசேஷம்? நீங்கள் யார்?" என்றார் பெரியவர்.

"மேலே, மாடியிலிருப்பவர்களும் உங்களைச் சேர்ந்தவர்கள்தானே? அல்லது வேறு குடித்தனக்காரர்களா?" என்றான் அவன்.

"இங்கே எங்களைத் தவிர குடித்தனம் வேறு யாருமில்லையே! யாரைப் பார்க்க வேண்டும், உங்களுக்கு?" என்ற பெரியவரின் கேள்வி நீலகண்டனுக்கு மேலும் எரிச்சலைக் கிளப்பியது.

"உங்களைத்தான் பார்க்க வேண்டும்! ஆமாம்; எச்சில் இலைகளைப் போடத்தான் வீட்டுக்கு வீடு கார்ப்பரேஷன் தொட்டிகள் இருக்கின்றனவே? தெருவில் நடமாடுகிறவர்கள் தலைமீது ஏன் போடவேண்டும்?" என்று கர்ஜித்தான் அவன்.

"யார் அப்பா, அங்கே? இருட்டில் யாரோடு பேசிக்கொண்டு நிற்கிறீர்கள்?" என்று கேட்டவாறு வாசல் விளக்கைப் போட்டாள் ஒரு யுவதி. அந்த வெண்கலத்வனி அவனைப் பரவசமாக்கியது. மறு கணம் விளக்கொளியில் தன் அலங்கோலமான தோற்றத்தைப் பார்த்துக் கொண்டதும், அவனுக்கே அருவருப்பாக இருந்தது. அங்கே நிற்கக்கூடப் பிடிக்கவில்லை. திரும்பிப் போய் விடலாமா, என்று அவன் யோசித்தபோது பெரியவர் கூறினார்:

"ஸார்! என் பெண் செய்த காரியம் தான் இது. தயவுசெய்து மன்னித்துவிட்டு உள்ளே வாருங்கள். வெந்நீர் போடச் சொல்லுகிறேன். ஸ்நானம் செய்துவிட்டுப் போகலாம்."

நீலகண்டனுக்கு அந்த அழைப்பை மறுக்க முடியவில்லை. தன் அறைக்கு அப்படியே போவதும் சாத்தியமில்லை. அந்தக் குளிரில் வெந்நீர் இல்லாமல் குளிப்பதும் நடக்காத காரியம். இதை விட்டால் வேறு எங்கே வெந்நீர் கிடைக்கும்? பேசாமல் கிழவரைப் பின் தொடர்ந்து உள்ளே நுழைந்தான் நீலகண்டன்.



"பார்த்தாயா, அம்மா! நீ செய்த அழகான காரியத்தை? ஒரு பெண்ணுக்கு அடக்க ஒடுக்கம்

வேண்டாமோ? இப்போதே இப்படி யிருந்தால், நாளைக்கு..." அவர் தன்பொருட்டு அந்தப் பெண்ணைக் கடிந்து கொள்ளுவது அவனுக்கு மனதை என்னவோ செய்தது.

"பரவாயில்லை, ஸார்! நான் கும்பிருட்டில் ஜன்னலருகே நின்று கொண்டிருப்பது, மேலே யிருந்து பார்ப்பவர்களுக்குத் தெரியாது. ஓரளவுக்குத் தவறு என்னுடையதும் தான்" என்று அவன் கூறிவிட்டு அந்தப் பெண்ணின்மீது கண்களை ஓட்டினான். அப்போதுதான் தன்னையே அவள் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்பது தெரிய வந்தது.

இப்படி விசித்திரமான முறையில் அந்தக் குடும்பத்துடன் ஆரம்பமான தொடர்பு நாளடைவில் நீலகண்டனுக்கும் அந்த யுவதிக்கு மிடையே காதலாகப் பரிணமித்தது.

* * *

கோடை விடுமுறைக்குக் கிராமத்துக்குச் சென்றான் நீலகண்டன்.

அங்கே அவன் கல்யாண சம்பந்தமான பேச்சு அடிபடத் தொடங்கியது. அப்போது நீலகண்டன் தன் அபிப்பிராயத்தைச் சந்தேகத்துக் கிடமின்றி வெளியிட்டு விட்டான். இதைக் கேட்ட அவனுடைய அண்ணா கங்காதரன் ரௌத்ராகாரமானான். ஆனாலும் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ள முடியவில்லை.

"கெட்டுப் பிறந்தவன் இவன்! காதலாம், கல்யாணமாம்! பார்த்தாயோ இல்லையோ?" என்று தன் மனைவியைப் பார்த்துக் கேலியாகச் சொன்னான் கங்காதரன்.

"நீ என்னவோ கேலி செய்கிறாய், என் மனது இந்த விஷயத்தில் ஒரு முடிவுக்கு வந்துவிட்டது" என்றான் நீலகண்டன்.

இதைக் கேட்ட கங்காதரனின் மனைவி, "அவர் என்ன, பச்சைக் குழந்தையா? கல்யாணம் அவர் சொந்த விஷயம்தானே? அவர் இஷ்டப்படிதான் நடக்கட்டுமே" என்று மைத்துனனுக்குப் பரிந்து பேசவே கங்காதரன் ஒருவிதமாகச் சம்மதிக்கும் நிலைமைக்கு வந்தான்.

"அதிருக்கட்டும்; பெண்ணின் தந்தை யார்? என்ன உத்தியோகம்? அதெல்லாம் ஒன்றுமே சொல்லவில்லையே, நீ?" என்று அண்ணன் கேட்ட கேள்விகள் நீலகண்டனுக்கு உற்சாகத்தை யளித்தன.

"காளிதாஸ் கபே என்று கேள்விப்பட்டிருப்பாயே? பட்டணத்திலே மிகவும் பிரபலமான அந்த ஹோட்டலின் சொந்தக்காரரான கிருஷ்ணய்யரின் பெண்ணைப் பற்றித்தான் உன்னிடம் இவ்வளவு நேரம் நான் பேசியதெல்லாம்" என்று தம்பி கூறியதும் கங்காதரன் துள்ளியெழுந்தான்.

"என்ன? ஹோட்டல்காரரின் மகளா? உனக்கு மூளை சரியாகத்தான் இருக்கிறதா அல்லது ஏதாவது கோளாறுதானா? டெபுடி கலெக்டரின் பிள்ளை ஒரு ஹோட்டல்காரரின் மகளை மணந்து கொண்டால் ரொம்ப ஜோராயிருக்கும்! வெட்கமில்லையே, உனக்கு?" என்று சீறினான் அவன்.

"இதில் வெட்கப்பட என்ன அண்ணா இருக்கிறது? அந்தப் பெண்ணைப் பார்த்திருந்தால் நீ இப்படிப் பேசமாட்டாய். சாட்சாத் லட்சுமிதேவி போலிருக்கிறாள். ஏராளமான சொத்துக்கு அவள் ஒரே வாரிசு" என்று மேலும் கூறித் தன் கட்சியிலிருக்கும் நியாயத்தை வெளிப்படுத்தினான் நீலகண்டன்.

"அவர் பணத்தைக் கொண்டுபோய் உடைப்பில் போடு!" என்றான் அண்ணன் அருவருப்பு நிறைந்த குரலில்.

"உடைப்பில் ஏன் போடவேண்டும்? என் படிப்பில் போட்டால் ஆயிற்று. என்னை வைத்தியக் கல்லூரியில் சேர்த்து, என் படிப்புக்கான செலவு முழுவதையும் தாமே ஏற்றுக் கொள்ளுவதாகச் சொல்லுகிறார், அவர். ஹோட்டல் மூலம் சம்பாதித்த பணமானால் என்ன? காய் விற்ற காசு குரைக்காது, அண்ணா! தெரிந்து கொள். நான் அவளைத்தான்..."

அவனை மேலே பேசவிடாமல் குறுக்கிட்டுக் கத்தினான், மூத்தவன். "உன்னிடம் இதைத் தெரிந்து கொள்ளுவதற்கு உனக்கு நாலு வருஷங்கள் பின்னால் பிறந்திருக்க வேண்டும் நான். இதோ பார்! அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு நம் குடும்பத்தின் கௌரவத்தைக் குலைப்பதுதான் உன் தீர்மானம் என்றால், நம் உறவு இன்றோடு தீர்ந்தது!" என்று சொல்லி விட்டு அவன் தம்பியின் பதிலைக் கூட எதிர்பாராமல் எழுந்து வெளியே சென்று விட்டான்.

அதே வருஷம் அண்ணன் வராமலே கமலா-நீலகண்டன் விவாகம் இனிது நடந்தேறியது. அப்போது அவன் வெறும் நீலகண்டன்! இப்போது......? டாக்டர் நீலகண்டன் என்றால் யமனுக்கே யமன் என்று பொது மக்கள் ஒரு முகமாக அவனைக் கொண்டாடினர். மாமனார் பணத்தில் அவன் கட்டிய "கமலா நர்ஸிங் ஹோம்" மிகவும் பிரசித்தி யடைந்திருந்தது.

மேல் வானத்திலிருந்து அமுதைப் பொழிந்து கொண்டிருந்த வெண்மதியின் தன்மை, நீலகண்டனின் சிந்தனையோட்டத்திற்கு மேலும் தெளிவை ஊட்டியது. "இவ்வளவும் யாரால்?—" இதே கேள்வியைத் தனக்குத்தானே பன்முறை கேட்டுக் கொண்டதும், அவன் உள்ளத்தில் படிந்திருந்த களங்கம் அவனை விட்டு அகன்று, வான வீதியில் சஞ்சரித்துக் கொண்டிருந்த சந்திரனிடம் போய் அடைக்கலம் புகுந்தது.

நிறைந்த உள்ளத் தெளிவுடன் வீடு திரும்பிய நீலகண்டன், தன் மனைவி படுக்கைகூடப் போட்டுக் கொள்ளாது, வெறுந் தரையில் படுத்துறங்குவதைக் கண்டு துணுக்குற்றான். அவளை அநாவசியமாகக் கடிந்து கொண்டு விட்டதைக் குறித்து மனம் புழுங்கினான். அவளருகில் பிரித்தபடி கிடந்த ஒரு கடிதம் அவன் கவனத்தைக் கவர்ந்தது. ஓசைப்படாமல் அதை எடுத்துப் படிக்கலானான் :

" அருமைத் தம்பி நீலகண்டனுக்கு.

பல வருஷங்களுக்குப் பிறகு உனக்கு இந்தக் கடிதம் எழுதுவது எனக்கே அவமானமாயிருந்தாலும், வேறு வழியில்லாததால் இதைச் செய்ய நேர்ந்து விட்டது.

நம் கிராமத்தின் மேலண்டைக் கோடியில் இடிந்து கிடந்த விஷ்ணு ஆலயத்தைக் கட்டிப் புதுப்பித்துக் கும்பாபிஷேகமும் செய்வதற்காகக் கிராமத்து ஜனங்கள் பத்தாயிரம் ரூபாய் வரை வசூலித்திருந்தனர். அதற்கு என்னையே பொக்கிஷதாரராக நியமித்தனர்.

திருப்பணி வேலை ஆரம்பமாவதற்கு முதல் நாள் பாங்கியிலிருந்து இரண்டாயிரம் ரூபாய் சில்லறையாக வாங்கி வந்து வீட்டில் வைத்திருந்தேன். என் போதாத காலம், உளவறிந்தவன் எவனோ வீட்டில் புகுந்து அதை அடித்துக் கொண்டு போய் விட்டான். பணம் களவு போய் விட்டதாக நான் சொன்னதை ஊர்க்காரர்கள் சந்தேகத்துடன் நானே அதைக் கையாண்டு விட்டேன் என்று நினைக்கிறார்கள். ஒரு வாரத்துக்குள் அந்தத் தொகையைக் கொடுத்து ஈடு செய்யாவிட்டால், என்பேரில் வழக்குத் தொடருவார்கள் போலிருக்கிறது. பாங்கியிலிருந்து நான் பணம் வாங்கியதற்கு ருசு இருக்கிறது. களவு போனதற்கு ருசு எது? நீ எப்படியாவது உடனே இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து உதவாவிட்டால் எனக்குச் சிறைவாசம்தான்!

அண்ணா கங்காதரன்."

அதைப் படித்து முடித்ததும் நீலகண்டன் நீண்ட பெருமூச்செறிந்து விட்டான். அவன் கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பொழிந்தது. அவன் மனத்தை சம்பம் போட்டு அழுத்தது, அந்தக் கடிதம். அப்போது திடீரென்று விழித்துக் கொண்ட கமலா, கடிதமும் கையுமாய் அவன் எதிரில் நிற்பதைக் கண்டதும் பயத்துடன் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள்.

" இதற்காக அப்பாவிடம் பணம் கேட்கத்தான் மத்தியானம் அங்கே போனேன். உங்களிடம் ரொக்கமாக இப்போது இரண்டாயிரம் ரூபாய் இல்லை என்பது எனக்குத் தெரியும். அப்படியே இருந்தாலும் கூட, நீங்கள் அவருக்கு உதவி செய்வீர்களோ, என்னவோ எனக்குச் சந்தேகம். நம் கலியாணம் ஆனது முதலே நீங்கள் அண்ணாவிடம் பேசுவது கூட இல்லையே? நல்ல காலம், அப்பாவிடம் பணம் 'ரெடி'யாக இருந்தது; அனுப்பிவிட்டார். என்ன இருந்தாலும், உங்கள் அண்ணாவின் கௌரவம் உங்கள் கௌரவமில்லையா?" என்று சொல்லித் தன் கண்களைத் திரையிட்ட நீரைத் துடைத்துக் கொண்டாள் கமலா.

அவளை அன்புடன் அணைத்த நீலகண்டன், "கமலா! நான்தான் தவறு செய்து விட்டேன். அண்ணா செய்த அதே தவறைத்தான். போன மாதம் எங்கள் சங்கத்தில் ஒரு டீ பார்ட்டி நடந்தது தெரியுமல்லவா? அதற்குக் 'காளிதாஸ் கபே'யிலிருந்து சிற்றுண்டிகள் வந்திருந்தன. அங்கே சிலர் பேசிக் கொண்டனர்: 'நீலகண்டன் மாமனார் தாண்டா சப்ளை!' என்று. நண்பர்களும் இப்படிப் பேசிக் கொண்டனர். எனக்கு அது என்னவோ போலிருந்தது. அதனால்தான் என் உள்ளத்தில் அப்போது ஒரு களங்கம் ஏற்பட்டது. அண்ணனைப் போலவே நானும் போலிக் கௌரவத்துக்கு அடிமையாகி விட்டேன். ஆனால் அது எவ்வளவு மகத்தான தவறு என்பதை உன் மேலான குணம் இப்போது நிரூபித்து விட்டது. 'காய் விற்ற காசு!' என்று இளப்பமாகப் பேசினேனே, கங்காதரன்— அதுதானே இப்போது அவன் மானத்தைக் காப்பாற்றியிருக்கிறது? அதே பணத்தினால் முன்னுக்கு வந்த நானே அதைச் சற்று அலட்சியமாக மதித்தேனே. சமய காலத்தில்—அதுதான் என் மனத்தை வாட்டுகிறது, கமலா!" என்று சொல்லி முடித்த போது, பெரிய சஸ்திர சிகிச்சைகளைச் செய்யும்போது கூடக் கலங்காத டாக்டர் நீலகண்டனின் கண்களில் நீர் மல்கியது.







இருமல்களுக்கு
ஸிரோலின்
உட்கொள்ளுங்கள்!
SIROLIN
ஒரு 'ரோச்'
தயாரிப்பு




# லிப்டன்ஸ்

## என்றால்

# சிறந்த டீ

# டயபெப்ஸின்




ஆகாரம் சரிவர ஜீரணமாக டயஸ்டாஸ், பெப்ஸின் என்னும் இருவகைப் பொருள்கள் அத்யாவசியமானவை. இவைகள் இரண்டும் உயர்ந்த ரசாயன முறையில் சேர்ந்ததுதான் டயபெப்ஸின். ஆகாரத்துக்குப் பின் ஒரு டீஸ்பூன் டயபெப்ஸின் உட்கொண்டால் ஜீரணச் செயல் தக்ஷணமே ஆரம்பித்து, பாக்கி ஜீரண வேலை வயிற்றுக்கு மிக எளிதாகிறது. உங்கள் ஆகாரத்தின் முழுப் போஷணையும் அடைய இதுவே சிறந்த மார்க்கம்.

**யூனியன் டிரக், கல்கத்தா**

ஏஜண்டுகள்: அப்பா அண்டு கோ., மதராஸ்
மற்றும் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**UNION DRUG. CALCUTTA**

---

பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

**5,00,000 நூற்கும் கதிர்கள் நம்பர் 80 வரை நூல்கள்**

**எங்களுடைய விசேஷமான நூல்கள்:** ஒத்தை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

**நாங்கள் சப்ளை செய்வது:** கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கன் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங். கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள். எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

மானேஜர்கள்: ஏ. & எப். ஹார்வி லிமிடெட்

REGD. No. M. 4892